# புலம்பெயர்ந்தோர் படைப்புகளில் செவ்வியல் இலக்கியங்களின் தாக்கம்


பதிப்பாசிரியர்

கோ. விசயராகவன், கு. சிதம்பரம்

தி. சிவகாமி, அ. கவிதாராணி

மூ. தமிழரசி, ஆ. பாப்பா





உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# புலம்பெயர்ந்தோர் படைப்புகளில் செவ்வியல் இலக்கியங்களின் தாக்கம்

பதிப்பாசிரியர்

கோ.விசயராகவன், கு.சிதம்பரம்
தி.சிவகாமி, அ.கவிதாராணி
மூ.தமிழரசி, ஆ.பாப்பா

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாம் முதன்மைச் சாலை, மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்
தரமணி, சென்னை – 600 113

# நூல்விவரக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூல் தலைப்பு | : | புலம்பெயர்ந்தோர் படைப்புகளில் செவ்வியல் இலக்கியங்களின் தாக்கம் |
| பதிப்பாசிரியர் | : | முனைவர் கோ. விசயராகவன், முனைவர் கு. சிதம்பரம், முனைவர் தி. சிவகாமி, முனைவர் அ. கவிதாராணி, முனைவர் மூ. தமிழரசி, முனைவர் ஆ. பாப்பா |
| வெளியீட்டாளரும் பதிப்பு உரிமையும் | : | உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>இரண்டாம் முதன்மைச் சாலை<br>மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்<br>தரமணி, சென்னை 600 113<br>தொலைபேசி எண் 044/22542992 |
| வெளியீட்டு எண் | : | 758 |
| தரக்குறியீட்டு எண் | : | ISBN (1978–81–925359–6–8) |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதற்பதிப்பு |
| பதிப்பு ஆண்டு | : | 2014 |
| பயன்படுத்திய தாள் | : | 18.6 கிகி டி.என்.பி.எல் வெள்ளை மேப்லித்தோ |
| நூலின் அளவு | : | 1/8 டெம்மி |
| எழுத்தின் அளவு | : | 10 புள்ளி |
| பக்க எண்ணிக்கை | : | 14 + 210 |
| அச்சுப்படிகள் | : | 1200 |
| விலை | : | ரூ.100/– (ரூபாய் நூறு மட்டும்) |
| அச்சகம் | : | ஸ்ரீசரவணா அச்சகம்<br>144, தம்புத் தெரு<br>சென்னை 600 001 |
| பாடம் | : | அயலகத் தமிழ் இலக்கியம் |

**முனைவர் கோ. விசயராகவன்** எம்.ஏ., எம்.ஃபில், பி.எட்., பிஎச்.டி.
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை 600113

## அணிந்துரை

தமிழ் இனம் செவ்வியல் காலம் முதல் பல்வேறு காரணங்களுக்காக அயல் மண்ணிற்குப் புலம்பெயர்ந்து சென்றுள்ளது. செவ்வியல் காலத்தில் தமிழ் மன்னர்களின் ஆட்சி தென்கிழக்கு ஆசிய நாடுகளில் முழுவதும் பரவி இருந்துள்ளதைப் பல்வேறு தொல்லியல், பண்பாட்டியல் மற்றும் சமூகவியல் ஆய்வுகள் மூலம் இன்று அறியமுடிகின்றது.

ஆங்கிலேயர்கள் ஆட்சிக் காலத்தில் தமிழகத்திலிருந்து தமிழ் மக்களைத் தேயிலைத் தோட்டத் தொழிலாளர்களாகவும் கரும்புத்தோட்டத் தொழிலாளர்களாகவும் இரப்பர்த் தோட்டத் தொழிலாளர்களாகவும் மொரீசியசு, தென் ஆப்பிரிக்கா, மலேசியா, மியான்மார், இந்தோனேசியா போன்ற நாடுகளுக்கு ஆங்கிலேயர்கள் கொண்டு சென்றுள்ளனர்.

இருபத்தொன்றாம் நூற்றண்டில் அதாவது இன்றைய புலம்பெயர்வு தொழில்நிமித்தமாக ஒருபக்கம் நடந்தாலும், இலங்கையில் ஏற்பட்ட இனக்கலவரத்தின் காரணமாக மிக அதிக அளவில் தமிழினம் வரலாறு காணாத அளவு புலம்பெயர்வினைச் சந்தித்துள்ளது. இப்புலம்பெயர்வினை யூத இனப் புலம்பெயர்வோடு ஒப்பிடலாம். அவ்வாறு புலம்பெயர்ந்த தமிழர்கள் இன்று ஆசியா, ஆஸ்திரேலியா, ஐரோப்பிய, அமெரிக்க நாடுகள் முழுவதும் பரவி வாழ்ந்து வருகின்றனர்.

அவ்வாறு புலம்பெயர்ந்த தமிழர்கள் இன்று புலம்பெயர் இலக்கியம் எனும் புதிய இலக்கிய வகைமையினை உருவாக்கி வருகின்றனர். அவ்வகையில் **புலம்பெயர்ந்தோர் படைப்புகளில் செவ்வியல் இலக்கியத்தின் தாக்கம்** எனும் தலைப்பில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்துடன் இணைந்து பன்னாட்டுக் கருத்தரங்கம் நடத்த ஏற்பாடு செய்த மதுரை டோக் பெருமாட்டி கல்லூரியின் பேராசிரியர்களுக்கும் அக்கல்லூரியின் முதல்வருக்கும் வாழ்த்தினையும் பாராட்டுதலையும் தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளேன்.

இந்த அரிய நூலின் பதிப்புப் பணியினை ஒழுங்கமைவு செய்த அயல்நாட்டுத் தமிழர்புலத்தின் உதவிப்பேராசிரியர் மற்றும் உலகத் தமிழர் பண்பாட்டு வரவேற்பு (ம) தகவல் மையத்தின் பொறுப்பாளர் முனைவர் கு. சிதம்பரம் அவர்களுக்குப் பாராட்டுதலைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் புரட்சித் தலைவி அம்மா அவர்கள் தமிழ் மீதும், தமிழர் மீதும், தமிழ்ப் பண்பாட்டின் மீதும் கொண்டுள்ள அன்பும் கருணையும் அளப்பரியன. தமிழின் மேம்பாட்டுக்கெனப் பல திட்டங்களை மேற்கொண்டு செயலாற்றி வருகின்றார்கள். ஒல்லும்வகையெல்லாம் தமிழ் வளர்த்துவரும் மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் புரட்சித் தலைவி அம்மா அவர்களுக்கு உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் சார்பில் நன்றிகளைப் பதிவு செய்கின்றோம்.

தமிழ் வளர்ச்சிக்கும் இந்நிறுவன வளர்ச்சிக்கும் ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தம் தனிப்பட்ட அக்கறையைக் காட்டிவரும் பள்ளிக்கல்வி, தமிழ் வளர்ச்சி மற்றும் தமிழ்ப் பண்பாட்டுத் துறை அமைச்சரும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தலைவருமாகிய மாண்புமிகு கே.சி. வீரமணி அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சியில் எங்களை வழிநடத்திவரும் தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித்துறை அரசுச் செயலாளர் முனைவர் மூ. இராசாராம் இ.ஆ.ப. அவர்களுக்கும் எம் இனிய நன்றிகளை உரித்தாக்கிக் கொள்கிறோம். இந்நூலைப் பிழை திருத்திப் பதிப்பிக்க உதவிய முனைவர் ஆ. தசரதன் அவர்களுக்கும், இதைக் கணினியில் வடிவமைத்த திருமதி எ.ம. லட்சுமிக்கும், அழகுற அச்சிட்டுத் தந்த ஸ்ரீசரவணா அச்சகத்தாருக்கும் என் பாராட்டுகள்.

இயக்குநர்

முனைவர் ஆ.மெர்சி புஷ்பலதா
முதல்வர்
டோக் பெருமாட்டி கல்லூரி
மதுரை

## வாழ்த்துரை

எம் கல்லூரித் தமிழ்த்துறை 2013 திசம்பர்த் திங்கள் 9, 10 11 ஆம் நாள்களில் சென்னை, செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனம் மற்றும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் ஆகியவற்றுடன் இணைந்து பன்னாட்டுக் கருத்தரங்கம் ஒன்றை நடத்தி அக்கருத்தரங்கின் கருத்துப் பதிவுகளை நூல் வடிவாக்கம் செய்திருக்கிறது. தமிழ்த்துறை முதன்முறையாக பன்னாட்டு அளவில் கருத்தரங்கை நடத்தியிருப்பதுடன் நூல் வடிவம் செய்திருப்பது பாராட்டுதற்குரியது.

**புலம்பெயர்ந்தோர் படைப்புகளில் செவ்வியல் இலக்கியங்களின் தாக்கம்** என்கிற இந்நூல் தமிழ் இலக்கிய உலகில் புதியதொரு ஆய்வுப்பாதைக்கு வழிவகுத்திருக்கிறது. இந்நூல் புலம்பெயர்ந்து சென்றோர் இன்றளவும் தமிழ் மரபுகளையும் பண்பாட்டுக் கூறுகளையும் மாறாமல் பின்பற்றி வருகின்றனர் என்பதை அவர்களது படைப்புகள்வழி எடுத்துச்சொல்கின்றது. உலகம் முழுமையும் பரந்து கிடக்கும் தமிழ் இலக்கியங்களின் வேர்களை மீட்டுருவாக்கம் செய்யும் முதல் முயற்சியாக இந்நூல் அமைந்திருக்கிறது.

பன்னாட்டுக் கருத்தரங்கம் நடத்துவது என்பது கல்லூரிக்கே சவாலான ஒன்று. ஆனால் தமிழ்த்துறையினர் தாம் தனியொரு துறையாக நின்று இத்துணை பிரம்மாண்டமான கருத்தரங்கினை நிகழ்த்தியதற்கும் நூல் வடிவாக்கம் செய்ததற்கும் எனது மனம் நிறைந்த வாழ்த்துகள். இப்படியான கருத்தரங்குகள் எம் தமிழ்த்துறை மாணவியர்தம் ஆளுமைத்திறனை வளர்த்துக் கொள்ள மிகவும் உதவியாக இருக்கும்.

இத்துறை மேலும் இதுபோன்ற கருத்தரங்குகள் நடத்தவும் நூல்களை வெளியிடவும் இறைவனை வேண்டி வாழ்த்துகிறேன்.

**முதல்வர்**

# பதிப்புரை

டோக் பெருமாட்டி கல்லூரி, செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனத்தின் நிதி நல்கையுடன் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்துடன் இணைந்து புலம்பெயர்ந்தோர் படைப்புகளில் **செவ்வியல் இலக்கியங்களின் தாக்கம்** எனும் பொருண்மையில் **2013** திசம்பர்த் திங்களில் மதுரையில் நடத்தியப் பன்னாட்டுக் கருத்தரங்கத்தில் புலம்பெயர்ந்த தமிழர்களால் உலக அளவில் படைக்கப்பட்டு வரும் தமிழ்ப் படைப்பிலக்கியங்களில் குறிப்பாக மலேசியத் தமிழ் இலக்கியம், சிங்கப்பூர்த் தமிழ் இலக்கியம், ஆஸ்த்ரேலியத் தமிழ் இலக்கியம், அமெரிக்கத் தமிழ் இலக்கியம், இலங்கை மலையகத் தமிழ் இலக்கியம் ஆகியவற்றில் தமிழ்ச் செவ்வியல் பண்புகள், புலம்பெயர்த் தமிழ் இலக்கியங்களில் ஏற்படுத்தும் தாக்கம் குறித்து விரிவாக விவாதிக்கப்பட்டது.

அயல்நாடுகளில் புலம்பெயர்ந்து வாழும் தமிழர்கள் அயல்மண்ணில் தமிழ்ப் பண்பாட்டையும் மொழியினையும் பெரும்பான்மை மொழிக்கு ஆட்பட்டு இழந்து வரும் சூழலில், புலம்பெயர்ந்த தமிழ் இலக்கியங்கள் எனும் புதிய தமிழ் இலக்கிய வகைமையும் அயல்மண்ணில் படைக்கப்பட்டு வருகின்றது. அதாவது தாய்மண்ணைவிட்டுப் பிரிந்தாலும் தமது நாடு, மொழி, பண்பாடு குறித்த சிந்தனையும் உணர்வும் எப்போதும் அவர்களுக்குள் நிறைந்திருப்பதால் அவ்வுணர்வு அவர்களால் படைப்பாக்கம் பெறுகின்றது. இத்தகையப் படைப்புகள் ஆய்வாளர்களாலும் திறனாய்வாளர்களாலும் மிகுந்த கவனம் செலுத்தப்படுகின்றது. குறிப்பாக உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் அயல்நாட்டுத் தமிழர் புலம் – உலகத் தமிழர் பண்பாட்டு வரவேற்பு மற்றும் தகவல் மையம் இவ் வகையான ஆய்வுகளை உலகளவில் ஒருங்கிணைத்து வருகின்றது என்பதை கூறுவதில் மகிழ்ச்சி அடைகின்றோம்.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் அயல்நாட்டுத் தமிழர் புலம் 1999ஆம் ஆண்டு **அயலகத் தமிழ்க் கலை இலக்கியம் சமகால செல்நெறிகள்** எனும் பொருண்மையில் அயலகத் தமிழ் இலக்கியம் குறித்தான முதல் பன்னாட்டுக் கருத்தரங்கினையும் அதனைத் தொடர்ந்து **அயல்நாட்டுத் தமிழ் இலக்கியங்கள்** எனும் பொருண்மையில் 2013 ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்களில் இரண்டாவது பன்னாட்டுக் கருத்தரங்கினையும் நடத்தியது. 2013 திசம்பர் திங்கள் மதுரை, டோக் பெருமாட்டி கல்லூரியுடன் இணைந்து **புலம்பெயர்ந்தோர் படைப்புகளில் செவ்வியல் இலக்கியங்களின் தாக்கம்** எனும் பொருண்மையில் மூன்றாவது பன்னாட்டுக் கருத்தரங்கினையும், 2014 பிப்ரவரித் திங்களில் **உலக அளவில் தமிழ்த் தொடரியல் கோட்பாடுகளின் வளர்ச்சி – தொல்காப்பியத்தை முன்வைத்து** எனும் பொருண்மையில் நான்காவது கருத்தரங்கினையும், 2014 மேத் திங்களில் சிங்கப்பூர்த் தமிழ் இலக்கியக் களத்துடன் இணைந்து **புலம்பெயர்ந்த தமிழர் வரலாறும் வாழ்வியலும்** எனும் பொருண்மையில் ஐந்தாவதுப் பன்னாட்டு கருத்தரங்கினையும் நடத்தி உலகத் தமிழர்களின் கவனத்தை ஈர்த்துள்ளது உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்.

மேலும், 2013 ஆம் ஆண்டு ஆகஸ்டு திங்களில் இலண்டன், உலகத் தமிழியல் ஆய்வு நடுவம் நடத்திய **உலகத் தமிழியல் ஆய்வு மாநாட்டின் ஆய்வடங்கல்** இரு தொகுதிகளாக அயல்நாட்டுத் தமிழர்புலம் – உலகத் தமிழர் பண்பாட்டு (ம) வரவேற்பு மையத்தின் சார்பில் அச்சிட்டுத் தரப்பட்டுள்ளது.

மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் புரட்சித் தலைவி **அம்மா அவர்கள்** தமிழ் மீதும், தமிழர் மீதும், தமிழ்ப் பண்பாட்டின் மீதும் கொண்டுள்ள அன்பும் கருணையும் அளப்பரியன. தமிழின் மேம்பாட்டுக்கெனப் பல திட்டங்களை மேற்கொண்டு செயலாற்றி வருகின்றார்கள். ஒல்லும்வகையெல்லாம் தமிழ் வளர்த்துவரும் **மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் புரட்சித் தலைவி அம்மா** அவர்களுக்கு உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் சார்பில் நன்றிகளைப் பதிவு செய்கின்றோம்.

தமிழ் வளர்ச்சிக்கும் இந்நிறுவன வளர்ச்சிக்கும் ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தம் தனிப்பட்ட அக்கறையைக் காட்டிவரும் பள்ளிக்கல்வி, தமிழ் வளர்ச்சி மற்றும் தமிழ்ப் பண்பாட்டுத் துறை அமைச்சரும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தலைவருமாகிய மாண்புமிகு கே.சி. வீரமணி அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சியில் எங்களை வழிநடத்திவரும் தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித்துறை அரசுச் செயலாளர் முனைவர் மூ. இராசாராம் இ.ஆ.ப. அவர்களுக்கும் எம் இனிய நன்றிகளை உரித்தாக்கிக் கொள்கிறோம். இந்த அரிய நூலைப் பிழைத் திருத்திப் பதிப்பிக்க உதவிய முனைவர் ஆ. தசரதன் அவர்களுக்கும், இதைக் கணினியில் வடிவமைத்த திருமதி எ.ம. லட்சுமிக்கும், அழகுற அச்சிட்டுத் தந்த ஸ்ரீசரவணா அச்சகத்தாருக்கும் எமது பாராட்டுகள்.

கோ. விசயராகவன், கு. சிதம்பரம்
தி. சிவகாமி, அ. கவிதாராணி
மூ. தமிழரசி, ஆ. பாப்பா

# பொருளடக்கம்

# சிங்கப்பூர்ப் படைப்பாளர்களின் சிறுகதைகளில் செவ்வியல் இலக்கியத்தின் தாக்கம்

**முனைவர் இரா.வேல்முருகன்**
முதுநிலை விரிவுரையாளர்
ஆசிய மொழிகள் மற்றும் பண்பாட்டுத் துறை
தேசியக் கல்விக்கழகம்
நன்யாங் தொழில்நுட்பப் பல்கலைக்கழகம்
சிங்கப்பூர்.

புலம்பெயர்ந்த தமிழர் தமிழ்மொழிக்கும் இலக்கியத்திற்கும் ஆற்றிவரும் தொண்டு அளப்பரியது. 'மக்கள் தம் வாழ்வில் கண்டவை, கண்டு அனுபவித்தவை, அனுபவங்கள் பற்றிச் சிந்தித்தவை அனைத்துமே இலக்கியமாக மலர்ந்து நிற்கும்' என்கிறார் மேனாட்டறிஞர் ஹட்சன். இக்கூற்றினை மெய்ப்பிக்கும் வகையில் ஆயிரமாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே வாழ்வாங்கு வாழ்ந்து கல்வெட்டுகளிலும், சுவடிகளிலும், செப்பேடுகளிலும் தமிழ் மக்களின் வாழ்வுதனைத் தடம்பதித்ததோடு தமக்கென்று ஓர் தனியிடத்தைப் பிடித்தவர்கள் நம் தமிழர்கள்.

தலைச்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம் என்று ஆன்றவிந்த சான்றோர்கள் சங்கங்கள் வைத்துச் செந்தமிழ் மொழியைப் பேணிக்காத்து வந்தனர். இன்னும் எத்தனை ஆயிரம் ஆண்டுகள் வாழ்ந்தாலும், உலகமெல்லாம் தமிழர்கள் இலக்கியங்கள் படைத்தாலும் சங்ககாலம் மட்டுமே பொற்காலம் என்பதுதான் ஒவ்வொரு தமிழனின் நாவிலும் உச்சரிக்கப்படும் தாரக மந்திரம். ஆம்! இடைச்சங்க காலத்தில் கிடைத்த தொல்காப்பியமும் கடைச்சங்க காலத்தில் கிடைத்த மேற்கணக்கு, கீழ்க்கணக்கு நூல்களும், காலப்போக்கில் கிடைத்த காப்பியங்களும் பிற நூல்களும் நம் முன்னோர்கள் நமக்கு விட்டுச் சென்ற அழியாப் பொக்கிஷங்கள்.

காதலையும் வீரத்தையும் பாடியதோடு வாழ்வின் நெறிமுறைகளை இலக்கியங்களின்வழி தடம்பதித்துச் சென்றவர்கள். அவர்களது அற்புதப் படைப்புகள் ஒவ்வொரு தமிழனின் இரத்த நாளங்களிலும் இரண்டறக் கலந்துவிட்டன என்றால் மிகையில்லை. அந்த வகையில் எங்கள் சிங்கைத் திருநாட்டின் படைப்பாளர்கள் படைக்கும் படைப்புகளான கவிதை,

சிறுகதை, நாவல், நாடகம் எனும் அனைத்து இலக்கிய வகைகளிலும் அங்கொன்றும் இங்கொன்றுமாகத் தெரிந்தும் தெரியாமலும் செவ்வியல் இலக்கியத்தின் தாக்கம் அமைந்துள்ளது மறுக்க முடியாத உண்மை.

**செவ்வியல் இலக்கியத்தாக்கம் ஏற்படுவதற்கான காரணங்கள்:**

1. படைப்பாளர்களின் படைப்பு தனித்துவம் மிக்கதாக, பிற படைப்புகளிலிருந்து வேறுபட்டு நிற்க வேண்டும் என்பதற்காகவே செவ்வியல் இலக்கியங்களை உற்று நோக்கி, ஒப்பீடு செய்து அதிலுள்ள செறிவான கருத்துகளைத் தம் படைப்புகளில் இழையோடச் செய்தல்.

2. எந்த ஓர் இலக்கியம், மக்களால் போற்றிப் பாதுகாத்து வளர்க்கப்படுகிறதோ அந்த இலக்கியத்தைப் போன்று மற்றொரு இலக்கியம் படைப்பதில் படைப்பாளர்களுக்கு அலாதிப் பிரியம் தானாகவே வந்துவிடுதல்.

3. படைப்பாளர்களின் சிந்தனையும் செவ்வியல் இலக்கியக் கர்த்தாக்களின் சிந்தனையும் ஒரே விதமாக இருப்பின் முந்தைய படைப்பின் தாக்கம் என்பது தவிர்க்க முடியாததாக அமைதல்.

4. மொழியியலில் 'மொழிப் பொதுமை' என்பது நடைமுறையில் இருப்பதுபோல இலக்கியப் பொதுமை என்பதை உருவாக்க வேண்டும் என்ற பேரவாக் காரணமாகப் படைப்புகளைப் படைத்தல். இதுபோன்று பல்வேறு காரணங்களால் இன்றைய படைப்புகளில் அன்றைய இலக்கியத்தின் தாக்கம் அதிகம் ஏற்படலாம்.

சிங்கப்பூரில் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாகக் கவிதை, சிறுகதை, நாவல், நாடகம், வரலாற்று நூல்கள் எனப் பல்வேறு விதமான படைப்புகள் வெளிவந்து கொண்டிருக்கின்றன. அவை அனைத்தும் செவ்வியல் இலக்கியங்களுடன் ஒப்பீடு செய்யும் போது அவற்றிற்கு இடையே நிலவும் ஒற்றுமை, வேற்றுமைக் கூறுகளில் ஒன்றின் தாக்கம் மற்றொன்றில் காணப்படும் நிலை கீழ்க்கண்டவாறு பல்வேறு வகைகளில் அமையலாம்.

1. இலக்கிய உத்திகள் (உவமை, உருவகம், வண்ணம், இயைபு, திரும்பக்கூறல்)
2. காட்சி/நிகழ்வு
3. பாத்திரப்படைப்பு
4. கதைப்போக்கு

5. பொருண்மை/ கருத்து, அறக்கருத்துகள்
6. கதை/ காட்சிகளின் உச்சக்கட்டம்
7. மொழிப்பயன்பாடு
8. வர்ணனை உத்திகள்/கதை சொல்லும்பங்கு •

**சிங்கப்பூர்ச் சிறுகதைகளில் செவ்வியல் இலக்கியத்தாக்கம்:**

சிங்கப்பூரில் பிற இலக்கிய வகைகளைப் போலவே சிறுகதை இலக்கியமும் வேகமாக வளர்ந்து வருகின்றது. சிங்கப்பூர் இலக்கிய வரலாற்றில் முதல் சிறுகதை 1888 இல் 'வினோத சம்பாஷணை' என்ற பெயரில் மகுதூம் சாயபு அவர்களால் சிங்கை நேசனில் எழுதப்பட்டதாக விளக்கம் தருகிறார் திரு. கோவிந்தசாமி. சிங்கப்பூரில் வெளிவந்த சிறுகதை நூல்களில் 1992 இல் வெளியிடப்பட்ட 'சிங்கப்பூர்த் தமிழ்ச் சிறுகதைகள்' என்னும் தொகுப்பில் உள்ள மூன்று சிறுகதைகள் இங்கு ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்பட்டன.

சிங்கப்பூர்ப் படைப்பாளர் மா. இளங்கண்ணனின் 'இலட்சியங்களின் ஊனங்கள்' என்னும் சிறுகதையின் கருப்பொருளே செவ்வியல் இலக்கியத்தின் தாக்கத்திற்குச் சிறந்த சான்றாக அமைகின்றது.

படைப்பாளரின் உள்ளத்தின் ஆழத்தில் இரண்டறக் கலந்த செவ்வியல் இலக்கியத்தின் கருத்தான 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்பது இவரது படைப்பில் கதையின் கருவாகவே அமைக்கப்பட்டுள்ளது.

இரண்டாம் உலகப்போரில் இடது காலை இழந்துவிட்டிருந்த பிச்சைமுத்து என்ற முதியவரும் அப்போர் நடக்கும்போது செடிசெத்தைகளுக்குள் குனிந்தபடியே ஓடியவள் நிமிர முடியாமல் கூனல் முதுகுடன் வாழ்க்கையை நடத்தும் குவேப் பாட்டியும் ஒருவருக்கொருவர் தங்களின் அன்பைப் பகிர்ந்து கொண்டு வாழ்க்கை நடத்தும் போக்கில் கதை கொண்டுசெல்லப்படுகிறது.

> "நீ இந்த வேலை செய்துகிட்டு ஒவ்வொரு நாளும்
> எனக்கு ரொட்டி வாங்கித் தருகிறாயே"

இது பிச்சைமுத்துவின் அன்பு வெளிப்பாடு.

அதற்குக் குவேப் பாட்டி,

> "பிறகு என்ன செய்யச் சொல்லுறீங்க, ஊருக்குப்
> போகப்பணம் வேண்டும் என்கிறீர்களா? இல்லை
> உங்களை என் வீட்டில் வைத்துச் சோறு கொடுக்க
> வேண்டும் என்று சொல்லுறீங்களா?

என்று சிரித்தாள். பிச்சைமுத்துக் கிழவருக்கும் சிரிப்பு வந்துவிட்டது. (பக்.164) அந்தச் சிரிப்பில் ஆயிரமாயிரம் அர்த்தங்கள்.

மற்றொரு சான்றாக, குவேப் பாட்டி காய்ச்சலில் படுத்திருக் கிறார். அதுவும் பல நூறு துண்டுத் துணிகளில் ஒட்டுப்போட்டுத் தைத்திருந்த பல வண்ண விரிப்பில் படுத்திருக்கிறாள்.

" உடம்புக்கு என்ன?"

இது பிச்சைமுத்துவின் கேள்வி.

"ஒண்ணுமில்லே........... காய்ச்சல்தான்"

என்கிறார் குவேப் பாட்டி.

'ஏதாகிலும் ஆக்கிச் சாப்பிட்டுருக்கிறாளா' என்று அடுப்பைப் பார்த்துவிட்டு, அவள் நெற்றியில் கையை வைத்தார் பிச்சைமுத்து. அடுப்பில் இருக்கவேண்டிய தீ அவள் நெற்றியில் இருந்தது.

"என்ன இப்படிச் சுடுகிறது. காய்ச்சல் மாத்திரை வாங்கிச் சாப்பிட்டாயா?"

என்கிறார்.

"வாங்கிச் சாப்பிட்டேன்"

"சாப்பாடு?"

"சாப்பிட முடியலே! வாயெல்லாம் கசக்கிறது."

"சாப்பிடலேன்னா எப்படி?"

என்று சொல்லிவிட்டுச் சக்கர நாற்காலியைத் திருப்பினார்.

"எங்கே போகப் போறீங்க?"

"கோப்பியும் ரொட்டியும் வாங்கிட்டு வர."

பிச்சைமுத்துக் கிழவர் நிற்கவில்லை. கோப்பிக் கடைக்குச் சென்று கோப்பியும் ரொட்டியும் வாங்கிக் கொண்டு வந்து கொடுத்தார். (பக் 166-167).

அன்பிற்கும் உண்டோ அடைக்கும் தாழ். சீனப் பெண்மணியும் இந்தியத் திருமகனும் இறுதிக்கால வாழ்வில் ஒருவருக்கொருவர் பிரதிபலனை எதிர்பார்க்காத நிலையில் உறவினர்களாக உற்ற நண்பர்களாக வாழ்வதைத் தம் படைப்புவழி வெளிப்படுத்தியுள்ளார். கணியன் பூங்குன்றனாரின் யாதும் ஊரே யாவரும் கேளிர் (புறம்.192) என்ற வரிகளின் தாக்கமே இப்படைப்பு உருவாகக் காரணமாயிருந்தது எனலாம்.

சிங்கப்பூர்ப் படைப்பிலக்கிய மேடையில் கொடிகட்டிப் பறக்கும் மற்றொரு எழுத்தாளர் பி.கிருஷ்ணன். இவரது 'வாழ

முடியாதவள்' என்ற சிறுகதைப் படைப்பைத் தமக்கே உரிய பாணியில் மிகச் சிறப்பாகப் படைத்துள்ளார்.

பிழைப்புத்தேடித் தமிழகத்திலிருந்து சிங்கப்பூர் வந்தவன் கண்ணுச்சாமி. இங்குள்ள வங்கி ஒன்றில் பியூனாக வேலை பார்த்துக் கொண்டிருக்கும் போது மலாய் மொழியைத் தாய்மொழியாகக் கொண்ட மலாய்ப் பெண்ணின் மீது காதல் கொள்கிறான். காதல் கனிகிறது. கல்யாணம் வரை செல்கிறது. கண்ணுச்சாமியின் தாயும் மலாய்ப் பெண்ணின் தாயும் யார்? யார்? அவர்களிடையே என்ன உறவு? சொந்தபந்தம் எதுவும் இல்லையே! அது போல் இருவரின் தந்தையர்களும் எந்த முறையில் சொந்தக்காரர்கள்? அவர்களுக்கிடையே என்ன உறவு? ஒருவர் உள்ளத்தில் மற்றொருவர் சென்று செம்மண் தரையில் மழை பெய்தால் அவை ஒன்றுடன் மற்றொன்று இரண்டறக் கலந்து நிற்பதைப் போன்று இருவரும் ஒருவராகி இல்லற வாழ்வைத் தொடங்கியதாகக் கதையைக் கொண்டு செல்கின்றார் படைப்பாளர்.

"யாயும் ஞாயும் யார்ஆ கியரோ
எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்
யானும் நீயும் எவ்வழி அறிதும்
செம்புலப் பெயல்நீர் போல
அன்புடை நெஞ்சம் தாம் கலந்தனவே" (குறுந் 40)

என அனைவராலும் போற்றப்படும் செவ்வியல் இலக்கியத்தின் பொதுமையை, அதன் சீர்மையை மனித வாழ்வோடு இயைந்து காணப்படுகின்ற சிறந்த அனுபவத்தைப் படைப்பாளர் உற்றுநோக்கி, உள்வாங்கிக்கொண்டு 'வாழ முடியாதவள்' என்ற சிறுகதைப் படைப்பில் தலைவன் தலைவியாகக் கண்ணுச்சாமியையும் மலாய்ப் பெண்ணையும் உருவாக்கியிருக்கின்றார்.

வங்கி மேலாளரோடு கண்ணுச்சாமி உரையாடும் போது,

"பெண் எந்த இடம், சொந்தப் பெண்ணா?" என்று வங்கி மேலாளர் கேட்க, "நீங்க ஒண்ணு! பொழைக்க வந்த இடத்துலே சொந்தம் வேறேயா வேண்டிக்கிடக்கு?" என்கிறான் கண்ணுச்சாமி. (பக். 50)

அவனது உரையாடலைச் செவிமடுத்துக் கொண்டிருந்த வங்கி மேலாளர்,

"ஓகோ! அப்படியா! மலை நாட்டிலுள்ளவர்கள் எல்லாம் ஐக்கியமாய் - ஒற்றுமையாய் வாழ வேண்டும் என்பதை உணர்ந்து கொண்டாயா? சரி, திருமணத்திற்கு முன் அழைப்புச்சீட்டு அனுப்ப மறந்துவிடாதே!" (பக்.51)

என்கிறார்.

குறுந்தொகையில் செம்புலப் பெயனீராரின் பாடல் ஏற்படுத்திய தாக்கம் படைப்பாளரின் பாத்திரப்படைப்பில் மறு உருவாக்கம் பெற்றிருப்பதை இங்கே காணமுடிகிறது.

சிங்கப்பூர்ப் படைப்பாளர் சே.வெ. சண்முகம் அவர்களின் படைப்பான 'மற்றொன்று' என்னும் சிறுகதை,

தமிழகத்தில் உள்ள கிராமம் ஒன்றில் சிட்டுக்குருவியாகக் குடும்பத்தில் மகிழ்ச்சியோடு சுற்றித் திரிகிறாள் ஒரு பெண். விதி யாரை விட்டது. சிங்கப்பூர் மாப்பிள்ளையைத் திருமணம் செய்துகொண்டு சிங்கப்பூரில் வாழ்க்கை நடத்துகிறாள். அப்போது அவள் அடைந்த துன்பங்களும், துயரங்களும் சொல்லி மாளாமல் அக்குடும்பத்தை விட்டுப்பிரிந்து தான் பெற்ற ஒரே மகள் பூங்கொடியுடன் தனியாக வாழ்ந்து வருகிறாள். தான்பட்ட துன்பங்கள் போலத் தன்மகளுக்கு நேர்ந்து விடக்கூடாது என்று எச்சரிக்கை செய்வதற்காகத் தன் அன்பு மகளுக்கு நீண்ட மடல் ஒன்று எழுதி அவளிடம் கொடுக்கிறாள்.

> "என்றைக்கு நீ கல்யாணம் செய்துக்கணும்னு ஆசைப்படுகிறாயோ அன்றைக்குத்தான் இந்தக் கடிதத்தை நீ படிக்கணும்" (பக்.214)

என்று அன்புக் கட்டளையும் இட்டுவிட்டாள்.

காலங்கள் உருண்டோடுகின்றன. பூங்கொடி, ராஜா என்பவனைக் காதலிக்கின்றாள். திருமணம் செய்துகொள்ளப்போகும் தறுவாயில் அம்மா எழுதிக்கொடுத்த கடிதத்தை ஆவலோடு படிக்கத் தொடங்குகிறாள். கடிதத்தைப் படித்து முடிக்கும் போது கண்களில் நீர் மல்கச் சோகமே உருவான நிலையில் மிகுந்த குழப்பத்திற்கு ஆளாகிறாள். தன்னந்தனியாகத் தன்னை வளர்த்து ஆளாக்கிய தன் அன்பிற்குரிய அன்னை அடைந்த அதே துன்பம் ராஜாவால் இவளுக்கு ஏற்படப் போவதைத் திட்டவட்டமாக உணர்கிறாள். திருமண எண்ணத்தைத் தூக்கி எறிந்துவிட்டு ராஜாவைப் பிரிகிறாள்.

படைப்பாளர் சிலப்பதிகாரக் கருத்தில் உந்தப்பட்டு இப்படைப்பினை உருவாக்கியுள்ளார் எனலாம். சிலம்பின் முப்பெரும் உண்மைகளில் ஒன்றான 'ஊழ்வினை உறுத்து வந்து ஊட்டும்' என்ற கருத்தினை வெவ்வேறு இடங்களில் கையாள்கிறார். மகள் பூங்கொடிக்கு எழுதிய கடிதத்தின் தொடக்கத்தில்,

> "மகளே! பூங்கொடி, வாழ்வதும், தாழ்வதும் ஊழ்வினையின் பலன் என்கிறார்கள். ஊழ்வினையின் வலிமையை அழுத்தமாக எடுத்துச் சொல்கிறது

சிலப்பதிகாரம். இதிகாசங்களும் புராணங்களும் இன்றைய புதினங்களும்கூட எல்லாவற்றுக்கும் ஊழ்வினையையே முன் நிறுத்துகின்றன. எல்லாம் விதிப்படியே நடக்கும் என்றே நம்புகிறார்கள். தலை எழுத்தை மாற்றிவிட முடியாது என்று சமாதானப்படுத்திக் கொள்கிறார்கள்.

"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்"

என்று தெய்வப்புலவர் கூறுகிறார். எனவே நான் அனுபவித்ததெல்லாம் ஊழ்வினையின் பலன்கள் என்றே முடிவாகிறது. (பக் 217-218) என எழுதித் தான் வாழ்ந்த வாழ்க்கை ஊழ்வினையால்தான் அமைந்தது என அழுத்தமாகத் தெரிவிக்கின்றாள். மகள் பூங்கொடியை வளர்த்து ஆளாக்கி ஓர் அலுவலக அதிகாரியாக மாற்றியிருப்பதைக் குறிப்பிடும்போது,

"இன்று நீ ஓர் ஆபீசராக அலுவலில் அமர்ந்திருப்பதைப் பார்த்து அக மகிழ்கிறேன்! இந்த மகிழ்ச்சி யாருடைய ஊழ்வினையின் நற்பலனோ அறியேன். ஆனால், தெய்வத்தால் ஆகாமல் உன் தாய் மெய்வருந்திப் பெற்ற கூலி என்பது மட்டும் மறுக்க முடியாதது. ஓர் அபலைப் பெண்ணின் வைராக்கியம் இது.

மனச்சாட்சி இல்லாதவர்களிடம் சிக்கித் தவித்த ஒருத்தியின் எதிர் நீச்சல் இது (பக்-222-223) எனத் தாய் தன் மகளுக்குக் கூறும் கூற்றாகவும்,

"ராஜா, தெரியாமல் நரகத்தில் விழுந்தவள் என் தாய். அதே நரகம்தான் என்னையும் அழைக்கிறது. அதில் வீழ்வதும் ஊழ்வினைதான்!. விழாமல் தப்பினால் அதுவும் ஊழ்வினைதான்! விழுவது விழாதது ஆகிய இரண்டுக்கும் நடுவில் 'மற்றொன்று' சூழ்கிறது. எனக்கு என் அம்மா காட்டிய வழியே அந்த 'மற்றொன்று.' அந்த வெளிச்சத்தில் நிற்கிறேன் நான். நீங்கள் போகலாம்.......... (பக்.225)

என மகள் பூங்கொடியின் கூற்றாகவும் ஊழ்வினையின் முக்கியத்துவத்தைப் புலப்படுத்துகிறார் படைப்பாளர்.

படைப்பாளருக்குச் சிலம்பு காட்டும் ஊழ்வினைக் கருத்தும், குறள் கூறும்

தெய்வத்தான் ஆகாது எனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்

என்ற கருத்தும் 'மற்றொன்று' எனும் படைப்பைப் படைப்பதற்கான தாக்கத்தை ஏற்படுத்தியிருப்பதோடு சிலம்பில் மாதவியின் மடல்கள். காப்பியத் தலைவனைக் கலங்க வைத்ததோடு மாதவியின் பால் அதீத இரக்கமும் அடைய வைத்தது. மாதவி தீது அற்றவள் என எண்ண வைத்தது.

'அடிகள் முன்னே யானடி வீழ்ந்தேன்
வடியாக் கிளவி மனம்கொளல் வேண்டும்'

எனத் தொடங்கும் வரிகளே மாதவியின் தூய்மையான சிந்தனைக்குச் சான்றாகின. காப்பியத்தில் மாதவியின் மடல்கள் மிகப்பெரிய திருப்புமுனையை ஏற்படுத்தியதை உள்வாங்கிய படைப்பாளர் அதே போன்ற கடித உத்தியைத் தமது படைப்பான 'மற்றொன்றில்' புகுத்திக் கற்போர் நெஞ்சத்தைக் கவர்ந்திழுக்கின்றார்.

இவ்வாறாக, ஆயிரமாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே சீரோடும் சிறப்போடும் வாழ்ந்த நம் முன்னோர்களின் அகப்புற வாழ்வைப் படம்பிடித்துக் காட்டும் சங்க இலக்கியங்களும், அறக்கருத்துக்களும், முறைப்பட வாழ்வதற்குரிய நெறிமுறைகளை விளக்கும் பதினெண்கீழ்க்கணக்கு நூல்களும், காப்பியங்களும் மற்றும் அனைத்துச் செவ்வியல் இலக்கியங்களும் உலகத் தமிழர்கள் நெஞ்சங்களில் நீங்காஇடம் பெற்றுத் திகழ்ந்து கொண்டிருக்கின்றன. எனவே அவர்களது படைப்புகளில் ஆங்காங்கே செவ்வியல் இலக்கியத்தின் பல்வேறு பரிமாணங்கள் விரவி இருப்பது வெள்ளிடை மலை!

இன்றைய காலத்தில் மட்டுமல்லாது இனி வரும் புலம் பெயர்ந்தோர் இலக்கியங்களிலும் பெரும்பாலும் செவ்வியல் இலக்கியத்தின் தாக்கம் தொடரும் என்பது திண்ணம்!.

# புலம்பெயர்ந்தோர் படைப்புகளில் செவ்வியல் இலக்கியச் செருக்கு (வீரப்பெருமிதம்)

முனைவர் அஞ்சலி அன்னாபாய் ராஜசேகரன்
மேனாள் பேராசிரியர், தமிழ்த்துறை,
டோக் பெருமாட்டி கல்லூரி, மதுரை

தமிழர் பண்பாடு வாழ்வியல வளமும், புலமை நுட்பமும் இலக்கியச் செருக்கும் நிறைந்தது. நிலத்தின் (புலம்) அடிப்படையில் பண்டைத் தமிழர் வாழ்ந்தனர். நிலத்தைப் பேணிப் போற்றினர். நிலத்தால் வாழ்ந்து, நிலத்தை வாழ்வித்துச் சுகம் பெற்றனர். குப்பையை மக்கச் செய்து, உரமாக்கி, வித்துக்களை விளையச் செய்யும் பண்பு நிலத்திற்கே (மண்ணுக்கு) உரியது. இந்த நிலமாண்பு நன்கறிந்த தமிழரும் இதே மாண்புடன் வாழ்ந்தனர். தன்னை உருக்கித் தன்னுள் அரிசியை உருவாக்கிக் குறிஞ்சிநில மக்களின் பஞ்ச காலப் பசியைப் போக்கியது குறிஞ்சிநில மூங்கில். அது தன்னுள் அரிசி விளைந்ததும் உயிர் மாய்ந்துவிடும் என்கிறது தாவரவியல். இவ்வாறு நிலமும் மக்களும் ஒருங்கிணைந்து ஒருவரையொருவர் வாழ்வித்து வாழ்ந்த காலம் பண்டைக் காலம். நிலவியல் 'உயிரியல், சமூகவியல், மனிதவியல், விண்ணியல், கலையியல், தொழில்நுட்பவியல் அறிவெல்லாம் பெற்ற பண்பாடு, பாரம்பரியம் நம்முடையன.

அறம் பிறழும் போது அறநெறி காத்த புலமைச் செருக்கு மிக்கோர் செவ்வியல் இலக்கியப் படைப்பாளிகள். தமிழகத்தின் ஒவ்வொரு மூலைக்கும் பறந்து மானுடத்தின் கானம் பாடிய வானம்பாடிகள். இப்படைப்பாளிகள் அகவாழ்வின் புதிருக்குள்ளும் புறவாழ்வின் துயருக்குள்ளும் பயணிப்பது, இயற்கையோடிசைந்து இயற்கையூடாகவே அகப்புற வாழ்வைக் காட்சிப்படுத்துவது, அணிநல அழகுபடுத்துவது, கற்பனை கலப்பது, இயற்கை புனைவது, உணர்ச்சி வெளிப்பாடு அமைவது, வண்ண வனப்புகளுடன் எண்சுவை கூட்டுவது, ஒலிநயம், சொல்நயம், பொருள்நயம் பொதியச் செய்வது போன்ற கவிதைத்திறங்களை உடையவர்களாக விளங்கினர். இலக்கியச் செருக்குடன் மிடுக்குநடை போட்டுத் தமிழைச் 'செவ்வியல்மொழி'த் தகுதி பெறச் செய்து தமிழர் பெருமையை உலக அரங்கில் ஒளிர்விடச் செய்வன செவ்வியல் இலக்கியங்கள்.

புலத்தைக் காக்கப் போர்வீரம்; புலத்தை வளமாக்க அகக்காதல்; என்று இருகண் பெற்று வீறுநடை பயின்றவர்கள் பண்டைத் தமிழர்கள். அவர்கள் வீரத்தைக் காதலித்துக் காதலில் வீரம் காட்டி வாழ்ந்தவர்கள். வீரம் வெல்லும் போது வெற்றிப் பெருமிதம் பெற்றதோடு இல்லாமல் உயிரைக் கொடுத்துத் தாம் தோற்கும் போதும் அவலப் பெருமிதம் கொள்கிறவர்கள். அதோடு நில வனப்பில் திளைத்து நிலவியல் நுட்பம் உணர்ந்து அதனோடு ஒன்றி வாழ்வை அமைத்தவர்கள். பண்டைத்தமிழ் இலக்கியங்களும் அவர்தம் வாழ்வை வெளிப்படுத்தும் கண்ணாடிகள்.

"ஓதல் பகையே தூதிவை பிரிவே",

"முந்நீர் வழக்கம் மகடூஉ வோடில்லை"

என்ற தொல்காப்பிய நூற்பாக்கள் மூலம் பண்டைத் தமிழர்கள் நிலங்கடந்து, புலம் பெயர்ந்து சிலகாலம் செலவழித்தனர் என்பதும் அதன் காரணங்கள் கல்வி, போர், தூது, பொருளீட்டுதல் போன்றன என்பதும் அறியப்படுகின்றன. புலம் பெயர்ந்து வினை மீண்டு திரும்பி விரைந்து வருவர் என்ற செய்திகள் இலக்கியங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளன.

ஆனால் இன்று, இக்கட்டுரையில் புலம் பெயர்ந்தோர் என்போர் நாடு விட்டு நாடு பெயர்ந்து வாழ்விற்காகத் தொழில் செய்யச் சென்று குடியேறியவர்கள், 'குடியேறிகள்', என்றும் 'வந்தேறிகள்' என்றும் இவர்கள் சுட்டப்படுகின்றனர். புலம்பெயர்ந்தவர்களில் தமிழர்கள் நாடுகடந்தும், மொழிப்பற்று மிக்கோராகத் திகழ்ந்து படைக்கும் படைப்புகளே "புலம் பெயர்ந்தோரிலக்கியங்கள்" என்று இங்குக் கருதப்படுகின்றன. தமிழர்கள் எங்கு வாழ்ந்தாலும் தமிழைக் கண் எனக் கருதினர். இதனை,

"பொன்னும் மணியும் புவியாளும் நற்பேறும்
என்னை அணுகிடினும் ஏற்பேனோ? - புன்மனத்தர்
எண்ணி அழிக்கவரின் இன்னுயிரை நான்மதியேன்
கன்னித் தமிழென்றன் கண்"

என்ற மா.இராமையா அவர்களின் கவிதை (1976) நன்கு புலப்படுத்தும். இங்கே கவிஞரிடம் தமிழ்ச்செருக்கும் அவர்தம் கவிதையில் புலமைச் சிறப்பும் மிளிர்வதைக் காணலாம்.

1980களுக்குப் பின்னர் மொழிநிலை மாறியும் வருகிறது என்பதை "மொழியைக் காப்போம்" என்ற கவிதையில் மனம்விட்டுக் கூறுகிறார் கவிஞர் சோமசன்மர். அக்கவிதை இதோ!

"சங்கங்கள் கண்டார்கள்! இலக்கியங்கள்
தாய்போற்றப் படைத்தார்கள் எழுச்சி கொண்டார்
சிங்கங்கள் போல்வாழ்ந்தார் சீர்மை பெற்றார்
சிறப்பான மொழிவாழ உயிரும் நீத்தார்

இங்குள்ள எழுத்தாளர் தியாகத்தோடே
எதிர்பார்ப்பு நினைவின்றி எழுதுகின்றார்!
தங்கத்தைக் கால்கொண்டு மிதித்தல் போலத்
தமிழ்மீது சிலமக்கள் நடக்கின்றாரே!”

புலம்பெயர்ந்தோருக்கு அன்றும் இன்றும் புலம் பெயர்ந்த நாடுகளில் வாழ்வியற் போராட்டங்கள் பல. அந்நெருக்கடிகளுக்குள் அவர்தம் மொழிநாட்டமும் சிக்கித் தவிக்கிறது.

கோவூர்கிழார் என்ற சங்கப்புலவர் பெயரின் சாயல் கொண்ட ‘காரைகிழார்’ என்னும் கவிஞர் (மலேசியா) தம் கவிதையில்

“பேயா மழையும் பெருமழையும்
பேஞ்சிருந்தாலும்
ஓயாமல் ஒழைக்கச் சொல்லி
உசிர எடுக்குறான்
நொப்புராணே சப்பாங்காரன்
ரொம்ப மோசமாம்
அப்புராணி மனுஷர் நம்மை
அடிச்சுக் கொல்லுறான்!”

என்று வாழ்வியற் போராட்டங்களை வடித்துள்ளார். இப்படிப் பல்வேறு இன்னல்களுக்குள் வாழும் புலம்பெயர்ந்த தமிழர் இன்று படைப்பாற்றல் மிக்கோராய் இந்தியத் தமிழரினும் தமிழ்ப்பற்று மிக்கோராய்த் தமிழ்ப்பணியாற்றி வருகின்றனர். போலித் தமிழ்ப்பற்றாளர்களும் எள்ளளவு இருக்கின்றனர். அவர்களை,

“நாட்டுக்குள்ளே விளம்பரம் தேட
நல்ல தமிழில் பேச்சு
வீட்டுக்குள்ளே பிணமாய் நாறும்
வேற்றுமொழியின் பேச்சு”

என்ற கவிஞர் இளங்கோவின் கவிதை வரிகள் தோலுரித்துக் காட்டுகின்றன.

நிலத்தோடொன்றி, நிலம் காக்க, நிலம் பெருக்க வீறு கொண்டெழுந்த நிலை பண்டைய தமிழர் நிலை. நிலம் இழந்து கடல்தோணிகளாய் வாழும் நிலை ஈழத்தமிழர்களாம் புலம் பெயர்ந்தோர் நிலை. புலம்பெயர்ந்தோர் இலக்கியங்களில் செவ்வியல் இலக்கியத் தாக்கம் என்பது ஆங்காங்கே காணப்படுகிறது. அதனை மூன்று வகையாக இனங்காணலாம்.

ஒன்று செவ்வியல் இலக்கியப் பெயர்களையோ அல்லது ‘சங்கத்தமிழ்’ என்ற சொல்லையோ சுட்டிச் செல்லுதல்.

இரண்டாவது செவ்வியல் இலக்கியச் சொற்களை, வரிகளை, மொழிநடையை அப்படியே கையாளுதல்.

மூன்றாவது செவ்வியல் இலக்கியக் கூறுகளாகிய வீரப்பெருமிதம், நாட்டுப்பற்று, இயற்கை எழிற் பின்புலம், சொல்லாட்சிச் சிறப்பு, மெய்ப்பாட்டுப் புலப்பாடு போன்ற செருக்குடன் மிளிரும் பாங்கு.

"சாலை கூட்டுபவன்
வேலை முடிந்த பின்னர்
*சங்கத்தமிழ்* நலத்தில் நிலைக்கிறான்
பட்டம் பதவிகளில்
ஒட்டியிருக்கும் முகங்கள்
பார்வை தமிழின் பக்கம் வரவில்லை"

என்ற கவிஞர் முருகதாசனின் கவிதையும்,

"மூர்க்கத் தனமான மிருகச் செயலுக்கு
முட்டாள் தனமாகப் பலியாகிப் போனவங்க
போர்க்கும் தயங்காத வீரத் தமிழருங்க
*புறநானூ றெல்லாமே* மறந்து கிடந்தப்போ
முரட்டுப் புலியையும் முறத்தாலே பயமுறுத்தி
விரட்டி யடிச்ச பரம்பரையில் ஒரு பொண்ணு
வரட்டும் வர்ரதுனு துணிஞ்சு புறப்பட்டு
வெளியே வந்ததனால் குட்டெல்லாம் உடைஞ்சுச்சு"!

என்ற மைதீ. சுல்தான் கவிதையும் முதல் வகைக்குச் சான்றுகளாகும்.

"நாடஃதென்ப நாடா வளத்தன
நாடில நாட வளந்தரு நாடென
நாடிய நுண்பொருள் நவிலுஞ் சான்றோன்
பாடிய பொருண்மை புரிந்தனம்; வையச்
செம்மைச் சான்றோர் செப்பிய மொழியும்
*அம்ம!* அஃதே ஆம் ஆம்! உண்மை
சூழிய அரணும் சுரும்புணும் சோலை
மேழியர் ஏத்தும் மேகந் தொடுமலை
............ ஆளும் அரசோ *குடிதழீஇ ஓச்சும்*
அவர்தம் கேண்மை அரிதின் அரிது!"

என்ற ப.மு. அன்வர் அவர்களின் எம்மலை நாடு என்ற கவிதை சங்கப்புலவர் ஔவையின்,

"நாடாகொன்றோ காடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா கொன்றோ
எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே"

என்ற பாடலின் சாயல் கொண்டு இயற்கைப் புனைவும் நாட்டுப்பற்றும் சங்ககாலச் சொல்லாட்சியும் நிறைந்து விளங்குகிறது. இக்கவிதை இரண்டாம் வகைக்குச் சான்றாகும்.

சங்கப் புலவர் 'பரணர்' பெயர் கொண்ட கவிஞரான பரணன் அவர்களின் குழந்தைப்பாட்டு,

"அம்மா மிகவும் நல்லவள்
ஆசை உள்ளம் கொண்டவள்
ஐயம் இல்லா அறிவினள்
ஓசிய ஓசிய உழைப்பவள்
ஓச்சும் மரபுப் பொற்பினள்
ஔவை பாடல் கற்றவள்"

என ஔவையைச் சுட்டுகிறது.

"யாராவது நீர் கொடுங்களேன்
என் கிணற்றைப் பிடித்துக் கொண்டது
பூத்த இளங்கொடி"

என்ற கவிதை முல்லைக்குத் தேர் கொடுத்த பாரியை நினைவூட்டுகிறது. இந்த இடத்தில் கவிஞர் காசி ஆனந்தனின் கவிதையும் நினைவிற்கு வருகிறது. முல்லைக்குத் தேர் கொடுத்த பாரியை வள்ளலாகப் போற்றும் சிந்தையை மாற்றித் தற்காலச் சுற்றுச்சூழல் சிந்தையோடு பாரி தேர் செய்ய எத்தனை மரங்களை அழித்திருப்பார் என்று அவர் சிந்திக்க வைப்பது மாற்றி யோசித்தலுக்குச் சரியான சான்றாகும்.

தீபச்செல்வனின் "கள்ளத்தோணி" என்ற கவிதை மூன்றாவது வகைக்குச் சான்றாகும். அக்கவிதை:

"இம்முறையும் குழந்தையை நாங்கள்தான்கொன்றோம்
ஏனெனில், அவனுக்கென்று எம்மிடம் எதுவுமில்லை,
மூன்று வயதுச் சிறுவனொருவனுக்கு ஆழ்கடலில்
என்ன வேலையென நீங்கள் கேட்கக்கூடும்?
அவன் தன் தந்தையைத் தேடிச் சென்றான்
தந்தை எதற்காகச் சென்றார்?
யாருக்கும் இங்கு ஒன்றுமில்லையே அதனால்
அக்குழந்தையை நாம்தான் பேர்த் நகருக்குச்
செல்லுமாறு துரத்தினோம்.
தந்தைக்குக் கொடுப்பதற்காக நெடுநாளாக
வைத்திருந்த முத்தங்களைத் தவிர அவன்
எதையும் எடுத்துச் செல்லவில்லை
கடலில் இறங்கியபொழுது முன்னால்
எதிர்கரையும் மரணமும் மிதந்தன எனினும்,
அவன் சென்றான்.

ஏனெனில், அவனுக்கென்று நிலம்தான் இல்லையே.
நேற்று ஒரு தோணி மூழ்கியபொழுதும்
இன்றைய தோணியும் புறப்பட்டுவிட்டது.
ஒரு குழந்தைக்காக நான் இறங்கிக்
கொண்டிருக்கையில்
கும்மிருட்டில் இன்றொரு குழந்தை
முதுகிலொரு கனத்த பையுடன்
கள்ளத்தோணியில் ஏறிக்கொண்டிருக்கிறது.
ஆழ்கடலிருட்டில் அலைந்து கொண்டிருப்பது
நிலமற்ற தோணிகளெனினும்
எங்கோ ஒரு கரையில் ஒதுங்கும் சடலங்களாக
கடல் மடியில் குப்புறக்கிடக்கும் தோணியா?
ஈரானிய கள்ளத்தோணியா?
மியான்மர் கள்ளத்தோணியா?
பெருங்கடலைக் குடித்தும் தாகம் அடங்காமல்
கள்ளத்தோணியெனக் கிடக்கிறது ஓர் ஈழக்குழந்தை
நாம்தான் அவனைக் கொன்று விட்டோம்
ஏனெனில், எம்மிடம்தான் எதுவுமில்லை.
எம் நிலத்தில், நாளை ஒரு குழந்தையுமில்லை!”

என்கிற இக்கவிதை,

“கெடுக சிந்தை கடிது இவள் துணிவே
மூதின் மகளிர் ஆதல் தகுமே
மேல் நாள் உற்ற செருவிற்கு இவள்தன்
யானை எறிந்து களத்துஒழிந் தனனே
நெருநல் உற்றசெருவிற்கு இவள்கொழுநன்
பெருநிரை விலங்கி ஆண்டுப் பட்டனனே
இன்றும் செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி
வேல்கைக் கொடுத்து வெளிதுவிரித் துஉடீஇப்
பாறுமயிர்க் குடுமி எண்ணெய் நீவி
ஒருமகன் அல்லது இல்லோள்
செருமுகம் நோக்கிச் செல்கஎன விடுமே.”

- ஒக்கூர் மாசாத்தியார்

“அற்றைத் திங்கள் அவ் வெண்நிலவில்,
எந்தையும் உடையேம்; எம்குன்றும் பிறர் கொளார்;
இற்றைத் திங்கள் இவ் வெண் நிலவில்,
வென்று எறி முரசின் வேந்தர் எம்
குன்றும் கொண்டார் ; யாம் எந்தையும் இலமே!”

-பாரிமகளிர்

என்ற புறநானூற்றுப் பாடல்களை நினைவூட்டுகின்றன. ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதமாக இப்பாடல் புலம்பெயர்ந்து புலமிழந்த தமிழனின் உள்ளச் சோகத்தை அவலச்சுவையுடன் காட்சிப்

படிமத்துடன் ஒரு தாயின் வீரப் பெருமிதத்துடன் வெளிப்படுத்துகிறது. செவ்வியல் இலக்கியச் சுவைச் செருக்குடன் திகழும் மூன்றாம் வகைக்கு இக்கவிதை ஏற்ற சான்றாகும்.

சங்கப்பாடலில் போர்க்களம் நோக்கிச் சிறுமகனைப் பாறுமயிர்க் குடுமி எண்ணெய் நீவி வேல்கை கொடுத்துச் செருமுகம் நோக்கியனுப்பும் தாயின் வீரம் இக்கவிதையிலும் ஆழ்கடல் நோக்கி மூன்று வயதுச் சிறுவனை அனுப்பும் தாய்க்கும் உள்ளது. தந்தைக்குக் கொடுப்பதற்கு முத்தங்களைத் தவிர வேறெதையும் அவன் எடுத்துச் செல்லவில்லை என்னும் போது குடும்ப உறவுத் தேடலும், அவர்தம் அன்பின் ஆழமும் அழுத்தமாகப் பதிவு செய்யப்பட்டுள்ளன.

கடல் மடியில் குப்புறக் கிடக்கும் குழந்தை தோணியாகக் காட்சிப்படுத்தப்படுகிறது. கவிதையை வாசிக்கும்போதே கண்கள் குளமாகி ஈழத்தமிழர்நிலை நம் செவியில் அறைகிறது; நம்மை நடுக்குறச் செய்கிறது. "ஏனெனில், அவனுக்கென்று நிலம்தான் இல்லையே" என்ற வரியும் "ஏனெனில் எம்மிடந்தான் எதுவுமில்லை" என்ற வரியும் அழுகை, இளிவரல், மருட்கை, பெருமிதம், அவலம் ஆகிய அத்தனை உணர்வுகளையும் வெளிப்படுத்துகின்றன. இக்கவிதை செவ்வியல் இலக்கியச் செருக்கு மிகுந்த கவிதையெனக் கூற முடிகிறது.

தம் தந்தையையும், குன்றையும் போர்க்காரணத்தால் இழந்து புலவர் கபிலருடன் இடம்பெயரும் பாரிமகளிரின் அழுகுரல்தான் தீபச்செல்வனின் கவிதையிலும் ஒலிக்கிறது. பெண்கள் பெரும்பாலோர் திருமணமாகிப் பிறந்தவீடு விட்டுப் புகுந்த வீடு செல்லும் மரபு நம் தமிழர் மரபு. அது கூடப் 'புலம் பெயரும்' நிலைமைதான். என்ன ஒரு வேறுபாடு! புகுந்தவீடு செல்லும் பெண்கள் அவ்வப்பொழுது பிறந்த மண் வந்து மகிழலாம். ஆனால் நாம் சுட்டும் புலம் பெயர்ந்தோர் நிலை அதுவல்ல.

கடல்சூழ் இலங்கைத்தமிழர் கள்ளத்தோணிகளில் உயிர் வாழக் கடத்தப்படுவது செருமுகம் நோக்கிச் செல்வது போன்ற நிகழ்வு. கடல்மடியில் இறந்து குப்புறக்கிடக்கும் சடலங்கள் தோணிகளாக அவர்களுக்குத் தோன்றுகின்றன. வார்த்தைகளைக் குறியீடாக்குவது, வார்த்தைகளை உருவகங்களாக்குவது யதார்த்த வாழ்வை அப்பட்டமாக்கிக் காட்சிப்படுத்துவது போன்ற திறங்களுடன் அவலச்சுவையை வெளிப்படுத்துவதிலும் இக்கவிதை உணர்ச்சிப் பிழம்பாக, சொல்லோவியமாகக் காணப்படுகிறது.

இவ்வாறாகப் பண்டை இலக்கியத் திறமெல்லாம் புலம் பெயர்ந்தோர் கவிதைகளிலும் சூழலுக்கேற்ப மெருகுடன் திகழ்வதற்குக் காரணம் செவ்வியல் இலக்கியத் தாக்கமும் தமிழ்க்கவி ஊற்று அன்று தொடங்கி இன்றுவரை ஒரே மாதிரிப் பொங்கிப் பிரவாகிப்பதும்தான்.

# அ.முத்துலிங்கம் படைப்புகளில் செவ்வியல் தாக்கம்

குளோரியா விதாஸ்
கிறித்தவத் தமிழியல் துறை
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை - 21

## முன்னுரை

ஈழத்தமிழ் எழுத்தாளர்களில் புலம்பெயர்ந்த தமிழ் இலக்கிய வாதிகளின் படைப்புகள் பரவலான கவனத்தைப் பெற்றுவருகின்றன. ஒரு நாட்டிலிருந்து இன்னொரு நாட்டிற்கு நடுகை செய்யப்பட்டவர்களே புலம் பெயர்ந்தோர் எனப்படுகின்றனர். தமது இனம், மொழி, கலாச்சாரம், பண்பாடு என்பவற்றோடு முற்றிலும் மாறுபட்ட புதியதொரு நாட்டிற்குப் பெயர்ந்தவர்களே இப் புலம்பெயர்ந்தோர். இங்ஙனம் புலம் பெயர்ந்தோரால் படைக்கப்படும் இலக்கியங்கள் புலம்பெயர்ந்தோர் இலக்கியங்கள் எனப்படுகின்றன.

கனடா, பிரான்ஸ், ஜெர்மனி, இத்தாலி, நார்வே, டென்மார்க், ஆஸ்திரேலியா போன்ற நாடுகளில் புலம்பெயர்ந்தோர் மிகுதியாக வாழ்ந்து வருகின்றனர். ஈழத்தமிழர்கள் புலம்பெயர்ந்த காலக்கட்டத்தை இரண்டு காலக்கட்டமாகப் பிரிப்பர். 1980க்கு முன் புலம்பெயர்ந்தவர்கள், 1980க்குப் பின்புலம் பெயர்ந்தவர்கள் எனப் பகுக்கப்படுகின்றனர். 1980க்கு முன் புலம்பெயர்ந்தவர்கள் தொழில், உயர்கல்வி, இவற்றை மையமாகக் கொண்டே புலம் பெயர்ந்தனர். 1980க்குப்பின் பெயர்ந்தவர்கள் இனக்கலவரம், ஈழப்போர் காரணமாகப் பெயர்ந்தவர்கள்.

படைப்பாளர் அ.முத்துலிங்கம் அவர்களை முதற்பிரிவில் அடக்கலாம். இவர் பணியினிமித்தம் பல்வேறு நாடுகளுக்கு இடம் பெயர்ந்தவர். புலம்பெயர்ந்தோர் படைப்புகளில் கவிதை, சிறுகதை, நாவல்,, கட்டுரை இலக்கிய வடிவங்கள் முக்கிய இடத்தைப் பெறுகின்றன. இவர்களின் படைப்புகளின் பாடுபொருளாகத் தாயக நினைவுகளும், வாழ்வியல் அனுபவங்களும் அமைந்தன. பிற்காலப் புலம்பெயர்ந்தோர் படைப்புகளில் தாயக நினைவுகள் மட்டுமின்றி யுத்த அவலங்களும், புலம்பெயர்ந்தோர் சந்தித்த பல்வேறு துயரச் சம்பவங்களும், புலம்பெயர் நாட்டின் புதிய கலாச்சாரப் பண்பாட்டுத் தாக்கங்களும் அவர்கள் எதிர்கொண்ட சவால்களும் பாடுபொருள்களாய் அமைந்தன. எனினும் புலம்பெயர்ந்தோரது படைப்புகள் எவ்விதக் கட்டுப்பாடும் இன்றிப் பூரணச்சுதந்திரத்துடன் வெளிவந்தமை குறிப்பிடத்தக்கது.

## அ.முத்துலிங்கம் என்னும் புலம்பெயர்ந்த படைப்பாளர்

ஈழத்தைச் சேர்ந்த இவர் 1970களின் மத்தியில் பணியின் நிமித்தம் வெளிநாடுகளுக்குச் சென்றார். இவர் இலங்கைக் கொக்குவில் என்ற சிற்றூரில் பிறந்தவர். கணக்காயர் படித்தவர். ஐ.நாவுக்காகப் பல நாடுகளில் பணி புரிந்தவர். 1960களில் இருந்து இவரது எழுத்துப் பணி தொடங்கியது. 1964இல் அக்கா என்ற தமது முதல் சிறுகதைத் தொகுப்பை வெளியிட்டார். இவர் கைலாசபதியால் இலக்கிய உலகிற்கு அறிமுகப்படுத்தப்பட்டார். இலங்கைத் தினகரன் சிறுகதைப் போட்டியில் முதல் பரிசு பெற்ற அக்கா சிறுகதையைத் தலைப்பாகக் கொண்ட இவரது முதல் தொகுப்பு க.கைலாசபதியின் அணிந்துரையுடன் 1964இல் வெளிவந்தது. நீண்ட இடைவெளிக்குப் பின்னர் 1995இல் மறுபடியும் எழுதத் தொடங்கி, சிறுகதைகள், கட்டுரைகள், மொழிபெயர்ப்புகள், புத்தக மதிப்புரைகள், விமர்சனங்கள் என்று எழுதி வருகிறார். அவர் கதைகளில் காணப்படுவது வெவ்வேறு தேசங்கள். வெவ்வேறு கலாச்சாரங்கள், வெவ்வேறு மனிதர்கள். ஆனால் தமிழ் வாசகர்களுக்கு அந்நியப்படாமலும், தீவிரம் சிதைக்கப்படாமலும் அப்புனைவுகள் படைக்கப்பட்டுள்ளன. நாமறிந்த உலகங்களுக்கு நாமறியாத பாதைகளில் அவை நம்மை இட்டுச் செல்கின்றன. அவரின் பார்வை கூர்மையானது.

### படைப்பின் சாரங்கள்

பொதுவாக அ.முத்துலிங்கத்தின் தமிழ்க்குரல் என்றுமே ஒரு வேதனையும் போராட்டமும் கொந்தளிக்கும் உரத்த குரலாகவே இருந்துள்ளது. அது வாழ்க்கையின் அனுபவத்திலிருந்து வெளிக் கிளம்புவது. இவர் தன் சொந்த நாட்டில் இருக்கும்போதே சோகக் கதைகளையே படைக்கிறார். கிரேக்க நாடகங்கள் பெரும்பாலும் அடுத்தடுத்த போர்கள் விளைவித்த அழிவுகளின் பின்னணியில் பிறந்தவை. எனவே இவை போர் மற்றும் போர் அழிவு பற்றிய செய்திகளையே மிகுதியும் பேசுகின்றன. பல நாடகங்கள், கணவனை இழந்த பெண்களின் புலம்பலாகவே அமைந்துள்ளமை குறிக்கத்தக்கது. நம் புறநானூற்றுப் பாடல்களும், கலிங்கத்துப் பரணிப் பாடல்களும் போர்மேற் சென்ற தமிழரின் வீரத்தையும் மரணத்தையும் போர்க்கள அழிவுகளையுமே பதிவுசெய்துள்ளன. இன்றைய சூழலில் பரணியும், புறநானூற்றுப் போர்ப்பாடல்களும் எழ வாய்ப்பில்லை. படைப்பாளன் தான் வாழ்ந்த காலத்துச் சமூக அவலங்களை இலக்கியத்தில் பதிவு செய்வான். புலம்பெயர்ந்த படைப்பாளியான முத்துலிங்கம், பெரும்பாலும் ஈழத்தமிழர் அனுபவங்களை நேரடியாகப் பகிர்ந்து கொண்டவர் அல்லர். இவர் இனக்கலவரத்தால் பாதிப்புக்குள்ளானவர். தான் பிறந்த மண்ணையும் ஊரையும் இழந்தவர். எனினும் இவரிடம் இருந்து உக்கிரமான ஆவேசக் குரலோ, உரத்த எதிர்ப்போ வெளிப்படவில்லை. இயல்பாகச் சாந்த குணம் படைத்தவர். உரக்கப் பேசி அறியாதவர். கொண்டாட்டத்திலும் துயரத்திலும்

அமைதியைக் கடைப்பிடிப்பவர். அறுபதுகளில் எழுதத் தொடங்கிப் பின்னர், பல ஆண்டுகள் இடைவெளியில் மீண்டும் எழுதினார் எனினும் இவரது எழுத்தில் பெரிய மாறுதல்களைக் காண இயலவில்லை. இவரது படைப்புகளில் எங்கும் எவரும் எதிர்பாராத இடத்தில் இழப்பின் சோகத்தின் தாக்கத்தை உணர முடிகிறது. ஒவ்வொரு சிறுகதையிலும் வெகு அமைதியாக ஒரு பெரும் சோகத்தை, பெரும் இழப்பைச் சொல்லி விடுகிறார். முழக்கங்கள் அவருக்குத் தேவைப்படவில்லை.

இவரது படைப்புகள் தமிழிலக்கியத்தில் தோய்ந்த தன்மையை வெளிக்காட்டுவனவாக அமைந்திருப்பதைக் காணமுடியும். செவ்வையான தமிழிலக்கியப் பரிச்சயம் உடையவர் என்பதைக் க.மோகனரங்கனும் சுட்டிக் காட்டுகிறார்.

> "இவரது பல கதைகளிலும், சாத்தியமான இடங்களில் எல்லாம் மிக சகஜமாக எடுத்தாளப்படுகின்ற பழந்தமிழ் இலக்கியக் கவிதை வரிகள், புராண இதிகாச தருணங்கள் போன்றவை இக்கதைகளுக்கு மேலதிகமானதொரு காலப் பரிமாணத்தை அளிப்பதாயும் கலாச்சாரத்தின் உட்பொதிந்த நினைவை மீட்டுவதாகவும் அமைகிறது. ஆனால் இக்கதைகளைப் பொறுத்தவரை மேலதிகமான தளமும் இதற்கு உள்ளது. இவை புலம் பெயர்ந்த நாடிழந்த ஒருவரின் கதைகள். இந்த ஏக்கம், தவிப்பு, அவரது எல்லாக் கதைகளிலும் அடிநாதமாக இடம்பெறுகிறது. புலம் பெயர்ந்து வசிப்பதால் அடையக் கூடிய இழப்புகள் அனைத்திற்குமான ஒருவித ஈடுகட்டலாக முத்துலிங்கத்தின் கதைகளில் மொழியின் மீதான இம் மீள் பயணம் நிகழ்கிறதோ என எண்ணத் தோன்றுகிறது"

என்கிறார்.

### செவ்வியல் இலக்கியத் தாக்கம்

தமிழ் இலக்கியங்களில் சங்க இலக்கியங்களின் தாக்கம் பெறாத படைப்பாளிகள் என்று எவரும் இருந்திட முடியாது. தமிழின் ஆதாரப் படைப்பாக்கம் என்பது சங்க இலக்கியத்திலேயே காணக்கிடக்கிறது. அவ்விலக்கியங்களின் தாக்கம் புலம்பெயர்ந்த தமிழ் எழுத்தாளர்களின் படைப்புகளிலும் வெளிப்படக் காணலாம். அ.முத்துலிங்கம் தமிழ் இலக்கியங்களில் கொண்டிருக்கும் பரிச்சயமானது அவரது படைப்புகளிலும் வெளிப்படுகிறது. குறிப்பாக அவரது படைப்புகளில் சங்க இலக்கியங்களில் காணப்பெறும் அகமரபுகள் சார்ந்த செய்திகள் வெளிப்படுகின்றன. சங்க இலக்கியத்தின் திணைப் பகுப்பில் குறிஞ்சி தவிர்த்த முல்லை,

மருதம், நெய்தல், பாலைத் திணைகளில் பிரிவு சார்ந்த ஏக்கமும், பரிதவிப்பும் கூடிய உணர்வுகள் இழையோடுகின்றன. இவ்வகையான பிரிவு ஏக்கத்தைப் பிரதிபலிக்கும் கதைகள் அ.முத்துலிங்கத்தின் கதைகளில் காணப்படுகின்றன. காதல் குறித்த அழுத்தமான விவரணைகள் இவரது படைப்புகளில் காணப்படுவதில்லை. ஆனால் காதல் ஒரு மெல்லிய இழையாகக் காணப்படுகிறது. இவரது கதைகளில் காதல் நிகழ்வுகள் யாவும் பிரிவும், சோகமுமாகவே அமைகின்றன. இவர் படைக்கும் பாத்திரங்களின் வகை மாதிரியை அவரது வாழ்விலிருந்தே எடுத்தாள்கிறார் என்பதும் கதைகளில் பிரதிபலிக்கிறது.

இவரது அனுலா என்ற கதையில் அனுலா என்ற பாத்திரம் அஞ்சல் அலுவலகத்தில் பணியாளனைக் காதலிக்கிறாள். இருவரும் காதலித்துக் கொண்டிருக்கும் வேளையில் அவனுக்குப் பணிமாற்றல் கிடைத்துச் சென்று விடுகிறான். மறுபடியும் சந்திப்போம் என்ற உறுதியின்றிப் பிரிந்து சென்று விடுகிறான். அவளுக்குள் இவன் மீதான அன்பானது அழியாமல் இருக்கிறது. அவன் மீண்டும் அவளைச் சந்திக்க வருகிறான். ஆனால் அவள் அவனோடு பேச மறுக்கிறாள். அவளை அவன் நெருங்கும் போது விலகிச் செல்கிறாள். அதற்கான காரணத்தைக் கேட்கிறான். அவள் சொல்கிறாள். 'என்னைப் பிறிதொருவருக்குத் திருமணம் செய்து கொடுக்க என் தந்தை பேசி விட்டார்'என்கிறாள். இது அகமரபின் பிரிவுப் பாடல்களை நினைவுறுத்தும். அதே வேளையில் தலைவன் வருகைக்காகக் காத்திருக்கும் தலைவிக்குத் திருமணம் நிச்சயிக்கவிருப்பதாகத் தலைவனிடம் கூறித் தலைவியைப் பெண்கேட்கக் கூறும் தோழியை நினைவுறுத்துவதாகவும் அமைகிறது.

சங்கல்ப நிராகரணம் என்ற கதையில் திருமணமாகிப் பதினைந்து நாளில் பிரிந்து விடும் கதை நாயகனை நாயகி நினைந்து உருகுகிற பாங்கில் அமைகிறது. நாயகியின் பிரிவாற்றாமையை நீக்குவதற்காக நாயகன் அவளுக்குக் கடிதம் எழுதுகிறான். அதில் தான் வர இயலாமையால் தான் இருக்கும் இவ்விடத்தில் இருந்து உன்னைப் பார்க்கிறேன். நீ முல்லைப் பூ பூத்திருக்கும் செடியைப் பார் என்று எழுதுகிறான். அவ்வாறே அவளும் காண்கிறாள். அந்த முல்லைப் பூவில் அவன் தன் மனைவியைக் கண்டு உவப்பதாகக் காணப்படுகிறது. இது சங்கப் பாடலில்,

> கார் புறந் தந்த நீருண்ட வியன்புலத்துப்
>
> பல்ஆபுகு தருஉம் புல்லென் மாலை
> முல்லை வாழியோ முல்லை நீ நின்
> சிறுவெண் முகையின் முறுவல் கொண்டனை
> நகுவை போலக் காட்டல் தகுமோ" (குறுந்.162)

என்ற பாடலை நினைவுறுத்துகிறது. மாலை நேரத்தில் பூக்கும் முல்லைப் பூவைப் பார்த்துத் தலைவனோடு தான் இல்லாததைக் கேலி செய்வதாகக் கூறுகிற தலைவியின் பாங்கு முத்துலிங்கம் கதையின் இழையாக இருப்பதைக் காணலாம்.

ஈழப்போர் விடுதலைப் போராளியாகி விட்ட தன் மகளைத் தேடிக் கண்டடையும் தாய் அவள் இருக்கும் இடம் கடும் வனமாக இருப்பதைக் கண்டு பதை பதைக்கிறாள், இத்தகைய கொடிய வனத்திலா தன் மகள் சென்றாள் என்று. இது சங்கப் பாடலில் உடன் போக்கு சென்ற தன் மகள் சென்ற காட்டைத் தாய் கண்டு அதிர்ச்சியுறும் பாடலை வெளிக்காட்டுவதாக அமைகிறது.

"..........................................................................

வெயிற் கவின் இழந்த வைப்பின் பையுள் கொள
நுண்ணிதின் நிவக்கும் வெண் ஞெமை வியன்காட்டு
ஆள்இல் அத்தத்து அளியன் அவனொடு
வாள்வரி பொருத புண்கூர் யானை
புகர் சிதை முகத்த குருதி வார
உயர் சிமை நெடுங் கோட்டு உரும் என முழங்கும்
அருஞ்சுரம் இறந்தனள் என்ப பெருஞ்சீர்" (அக.145)

என்ற பாடலில் யானை போன்ற விலங்குகளும் முள் செடிகளும் உள்ள காட்டைத் தாண்டியா சென்றாள் என்று தாய் பதைபதைக்கிறாள். இது போன்ற செவ்வியல் தாக்கம் அ.முத்துலிங்கம் கதைகளில் சாதாரணமாகக் காணப்படுகிறது.

ஈழத்துப் படைப்பாளிகளின் படைப்புகள் ஒரு வகையில் பிரிவைப் பேசுகின்ற வகையில் அமைவது அவர்களது இழந்து போன தேசத்தின் மீதான ஏக்கமாகப் படைப்புகளில் வெளிப்படுவது இயல்பே. அ.முத்துலிங்கமும் பல்வேறு நாடுகளுக்குச் சென்றவர். அவ்வாறு சென்று வாழ்தல் என்பது சொந்த மண் என்ற பூர்வீகக் குடியிருப்பை விட்டுச் சென்ற மனநிலை அவருக்குள் இருந்து கொண்டு படைப்பில் வெளிப்படுகிறது. அதனால்தான் பிரிவும் ஏக்கமுமான கதாபாத்திரங்கள் அ.முத்துலிங்கத்தின் கதைகளில் ஆதார சுருதியாக இருக்கின்றன. தமிழிலக்கியப் பாரம்பரியமும் அவர்களிடமிருந்து வெளிப்படுவது இயல்பாக இருந்தாலும் பிரிவும் ஏக்கமும் கலந்த அவரது படைப்புகள் சங்க இலக்கியத்தின் சாரத்தை உள்வாங்கிய படைப்பு மனத்தை வெளிக்காட்டுகின்றன.

# ‘ஒரு குடும்பத்தின் கதை’யில் செவ்வியல் இலக்கிய எதிரொலி

முனைவர் இ.கி. இராமசாமி
3/191கவிமணி தெரு,
நாராயணபுரம், மதுரை

## அறிமுகம்

செ.கணேசலிங்கன் எழுதிய ‘ஒரு குடும்பத்தின் கதை’ ஒரு சோசலிச எதார்த்த நாவல். 1983 ஆம் ஆண்டு வாக்கில் ஈழத்திலிருந்து தமிழ்நாட்டுக்கு வந்த இடதுசாரிப் படைப்பாளியும் சீர்திருத்தச் சிந்தனையாளரும் முற்போக்குக் கலை இலக்கியவாதியும் ஆகிய செ.கணேசலிங்கன் எழுத்துப் போராளி. இந்த நாவல் தமிழ் ஈழ விடுதலைப் போராட்டத்தின் பின்னணியில் எழுதப்பட்டதல்ல. ஈழமண்ணின் மக்களையும் அரசியல் சமூகச் சூழ்நிலைகளையும் பற்றியதும் அல்ல. இதன் கதைக்களம் திருச்சியும் சென்னையும் ஆகும். சமகாலத்தில் தமது மண்ணில் நிகழ்ந்த கொடுமைகளைத் தவிர்த்துவிட்டு இப்படியொரு நாவலை ஏன் எழுதினார் என்று சிந்தித்துப் பார்க்க வேண்டும். ஓரினத்தின் ஆதிக்கத்திலிருந்து மற்றோர் இனம் விடுதலைபெறத் துடிப்பது போலப் பெண்ணினம் ஆண் வர்க்கத்திடமிருந்து விடுதலைபெறத் துடிப்பதே இந்தப் படைப்பாளருக்கு முதன்மை யானதாகத் தோன்றியிருக்கலாம். ஒரு குடும்பத்தின் கதை 1993 இல் குமரன் பதிப்பகத்தால் வெளியிடப்பட்டது. இந்த நாவல் வெளி வருவதற்கு 8 ஆண்டுகளுக்கு முன்பு இப்படைப்பாளர் எழுதிய கட்டுரைத் தொகுப்பான ‘பெண்ணடிமை தீர’ 1985 இல் வெளிவந்தது. பெண்ணடிமை தீர – கட்டுரை நூலில் சொல்லப்பட்ட பெண்ணியக் கருத்துக்களை அடியொற்றித்தான் இந்த நாவலைப் படைத்ததாக அவரே நூல் முன்னுரையில் குறிப்பிடுகின்றார்:

> “பெண்ணியம் சார்ந்து ஏற்கெனவே சில நாவல்களும் (உலகச் சந்தையில் ஒரு பெண், ஒரு பெண்ணின் கதை, விலங்கில்லா அடிமைகள்), பெண்ணடிமை தீர என்ற கட்டுரை நூலும் எழுதியுள்ளேன். முன்னரக் கூறுவதற்கு வாய்ப்புக்கிட்டாத சில கருத்துகளைக் கூறுவதற்காகவே இந்த நூலை எழுத முயன்றேன். இக்கருத்துகளை மேலும் விரிவாகக் கட்டுரைகளாகவும் எழுதியிருக்கலாம். ஆயினும்

> நாவல் வடிவம் ஆர்வமாகப் படிக்கத் தூண்டும் இலக்கிய வடிவம் என்பதாலேயே இவ்வாறு எழுத முனைந்தேன்.

பெண்ணியம் பற்றிய கருத்துகளைக் கூறுவதற்காகவே கதை பின்னப்பட்டது என்பதை அழுத்திக் கூற விரும்புகிறேன்" (ப.14).

**நோக்கம்**

ஒரு குடும்பத்தின் கதை நாவலில் காணப்படும் செவ்வியல் இலக்கியத் தாக்கம் அல்லது எதிரொலியைச் சுட்டிக்காட்டுவதே இக்கட்டுரையின் நோக்கம். இதில் வரும் கதைமாந்தர்கள் நடுத்தர வர்க்கத்தைச் சார்ந்தவர்கள். செ.கணேசலிங்கன் அப்பாத்திரங்களைத் தாம் ஒரு புலம்பெயர்ந்த தமிழ்ப்படைப்பாளியாக நினைத்துக்கொண்டு சித்திக்கவில்லை. இனப்படுகொலையும் போரும் நிகழ்ந்த போது புகலிடத்தமிழராக வந்த அவருக்கு இங்கு நிலவும் ஆணாதிக்கமும் பெண்ணடிமைத்தனமும் ஒருத்திக்கு ஒருவன், ஒருவனுக்கு ஒருத்தி அல்ல என்ற சிந்தனையும் பாதித்தன. இவ்வுண்மையினை மருதத்திணைப் பாடல்கள் உணர்த்துகின்றன. ஆனால் இந்தச் சமூகச்சட்டத்தை மேலும் செம்மையாக்கி ஒருவனுக்கு ஒருத்தி, ஒருத்திக்கு ஒருவன் என்ற விழுமியத்தை உணர்த்துகின்ற அகத்திணைப் பாடல்களே மிகுதியாகவுள்ளன. இந்த விழுமியத்தை உள்வாங்கித்தான் இந்திய உரிமையியல் சட்டங்கள் இயற்றப்பட்டுள்ளன. அந்த வகையில் தமிழ்ப்பண்பாடு, இந்தியாவுக்கே ஓர் இன்றியமையாத பங்களிப்பைச் செய்துள்ளது என்று சொல்ல முடியும்.

**தாலி இல்லாத திருமணம்**

இந்தக் கதையில் வரும் மாலதி – மாதவன் திருமணத்தில் மாலை மாற்றிக் கொள்ளுதல் மட்டும் நடக்கின்றது. மாதவன் திருமணத்தின் அடையாளமாக மணமகளுக்குத் தாலி கட்டவில்லை. புரோகிதரும் மந்திரமும் இல்லை. ஆணைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளும் உரிமை பெண்ணுக்கும், பெண்ணைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் உரிமை ஆணுக்கும் இருந்ததை, தொல்காப்பியக் களவியல் காட்டும். அதுபோல், மாலதியும் மாதவனும் வாழ்க்கைத் துணைகளாக அமைகின்றனர். இவர்களுடைய திருமணத்தில் மதச்சடங்குகள் ஏதும் இல்லை. நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் விருந்து படைக்கப் பட்டது. சீர் பற்றிய பேச்சே எழவில்லை. இரண்டு குடும்பத்தாரும் இசைந்தே இத்திருமணத்தை நடத்தினர்(ப.54). செவ்வியல் இலக்கியமாகிய அகநானூறு (86, 136 ஆம் பாடல்கள்) தமிழர் திருமணமுறையினை விளக்கிக் காட்டியது போன்று, மாலதி – மாதவன் திருமணம் நிறைவுபெற்றது. அகநானூற்றின் 86 ஆம் பாட்டு

திருமண் வீட்டுப்பந்தலமைப்பு, விருந்து, விளக்கு, வாழ்த்து, அணி பற்றியெல்லாம் பேசினாலும் திருமணத்தின் இன்றியமையாத நிகழ்ச்சியாகத் தாலிகட்டியதைச் சொல்லவில்லை. அன்று திருமணத்தில் மணமகளுக்கு மணமகன் தாலிகட்டும் வழக்கம் இருக்கவில்லை. சங்க காலத்தில் மட்டுமல்ல. கி.பி.10ஆம் நூற்றாண்டு வரை தமிழர் திருமணத்தில் தாலி கட்டும் வழக்கம் இல்லை என்று முடிவு கூறுகின்றார் கே.கே.பிள்ளை (தமிழக வரலாறு மக்களும் பண்பாடும், ப.135) என்பதும் ஈண்டுக் கருத்தில் கொள்ளத்தக்கது.

## மீட்டெடுப்பு

தாலி கட்டிக்கொள்ளாமல் திருமணம் செய்வது பண்டைய திருமணமுறைதான் என்பதை அறியாமல், மரபையும் பழமையையும் மறந்துவிட்ட மக்களுக்கு இது மரபு மீட்சியாகத் தோன்றவில்லை. மாறாக, புதுமையாக – சீர்திருத்தமாக – கலக்கத்தை உண்டாக்கும் நிகழ்வாகத் தோன்றுவதில் வியப்பில்லை.

மாலதி – மாதவன் இருவரும் குடும்பப்பொறுப்பைப் பகிர்ந்து கொண்டு வாழ்க்கையில் ஏற்படும் இன்ப துன்பங்களில் சமபங்கு ஏற்றுச் சமஉரிமையுடைய நண்பர்களாக வாழ்ந்து காட்டுகின்றனர். பொருளாதாரப் பலத்தால் தன் காலிலே நிற்கும் பலம் பெற்றவள் மாலதி. படிப்புடன் கூடிய அவர்கள் குடும்பத்தை ஜனநாயகக் குடும்பம் (ப.55) என்று குறிப்பிடுகின்றார் நாவலாசிரியர். திருமண முறையிலும் குடும்ப இயக்கத்திலும் இப்படிப்பட்ட மாற்றங்களைப் பொதுப்புத்தி கொண்டவர்கள் ஏற்க மாட்டார்கள், வெறுப்பார்கள். அவர்களுக்கு விருப்பமான நம்பிக்கை சார்ந்த பழக்கங்களை மட்டுமே கடைப்பிடிப்பர், கேட்டுமகிழ்வர். அதனால் கலை இலக்கியம் படைக்கும் புதுச்சிந்தனையாளர்கள் பொதுப்புத்தியாளர்களின் விமர்சனத்திற்கு ஆட்படாமல் இருக்க முடியாது. இந்த விமர்சனத்தைத் தாண்டி தாலியில்லாத் திருமணத்தை மீட்டெடுத்துக் காட்டியுள்ளார் நாவலாசிரியர் என்றே சொல்ல வேண்டும்.

## கற்பகம் - சங்கரன்

இந்தக் கதையில் வரும் கற்பகம் - சங்கரன் திருமணம் பெரியோரால் நிச்சயித்து நடத்தி வைக்கப்பெற்றது. கற்பகம் பழந்தமிழ் மரபுசார்ந்தவள். பெண்ணடிமைத்தனம் இன்னதென்றும், பெண்ணுரிமை இன்னதென்றும் அறியாதவள். வேலைக்குச் சென்று கொண்டிருந்த கற்பகம் தனக்கு மூன்றாம் குழந்தை பிறந்த பின்னர் அந்த வேலையை விட்டுவிட்டாள். குழந்தைகளை வளர்க்கும் பொறுப்பும் வீட்டுவேலைச் சுமையும் மிகுதியாகி விட்டது என்பதற்காக அவள் அந்த வேலையை விட்டுவிடவில்லை. அவளுடைய வீட்டு வேலைக்காரியாகிய மல்லிகாவுடன் அவள் கணவன் தொடுப்பு வைத்துக் கொண்டான். அந்தப் பெண், குடும்பத் தலைவியைப் போல அதிக உரிமை எடுத்துக்

கொண்டு அதைப் பேச்சிலும் செயலிலும் காட்டினாள். அவனோ, இரட்டை வேடம் போடத் தொடங்கினான். அவனுக்கு வீட்டுக்காரியைவிட வேலைக்காரி மேல் அதிக அக்கறை ஏற்பட்டுவிட்டது. அந்தப் பெண்ணை விலக்கிவிட முடிவு செய்த கற்பகம் தன் வேலையை விட்டுவிட்டாள். தாவணியோடு வந்த மல்லிகாவுக்குச் சேலைகட்டி மணப்பெண் போல வெளியேற்றினாள். தான் காயப்பட்டாலும் தன் மனவலியைக் காட்டிக் கொள்ளாமல் பழமரபில் ஊறிய குடும்பப்பெண்ணாக நடந்து கொண்டாள்.

### காதற்பரத்தை – பணிப்பெண்

அகத்திணை மாந்தர்களுள் சிலர் காமக்கிழத்தி; காதற்பரத்தை, சேரிப்பரத்தை போன்ற புறப்பெண்டிரோடு பரத்தமையொழுக்கத்தை மேற்கொண்டிருந்தனர் என்பதை மருதத்திணைப் பாடல்கள் விரிவாகப் பதிவுசெய்துள்ளன. அன்றைய சமூகம் ஆடவரின் பரத்தமை யொழுக்கத்தை ஏற்றுக்கொண்டதாகவே தெரிகின்றது. சில வேளை தலைவனைத் தோழி கடிந்துரைப்பதும், தலைவி அவன் மீது ஊடல் கொள்வதும், வருந்துவதும் நிகழ்ந்தாலும் அந்தத் தலைவனை அவளும் சமூகமும் ஏற்றுக்கொண்டனர். தலைவனுடைய காமக்கிழத்தியைத் தங்கையாக ஏற்றுக்கொண்ட தலைவியின் மனநிலையையும் காணமுடிகின்றது (தொல்.நூற்பா.1093). தெருவில் விளையாடிக் கொண்டிருந்த தன் புதல்வனை எடுத்துக் கொஞ்சிய காதற்பரத்தையைப் பார்த்து 'நீயும் அவனுக்குத் தாய்தான்' என்று சொல்லிய குடும்பத் தலைவியையும் காணமுடிகின்றது(அகம்.8).

*செவ்வியல் இலக்கியம் காட்டும் காமக்கிழத்தியும் காதற்பரத்தையும் இன்றைய நகரஞ் சார்ந்த குடும்ப வாழ்க்கையில் வேலைக்காரிகள் வடிவில் பரிணாம வளர்ச்சி பெற்றுள்ளனர் போலும்.* வேலைக்காரி காமக்கிழத்தியாக மாறிவிடுவது விதிவிலக்குத்தான் என்றாலும் இந்த வழக்கம் ஆணாதிக்கத்தின் எச்சம் ஆகும். கற்பகம்- சங்கரன் குடும்பத்தில் வேலைக்காரியாக வந்த மல்லிகா உரிமை மகளிர்போல நடந்து கொண்டதை இப்படித்தான் பார்க்க வேண்டி யுள்ளது. *சங்கரன் செய்த தவறைப் போல, வீட்டில் ஒரு வேலையாளை வைத்திருந்து கற்பகம் செய்திருந்தால் என்ன நடந்திருக்கும்.* ஆனால் கற்பகமே தன் மனக்குமுறலை அடக்கிக் கொண்டு செவ்வியல் இலக்கியத் தலைவி போல் நடந்து கொள்கிறாள். *'மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிரே'* என்ற கொள்கைவழி நிற்கிறாள்.

### செவ்வியல் இலக்கியத் தலைவி

கற்பகத்தின் தந்தையின் சாவு, கற்பகத்தின் உறவினர் வருகை ஆகிய சூழ்நிலைகளில் சங்கரன் நடந்து கொண்ட விதம்

கற்பகத்தைத் துயரத்தின் உச்சத்திற்கே தள்ளிவிடுகின்றது. அவள் *குடும்பம் ஒரு துன்பியல் நாடகமாக அமைந்து விடுகின்றது (ப.192)* என்றாலும் கற்பகம் அமைதியாகவே இருக்கின்றாள். இங்குத் தொல்காப்பியம் வகுத்துக்காட்டிய பெண்ணின் இயல்புகளை நினைத்துப் பார்க்க நேர்கின்றது. குடும்பத்தலைவிக்கு அடக்கம், அமைதி, நேர்மை, உண்மையினை வற்புறுத்தும் சொல்வன்மை, நல்லறிவு, பிறர்காணுதற்கு அருமை ஆகிய இயல்புகள் இருக்க வேண்டுமாம்.

*"செறிவும் நிறைவும் செம்மையும் செப்பும்*
*அறிவும் அருமையும் பெண்பாலான"*
*தொல்.பொருளியல்(15)*

கற்பகத்திடம் அடக்கமும் அமைதியும் நேர்மையும் இருந்தன. கணவனால் தனக்கு இழைக்கப்பட்ட கொடுமையினை ஊரறிய அவள் பேசவில்லை. தனக்கு உற்ற தோழியும் முற்போக்குச் சிந்தனை உடையவளுமான மாலதியிடம் மட்டும் பகிர்ந்து கொண்டாள்.

கணவன் சிலபோது தவறு செய்தாலும் அவனை வெறுத்தல் செவ்வியல் இலக்கியத் தலைவியின் இயல்பன்று. அன்பினால் அவனைத் திருத்தவே முயலுவாள். தலைவன் பரத்தையுறவு கொண்டு வருத்திய போதும் தலைவி அவனை வெறுத்து ஒதுக்கவில்லை. உழவன் வேரோடு பிடுங்கி வரப்பில் எறிந்தாலும் மீண்டும் செறுவிலே பூக்கும் நெய்தலைப் போலக் கணவன் இன்னா செய்யினும் அவனின்றி அமையாதவள் மனைவி.

*"கொடியோர் நிலம்பெயர்ந்து உறைவேம் என்னாது,*
*பெயர்த்தும் கடிந்த செறுவில் பூக்கும்*
*நின்ஊர் நெய்தல் அனையேம் பெரும!*
*நீ எமக்கு இன்னாதனபல செய்யினும்*
*நின்இன்று அமைதல் வல்லா மாறே"*
(குறுந்.309)

**கண்ணகியும் கற்பகமும்**

சிலப்பதிகாரத்தில்கூடக் கோவலன், மாதவி என்ற நாடகக் கணிகையிடம் சென்று வாழ்ந்ததில் தவறில்லை என்றே கூறப்படுகின்றது. கண்ணகியின் அடக்கமும் அமைதியும் கோவலனுடைய 'சலம்புணர் கொள்கையை'த் தடுக்கவில்லை (பெண்ணடிமை தீர, ப.32). செவ்வியல் இலக்கியப்பட்டியலில் இடம்பெறும் சிலப்பதிகாரக் காப்பியத் தலைவியான கண்ணகியின் இயல்பும் இந்தக் கதையில் வரும் கற்பகத்தின் இயல்பும் ஒப்புமை உடையன. அதற்காக, நகல் எடுத்தாற் போன்று அந்த ஒப்புமை இருக்கிறதென்று சொல்லமுடியாது. அப்படி இருந்தால் இரண்டு

படைப்புகளையும் வேறு வேறு இலக்கிய வகைமையாகக் கொள்ள இயலாது.

மாதவியை விட்டுவிட்டுத் தானே திரும்பினான் கோவலன். மல்லிகாவை வீட்டைவிட்டு வெளியேற்றினாள் கற்பகம். அதாவது சங்கரன், மல்லிகாவிடம் கொண்டிருந்த கள்ள உறவைத் துண்டித்தாள். அந்த நிகழ்ச்சிக்கு முன்போ, பின்போ தன் கணவனோடு சண்டை போட்டுக் கொள்ளவில்லை. இந்த அளவில் செவ்வியல் இலக்கியத் தலைவியின் இயல்பும் கற்பகத்தின் இயல்பும் ஒன்றுபட்டும் வேறுபட்டும் இருக்கின்றன.

செவ்வியல் இலக்கியங் காட்டும் தலைவனின் பரத்தையற் பிரிவைக் கண்டிக்காது அனுமதித்தமைக்குப் பழைய நிலஉடைமைச் சமூக அமைப்பு காரணம், ஆணாதிக்கம் காரணம், ஆண்கள் மிகச்சாதுரியமாகச் செய்துகொண்ட ஏற்பாடு காரணம். *ஆண்வழிச் சமூகத்தில் பாலுறவுக் கட்டுப்பாடு குடும்பப் பெண்களுக்கு மட்டுமே என்று விதிக்கப்பட்டிருந்த சமூகச்சட்டம் காரணம்.* இந்தக் கருத்தாடலின் தாக்கத்தை ஒரு குடும்பத்தின் கதை நாவல் மிக அழுத்தமாகச் சொல்லியுள்ளது. கற்பகம், கணவனைத் தொழுது எழும் பெண்ணாக இல்லாவிட்டாலும் அவனைச் சார்ந்து வாழும் குடும்பப் பெண்ணாக, குழந்தைகளைக் காத்து வளர்க்கும் தாயாகப் படைக்கப்பட்டுள்ளாள். அவள் குடும்பம்,

> *“அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை*
> *பண்பும் பயனும் அது”*

என்பது போலன்றி, ஒருவழிப்பாதையான அன்புடனும் பொருளாதாரப் பாதுகாப்புடனும் சமத்துவமற்ற ஏற்றத்தாழ்வுகளுடனும் அமைந்து விட்டது. ஆக, இந்த அளவில் ஒரு குடும்பத்தின் கதையில் பாத்திரப்படைப்புகளின் வாயிலாகச் செவ்வியல் இலக்கியத் தாக்கத்தை – எதிரொலியை உணரமுடிகின்றது.

**துணை நூல்கள்**


1. செ.கணேசலிங்கன், பெண்ணடிமை தீர, குமரன் பதிப்பகம், சென்னை, 1985.
2. செ.கணேசலிங்கன், ஒரு குடும்பத்தின் கதை, குமரன் பதிப்பகம், சென்னை, 1993.
3. கே.கே.பிள்ளை, தமிழக வரலாறு – மக்களும் பண்பாடும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2002.
4. சங்க இலக்கியம், ச.வே.சுப்பிரமணியன் (பதி.ஆ), மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 2006.

5. தொல்காப்பியம்- தெளிவுரை, ச.வே.சுப்பிரமணியன் (பதி.ஆ), மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1999.

*குறிப்பு:* செ.கணேசலிங்கன் 1981 முதலே இந்தக் கட்டுரையாளர் இ.கி.இராமசாமி, தோழர் க.கோவிந்தன் ஆகியோருக்கு அறிமுகமானவர். யாதவர் கல்லூரித் தமிழ்த்துறையிலும், மதுரைப் புரட்சிக்கவிஞர் வாசகர் வட்டத்திலும் 1983, 1984களில் தம் மகளோடு வந்து கலந்துரையாடல்களில் பங்குபெற்றவர். தமிழ் ஈழம், பெண் விடுதலை குறித்த தனித்த ஆழமான சிந்தனைகளை உடையவர்.

# மாத்தளை சோமுவின் கதைகளில் செவ்வியல் இலக்கியத் தாக்கம்

முனைவர் மு.பழனியப்பன்
தமிழாய்வுத்துறைத் தலைவர்
மன்னர் துரைசிங்கம் அரசு கலைக்கல்லூரி
சிவகங்கை

இலங்கைத் தமிழ் எழுத்தாளர்களின் படைப்புகள் கூர்ந்து நோக்கப்பட வேண்டியனவாகும். தொடர்ந்து தமிழக இலக்கிய வளர்ச்சியோடு இணைந்து போட்டி போட்டுக் கொண்டு வளர்ந்துவரும் இலங்கைத் தமிழ் இலக்கியம் தற்போது புலம்பெயர்ந்தோர் இலக்கியமாக உலக நாடுகளில் பரவி நிற்க வேண்டிய சூழலை அடைந்துள்ளது. கி.பி. 1983 ஆம் ஆண்டு முதல் இலங்கையின் அரசியல் சூழல் காரணமாகப் புலம்பெயர்தல் என்பது தவிர்க்க முடியாததாகிவிட்டது. புலம்பெயர்தல் வழியாகப் பல தரப்பட்டவர்களும் வெளியேற வேண்டிய சூழல் உருவானபோது எழுத்தாளர்களும் புலம்பெயர்ந்து எழுதத் தொடங்கினார்கள். கருணாமூர்த்தி, ஷோபா சக்தி, சை.பீர் முகம்மது, முருகபூபதி, மாத்தளை சோமு, அ.முத்துலிங்கம் போன்றோர் இன்றைய நிலையில் இலங்கையில் இருந்து, புலம்பெயர்ந்த தமிழ் எழுத்தாளர்களில் குறிக்கத்தக்கவர்கள் ஆவர்.

மாத்தளை சோமு தமிழகத்தின் பூர்வீகக் குடியினர் என்றாலும் இலங்கையில் வாழ்ந்தவர். தற்போது புலம்பெயர்ந்து ஆஸ்திரேலியாவில் குடியேறியுள்ளவர். தமிழகத்தின் திருச்சிராப்பள்ளியில் சில காலம் அவ்வப்போது உறைந்துவருபவர். நாவல்கள், சிறுகதைகள், பயணக்கட்டுரைகள், ஆய்வுக்கட்டுரைகள் எனப் பலவற்றை எழுதி வருபவர். இவரின் சிறுகதைகள் தொகுக்கப்பெற்று மாத்தளை சோமுவின் கதைகள் என்று இரு தொகுதிகளாக வந்துள்ளன. இவர் "வியக்கவைக்கும் தமிழர் அறிவியல்", "வியக்கவைக்கும் தமிழர் காதல்" ஆகிய கட்டுரை நூல்களைப் படைத்தளித்துள்ளார். இவ்விரு நூல்களும் செம்மொழித் தமிழ் இலக்கியங்கள் வழியாகத் தமிழர் அடையாளத்தை வெளிப்படுத்துவனவாகும். மேலும் இவர் திருக்குறளுக்கு அறிவியல் நோக்கில் ஓர் அகல உரையைத் தந்துள்ளார். இவை செம்மொழித் தமிழ் இலக்கியங்களின் மீது இவர் கொண்டுள்ள ஈடுபாட்டினை எடுத்துக்காட்டுவனவாக உள்ளன.

இக்கட்டுரையில் மாத்தளை சோமுவின் சிறுகதைகள் தொகுதி இரண்டு- என்ற தொகுப்பில் செவ்விலக்கியத் தாக்கம் பெற்ற கதைகள் மட்டும் எடுத்துக் கொள்ளப் பெற்று அவற்றின் திறம் ஆராயப் பெறுகின்றது.

> 'தமிழில் சங்ககால இலக்கியங்களாக முப்பத்தாறு நூல்கள் இருக்கின்றன. இவை தமிழின் தமிழரின் மூல வேர்கள். இவை ஊடாகத்தான் பழந்தமிழரின் அரசியல், நீதி, கொடை, வீரம், பண்பாடு, காதல், சமூகவியல், வணிகம், வானவியல், ஆடை, கட்டடக் கலை, மண்ணியல், நாட்டியம், இசை, மருத்துவம், அணிகலன், அளவியல், கடல் நாகரீகம், சிற்பக்கலை எனப் பலதுறைகளைப் பார்க்கின்றோம். அவற்றில் எல்லாம் அறிவியலின் பரிணாமமும் கலந்தே இருக்கிறது. பழந்தமிழ் நூல்கள் அடங்கிய இலக்கியங்கள் தமிழ்மொழியின் அடித்தளம். அவற்றில் மிக உன்னதமான கருத்துகள் குவிந்துள்ளன. ஆனால் இன்று ஆங்கில மற்றும் பிறமொழி மாயையில் தமிழர்கள் அவைகளைத் தொடுவதே தேவையில்லாத வேலை என்ற உணர்வு கொண்டவர்களாக இருக்கிறார்கள். தாய்மொழி என்பது மரபுவேர் கொண்டது. பழந்தமிழ் இலக்கியங்கள் இல்லாமல் தமிழ் இல்லை. இலக்கியம் மக்களுக்காக மக்கள் மேம்பட எழுதப்பட்டவை.

"(மாத்தளை சோமு, வியக்கவைக்கும் தமிழர் அறிவியல்.ப. 111) என்ற இவரின் கூற்று செம்மொழித் தமிழ் இலக்கியங்கள் மீது இவர் கொண்டுள்ள மதிப்பினை வெளிப்படுத்துவதாக உள்ளது. இதன் காரணமாக இவரின் படைப்புகளில் செம்மொழித் தமிழ் இலக்கியங்களின் தாக்கங்கள் நிறையக் காணப்பட வாய்ப்புண்டு என்பது தெளிவாகின்றது.

மாத்தளை சோமுவின் சிறுகதைகள் - தொகுதி 2 என்ற தொகுப்பு இவரின் முப்பத்து மூன்று கதைகளைக் கொண்டுள்ளது. இவற்றில் பல கதைகள் இலங்கையில் வாழ் மலையகத் தமிழர்தம் வாழ்க்கை முறையை நினைவுகூர்வன. இன்னும் சில கதைகள் இவரின் ஆஸ்திரேலிய வாழ்க்கை அனுபவங்களை உள்ளடக்கியன. ஒரு கதை இலங்கையின் வரலாறு சார்ந்து எழுதப் பெற்றுள்ளது. இக்கதைகள் அனைத்திலும் ஆங்காங்கே செம்மொழி இலக்கியத்தின் தாக்கங்கள் காணப்படுகின்றன என்றாலும் முழுக்கத் தாக்கம் பெற்ற ஐந்து கதைகள் இங்கு எடுத்தாளப்பெறுகின்றன.

**தமிழ்ப் பண்பாடும் அதை வெளிநாடுவாழ் தமிழர்கள் உயிரெனக் கருதுவதும்**

தமிழருக்கென்று தனித்த பண்பாடு உண்டு. அந்தப் பண்பாட்டை எழுத்து வடிவில் பதிவு செய்வன இலக்கியங்கள். இவ்விலக்கியங்கள் இப்பண்பாட்டைத் தலைமுறைதோறும் கடத்தும் கருவிகளாகவும் விளங்குகின்றன. தமிழ்ப் பண்பாட்டை மறந்த, மறுத்த வெளிநாடு வாழ் தமிழர்கள் அதனால் பாதிப்புகள் ஏற்படுகையில் தமிழர் பண்பாட்டின் தன்னிகரற்ற தன்மையை உணர்ந்து கொள்ளுகின்றனர்.

தமிழர்களின் பெயர்கள் நீளமானவை. அவற்றை வெளிநாடுகளில் சுருக்கி அழைப்பது என்பதும், சுருக்கி வைத்துக் கொள்வது என்பதும் தற்போது தவிர்க்க முடியாததாகிவிடுகின்றது. "இந்தத் தாயின் வயது" என்ற சிறுகதையின் நாயகி சாயத்ரி – காயா எனச் சுருக்கப்படுகிறாள். இவளின் பன்னிரண்டு வயது மகள் லாவண்யா. லாவண்யா வயதுக்கு வந்த நிகழ்வுடன் கதை தொடங்குகின்றது. காயாவும் அவளது கணவனும் பணம் சம்பாதிப்பதில் நாட்டம் செலுத்த லாவண்யா என்ற பன்னிரண்டு வயதுடைய குழந்தை வீட்டில் தனிமையில் பல நேரத்தைக் கழிக்கவேண்டியுள்ளது. குறிப்பாக மாலை நேரத்தில் இவளின் தனிமையை ஓர் அயலக இளைஞன் பயன்படுத்திக்கொள்கிறான். இதன் காரணமாக ஒரு நாள் பள்ளியில் இருந்து காயாவுக்கு அழைப்பு வருகிறது. இவ்வழைப்பின் வழியாக லாவண்யா கர்ப்பமாக இருப்பதாகப் பள்ளி நிர்வாகத்தார் ஐயமுறுகிறார்கள். மருத்துவர்கள் பரிசோதனையில் அது உறுதியும் ஆகிறது. லாவண்யாவிடம் காயா பேசிப்பார்த்தாள். ஆனால் "அவள் எனக்குப் பேபி பிறந்தால் அதனோடு விளையாடுவேன். எங்க அம்மா சிஸ்டர் பேபி தரவே இல்லை " என்று அறியாத பிள்ளையாய் இது குறித்து மகிழ்ச்சி அடைகிறாள்.

இக்கட்டான நிலையில் காயா சிந்திக்கிறாள். "அவள் இப்படி ஆவதற்குத் தானே ஒரு காரணமாகிப் போய்விட்டேனா? எப்போது பார்த்தாலும் பணம் என்ற சிந்தனை அதைத் தேட வேலை, ஓவர்டைம் என்று இருந்துவிட்டேன். எல்லாம் இங்கே இருக்கிற திமிரில் எவரோடும் ஒட்டாமல் ஒதுங்கி இருப்பதே உயர்வென்று வீட்டில் தாய்மொழியின் நினைவோ நிழலோ இல்லை. லாவண்யாவுக்குத் தமிழே தெரியாது. தாய்மொழி என்பதை வெறும் மொழி என்றே நினைத்து விட்டேனே! அது நமது அடையாளமாகவும் அதனோடு நமது வேர் ஊடுருவி இருப்பதையும் மறந்து விட்டேனே" ( ப. 189) என்ற தற்சிந்தனையில் தமிழ் மொழியின் தேவை, அம்மொழி சார்ந்த பண்பாடு போன்றவற்றின் தனித்தன்மையைக் குழந்தைகளுக்குச் சொல்லித் தந்திருக்க வேண்டிய அவசியத்தைக் காயா உணர்கிறாள்.

இதற்குப் பின் காயா, தனக்கும் தன் கணவனுக்கும் நடந்த திருமண நிகழ்வைத் தன் மகள் லாவண்யாவிற்குக் காணொளியாகக்

காட்டி அதன் வழியாகத் திருமணம், குடும்பம் போன்றவற்றின் இன்றியமையாமையை உணர்த்துகிறாள். இவற்றோடு மனநல மருத்துவரின் நல்லுரைகளும் சேர லாவண்யா தன் கர்ப்பத்தைக் கலைத்துவிட முன்வருகிறாள். அப்போது அவள் பேசிய மொழிகள் குறிக்கத்தக்கவை. "மம்மி! மம்மி! ஐ டோன்ட் வான்ட் பேபி. ஐ வான்ட் சிஸ்டர்" (ப. 191) என்ற அவளின் தொடர் ஆங்கில வடிவமானது என்றாலும் அதனுள் புதைந்திருப்பது தமிழ்ப் பண்பாடு. இதனை உணர காயா என்ற தாய் லாவண்யாவைக் காயப்பட வைக்கவேண்டிய சூழல் ஏற்பட்டுவிட்டது.

''வேர்கள்'' என்ற கதையும் தமிழ் மொழி, பண்பாடு ஆகியவற்றின் வேர்களை வெளிநாடுவாழ் தமிழர்கள் உணர, உணர வைக்க ஏற்ற கதையாகும். இதில் சுலோச்சனா (சுலோ) என்ற சிறுமி சிட்னி நகரத்தில் இருந்து தன் வேரை அறிந்து கொள்ளத் திருச்சிக்கு வருகிறாள். வந்த சில நாள்கள் வரை ஆஸ்திரேலிய நாட்டுச் சிறுமியாக விளங்கிய சுலோ, மெல்ல மெல்ல இந்திய, தமிழகப் பெண்ணாக மாறும் கதை இந்தக் கதையாகும்.

சுலோச்சனாவின் தந்தையும் தாயும் சுலோச்சனாவை அழைத்துக் கொண்டு அவரின் தாத்தா வீட்டிற்கு அதாவது திருச்சிக்கு வருகின்றனர். இதற்குக் காரணம் சுலோச்சனாவின் அப்பா ஒரு மொரீசியஸ்காரரை ஆஸ்திரேலியாவில் சந்தித்ததுதான்.

மொரீசியஸ்காரரின் தாத்தா இந்தியாவைச் சார்ந்தவர். தந்தை மொரீஷியஸை சார்ந்தவர். இவரின் மகள் ஒரு பிரெஞ்சு இளைஞனை மொரீசியஸில் திருமணம் செய்துவிட்டு மூன்றாண்டுகளில் அவனை விட்டுப் பிரிந்துவிடுகிறாள். இதற்குமேல் மொரீஸியசில் வாழ இயலாது என்று ஆஸ்திரேலியாவிற்கு அவர் குடி புகுந்துவிடுகிறார். " நாங்கள் எங்கள் பிள்ளைகளுக்கு எங்கள் மொழி, பண்பாடு என்பனவற்றைச் சின்ன வயதிலேயே சொல்லிக் கொடுத்திருக்க வேண்டும்.... நவ். டூ லேட்" (ப. 156) என்று தன் தவறை மொரீசியஸ்காரர் சுலோச்சனாவின் அப்பாவிடம் எடுத்துரைக்கிறார். இதனால் தன் மகளுக்குத் தன் நாட்டின் வேர் தெரியவேண்டும் என்று சுலோச்சனாவின் அப்பா அவளை அவளின் தாத்தா வீட்டிற்கு அழைத்துவருகிறார். "மொரீசியஸ்காரரின் அனுபவம் எல்லாம் எனக்கு விடுக்கப்பட்ட எச்சரிக்கையாகவே நினைத்தேன். அதன் பின்னர்தான் குடும்பத்தோடு நீண்ட விடுமுறையில் இந்தியா போக முடிவெடுத்தேன்" (ப. 157) என்ற சுலோச்சனாவின் அப்பாவின் முடிவு பண்பாட்டு வேர்களைத் தேடித் தன் மகளுக்காக அவர் தொடங்கிய தாய்நாட்டுப் பயணத்தை எடுத்துரைப்பதாக உள்ளது.

கதையின் வளர்ச்சியாகச் சுலோச்சனாவின் தந்தை ஒரு திருமணத்திற்காகக் கொழும்பு சென்று விட்டுத் தன் பழைய உறவுகளைச் சந்திக்க முயற்சி செய்து சிலரைக் கண்டும் சில

நாள்களில் வருகிறார். இச் சில நாள்களில் சுலோச்சனா தமிழ்ச் சூழலில் வளரும் குழந்தையாகிவிடுகிறாள்.

> "வீட்டுக் கேட்டைத் திறந்து உள்ளே கால் வைத்தபோது என்னால் நம்பவே முடியவில்லை. சுலோச்சனா எதிர்வீட்டு ஜமுனாவோடு தேங்காய்ச் சிரட்டையைச் சட்டியாக வைத்துச் சமைத்துக் கொண்டிருக்கிறாள். என்னைக் கண்டதும் மண் ஒட்டிய கரங்களோடு சுலோ ஓடிவந்தாள். அப்பா எனக்கு என்ன வாங்கியாந்த? ...சுலோவின் தமிழைக் கேட்பதில் மகிழ்ச்சியானேன். அதே சமயம் மகளுக்கு எதுவுமே வாங்கி வரவில்லை என்ற குற்ற உணர்வு என்னை அழுத்தியது. மெல்ல சுலோவைத் தூக்கி அணைத்து முத்தமிட்டேன். பிறகு அவள் தன்னை விடுவித்துக் கொண்டு விளையாடப் போய்விட்டாள்" (ப. 158) என்ற இந்தச் சொற்றொடர்கள் தாய்நாட்டிற்கு வருவதன் வழியாகக் குழந்தைகளுக்குப் பண்பாட்டின் வேர்களைக் கற்றுத் தந்துவிட இயலும் என்பதை உறுதிப்படுத்துகின்றன.

சங்க காலத்தில் அகநானூற்றுத் தலைவி ஒருத்தி சிறுசோறு சமைக்கிறாள்.

> "..கானல்
> தொடலை ஆயமொடு கடல்உடன் ஆடியும்
> சிற்றில் இழைத்தும் சிறுசோறு குவைஇயும்
> வருந்திய வருத்தம் தீர யாம் சிறிது
> இருந்தனமாக" (அகநானூறு 110 7-9)

என்ற இப்பாடலில் தலைவி சிறுவீடு கட்டிச் சிறு சோறு சமைக்கிறாள். இதனால் அத்தலைவிக்குக் களைப்பு ஏற்படுகின்றது. சிறு சோறு சமைக்கின்ற இந்நிகழ்வே மாத்தளை சோமுவின் கதையில் தேங்காய்ச் சிரட்டையில் மண்சோறு சமைப்பதாகத் தொடர்கின்றது. மண் விளையாட்டு வண்டல் விளையாட்டாகச் சங்க காலத்தில் விளையாடப்பெற்றுள்ளது.

"மணல் காண்தொறும் வண்டல்தைஇ" (நற்றிணை 9-8) என்று நற்றிணையிலும், "கோதை ஆயமொடு வண்டல் தைஇ ஓரை ஆடினும் உயங்கும் நின் ஒளி" (அகநானூறு 60:10-11) என்று அகநானூற்றிலும் பெண்கள் விளையாடும் வண்டல் விளையாட்டு இடம் பெற்றுள்ளது. அகநானூற்றுத்தலைவி மணல் விளையாட்டு விளையாடுவதன் காரணமாக அவளின் உடல் ஒளி குறைந்துவிடும் என்று- தாய் அவளை வீட்டுக்குள் அழைத்தாளாம். இங்கு சுலோ, ஜமுனா ஆகியோர் விளையாட்டு ஆயமாகின்றனர். அவர்களும்

வண்டல் தடவி விளையாடுகின்றனர். இவ்வாறு தொடர்கின்றது தமிழர் வண்டல் விளையாட்டு மரபு.

## முதுமையும் துயரமும்

முதுமைக் காலத்தில் அரவணைப்பு இன்றி முதியவர்கள் அனாதைகளாக விடப்படும் சூழல் இக்காலத்தில் எல்லா நாடுகளிலும் நடைபெறுகின்ற செயலாகிவிட்டது. இளமையின் துடிப்பான தன்மையையும், முதுமையில் கோல் ஊன்றி நடக்கும் தளர்ந்த தன்மையையும் பின்வரும் புறநானூற்றுப் பாடல் எடுத்துக்காட்டுகின்றது.

"இனிநினைந் திரக்க மாகின்று திணிமணற்
செய்வுறு பாவைக்குக் கொய்பூத் தைஇத்
தண்கய மாடு மகளிரொடு கைபிணைந்து
தழுவுவழித் தழீஇத் தூங்குவழித் தூங்கி
மறையென லறியா மாயமி லாயமொ
டுயர்சினை மருதத் துறையுறத் தாழ்ந்து
நீர்நணிப் படிகோ டேறிச் சீர்மிகக்
கரையவர் மருளத் திரையகம் பிதிர
நெடுநீர்க் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து
குளித்துமணற் கொண்ட கல்லா விளமை
அளிதோ தானே யாண்டுண்டு கொல்லோ
தொடித்தலை விழுத்தண் டூன்றி நடுக்குற்
றிருமிடை மிடைந்த சிலசொற்
பெருமூ தாளரே மாகிய வெமக்கே (புறநானூறு 243)

இளமையில் குளத்தில் பெண்களோடு கைகோர்த்து விளையாடியதும், மருத மரத்தின் மீது ஏறி ஆற்றில் குதித்து மூழ்கி, ஆழ்மணலை எடுத்து வந்தமையும் இன்று எண்ணிப் பார்க்கத்தக்கதாக உள்ளன. இன்றைக்கு முதுமை வந்துவிடக் கோலூன்றி நடந்து, இருமல் இடையில் பேசி வாழ்க்கையைக் கடத்த வேண்டி இருக்கிறது என்று இளமை, முதுமை ஆகியவற்றின் இயல்பினைத் தொடித்தலை விழுத்தண்டினார் பாடுகின்றார்.

இத்தகைய இரங்கத் தக்க முதுமையைப் பல இடங்களில் காட்டுகின்றார் மாத்தளை சோமு. அதில் ஒன்று அவருடைய "தேனீக்கள்" என்ற தலைப்பிட்ட கதையில் இடம்பெற்றுள்ளது.

"கிழவனுடைய தேகம் முழுவதும் வரிக்குதிரைபோல் காய்ந்த முந்திரிக் கோடுகளாகச் சுருங்கிக் கிடந்தது. அவன் மிகவும் தளர்ந்து போய்விட்டான். அது வயதின் காரணமோ வாழ்வின் காரணமோ தெரியவில்லை. கிழவன் கிழிந்த சட்டையும் இடுப்பில் வேட்டியும் கட்டியிருக்கிறான். வேட்டி என்ன நிறமோ? புதிதாக வாங்கும்போது வெள்ளை வெளேரென்று இருந்தது.

இப்போதோ காய்ந்த மண்ணின் நிறமாகக் கூடவே
வியர்வை நாற்றத்தையும் அள்ளி வீசியது."

என்ற அம்மாசிக் கிழவனைப் பற்றிய வருணனை தொடித்தலை விழுத்தண்டூன்றிய பாடலின் மறுபதிப்பாக விளங்குகின்றது.

முதுமையின் இரங்கத்தக்க சாயலை "நமக்கென்றொரு பூமி", 'ஒரு கதா பாத்திரத்தின் முடிவுறாத கதை", "அனாதைகள்" ஆகிய இத்தொகுப்பில் அடங்கியுள்ள கதைகள் வாயிலாகவும் அறியமுடிகின்றது.

**ஊஞ்சல்**

ஊஞ்சல் விளையாட்டை மையமாக வைத்து ஒரு கதையினைப் பொருளாதார ஏற்றத்தாழ்வுகளை உள்ளடக்கி மாத்தளை சோமு படைத்துள்ளார். கதையின் பெயர் "ஊஞ்சல் மரம்".

"அந்த ஊஞ்சலைக் கட்டி வைத்ததே அவர்கள்தான். முதலில் இலயத்தில் ஒரு காம்பராவில் ஒருத்தன் கயிற்றைக் கட்டி சும்மா ஆடினான். அதைப் பார்த்துவிட்டு ஒருவன் அந்த மரத்தில் கயிற்றைக் கட்டி ஆடினான். அப்புறம் எல்லோரும் ஆட ஒருநாள் கயிறு அறுந்து ஒருவன் கீழே விழுந்துவிட்டான்.

அதைப் பார்த்துவிட்டு அந்த இலயத்தின் கடைசிக் காம்பராவில் இருப்பவன்- டவுனுக்குப்போய்ச் சங்கிலியும் பலகையும் வாங்கி வந்து மரக்கொம்பில் ஊஞ்சல் அமைத்தான். மரத்தின் கீழே முளைத்திருந்த புற்களை அப்புறப்படுத்தி, மணல் கொண்டு வந்து கொட்டி இலயத்து வாண்டுகளின் அபிமானத்தைப் பெற்றான்" (ப. 80) என்பது மாத்தளை சோமு வரைந்துள்ள ஊஞ்சல் அனுபவம். இதே அனுபவம் சங்க இலக்கியப் பாடலொன்றில் கிடைக்கின்றது. "ஞாழல் ஓங்குசினைத் தொடுத்த கொடுங்கழித் தாழை வீழ்கயிற்று ஊசல் தூங்கி" (அகநானூறு 20 5-6) என்பது அப்பாடலடி.

சங்க காலச் சூழல். மரங்கள் அடர்ந்த ஒரு சோலை. அச்சோலையின் நடுவே ஒரு கொன்றை மரம். அம் மரம் பூத்துக் குலுங்குகின்றது. அந்த மரத்தின் பூவிதழ்கள் புலிநகம் போன்று காட்சியளிக்கின்றன. அதனால் அம்மரத்திற்குப் புலிநகக் கொன்றைமரம் என்றே பெயர் ஏற்பட்டுவிட்டது. அம்மரத்தில் ஒரு கிளை வாகாக வளைந்து வளர்ந்துள்ளது. அந்தக் கிளையில் மணமிக்க தாழை நாரால் செய்யப் பெற்ற ஊஞ்சல் உருவாக்கப்படுகிறது. இந்த ஊஞ்சல்தான் மலையகத்து இலங்கைத் தமிழர் தம் குடியிருப்பு அருகிலும் கட்டப் பெற்றுத் தமிழ்ச் செவ்விலக்கிய மரபு தொடர்கிறது.

கதை மேலும் தொடர்கிறது. பிள்ளைகள் ஊஞ்சலைத் தள்ளுவதும், ஊஞ்சல் ஆடுவதும் எனக் கோலாகலமாக இருந்த இந்த விளையாட்டைத் தேயிலைத் தோட்டத்தையாளும் துரையின் மகன் பார்க்கிறான். அவனுக்கு ஊஞ்சல் மீது ஆசை வருகிறது. துரைவீட்டில் உருட்டுக் கம்பிகளால் ஆன ஊஞ்சல் வந்து சேர்கின்றது. அங்கு துரைமகனுக்கு ஆடுவது சிறப்பாக இல்லை. எனவே அவன் உழைப்பாளர்களின் குழந்தைகள் ஆடும் ஊஞ்சலுக்கு வந்துவிடுகிறான். உழைப்பாளர் குழந்தைகளுடன் துரையின் மகனும் விளையாடுவதா என்று துரைக்கு அது கௌரவப் பிரச்சினையாகிவிடுகிறது. இதைத் தடுக்க என்ன செய்வது என்று எண்ணுகிறார் துரை. நாள்கள் நகருகின்றன. அவர் ஒருமுறை இந்த ஊஞ்சல் இருப்பிடத்தைக் கடக்கையில் ஒரு குழந்தை அவரின் மகிழ்வுந்தில் விழுந்துவிட விபத்து ஏற்பட்டு விடுகிறது. இதனையே காரணமாக வைத்துத் துரை ஊஞ்சல் விளையாட்டைத் தடுத்து நிறுத்த மரத்தை வெட்டிவிடச் சொல்கிறார்.

இந்த மரத்தின் இழப்பு அந்தப் பகுதியையே சோகத்திற்கு உள்ளாக்குகின்றது. மரம் குழந்தைகளை நேசித்தது. மனிதர்கள் நேசிக்கவில்லையே என்று கவலை கொள்கிறார் படைப்பாளர்.

> "அவர்கள் ஊஞ்சல் ஆடும்போது, அந்த மரம் அவர்களை ஆசிர்வதிப்பதுபோல் தன்னிடம் ஒட்டிக்கிடக்கிற காய்ந்த இலைகளைக் காகிதப் பூவாகச் சொரியும்..... குழந்தைகளை அந்த மரம் நேசிக்கிறது. இன்றைய குழந்தைகள் நாளைய சமுதாயம் அல்லவா! அதனால் அந்த மரம் அவர்களை ஆசீர்வதிக்கிறது. அது இந்த மனிதர்களுக்குத் தெரியவில்லையே" (ப. 81)

என்று படைப்பாளர் மக்களிடத்தில் மனிதநேயம் இல்லாநிலையை மரத்தின் வாயிலாக வெளிப்படுத்தி விடுகின்றார்.

### ஒருவாய் நீர்

ஒருவாய் நீருக்காகக் தவிக்கும் குடும்பத்தைப் பற்றிய கதை 'ஒருவாய் நீர்" என்பதாகும். இந்தத் தலைப்பே புறநானூற்றுப் பாடல் ஒன்றை உடனே நினைவுக்குக் கொண்டுவந்துவிடுகின்றது. செங்கணான் என்ற சோழ மன்னனுடன் நடந்த போரில் சேரமான் கணைக்கால் இரும்பொறை தோல்வியைத் தழுவுகிறான். கணைக்கால் இரும்பொறை செங்கணானின் சிறையில் கிடக்கிறான். அவனுக்குத் தண்ணீர்த் தாகம் ஏற்படுகின்றது. சிறைக்காவலர்கள் நீரைத் தராது காலம் நீட்டியபோது தன் தன்மானம் குறைவுபடுவதை அம்மன்னன் உணர்கிறான். காலம் நீட்டித்து வந்த அவ்வொருவாய்த் தண்ணீரை அவன் குடிக்க மறுத்துத் தாகத்துடன் உயிர்விடுகிறான்.

"..... வேளாண் சிறுபதம்
மதுகை இன்றி வயிற்றுத் தீத்தணியத்
தாம் இரந்து உண்ணும் அளவை
ஈன்மரோ இவ்வுலகத் தானே?" (புறநானூறுபாடல். 74)

என்ற இந்தப் பாடல் ஒருவாய் நீருக்காகத் தன்மானத்தை இழக்காத தமிழனின் தலைச்சிறந்த பாட்டு.

இலங்கையின் அரசவையில் சிங்களத்திற்கும், தமிழுக்கும் மொழிபெயர்த்துக் கருத்துகளை வெளிப்படுத்தும் அதிகாரி ஒருவர் தன் குடும்பத்துடன் உள்நாட்டுப் போர் காரணமாக ஒரு பதுங்கு குழியில் பதுங்கி இருக்கிறார். அப்பொழுது தொடர்ந்து சீறிவந்து ஏவுகணைகள் அவர்கள் இருக்கும் இடத்தைத் தாக்குகின்றன. இந்த இக்கட்டான சூழலில் அவரின் அன்பு மகள் ஒரு வாய்த் தண்ணீர் கேட்கிறாள். அவரால் பதுங்குக் குழிவிட்டு எழுந்து போக முடியாத நிலை. தொடர்ந்து வெடித்த ஏவுகணைகளுக்கு இடையில் பத்துநிமிட இடைவெளி கிடைக்கிறது. அந்த இடைவெளிக்குள் தண்ணீர் கொண்டுவர அவர் பதுங்குக்குழி விட்டு எழுகிறார். தண்ணீர் எடுக்கிறார். சொம்பில் எடுத்துக் கொண்டு குழி நோக்கிவருகிறார். இதன்பின் நடந்த நிகழ்வுகளைக் கதையாசிரியர் காட்டுவதை அப்படியே காட்டுவது நல்லது.

> "வேக வேகமாகப் பதுங்கு குழியை நோக்கி நடந்தார். திடீரென்று வெடிச்சத்தம் கேட்டது. மறுபடியும் எறிகணைகளை வீசத்தொடங்கி விட்டார்கள். வேறு வழியே இல்லை. வெளியே வந்தாகிவிட்டது இன்னும் சில அடிகள் எடுத்து வைத்தார். அதற்குள் 'விர்' ரென்று பறந்து வந்த ஓர் ஏவுகணையின் சிதறல் அவர் இடதுகையைப் பதம் பார்த்தது. வலது கையில் சொம்பு. அப்போதும் அந்தச் சொம்பை விடாமல் பதுங்கு குழியில் இறங்கினார். இடது கை விரல்களிலிருந்து ரத்தம் கொட்டுவதைக் கண்ட மனைவி அலறினாள் "அய்யோ! உங்கட ஒரு விரல் காணலியே?"
>
> ...மகள் அப்போதுதான் இடதுகையைப் பார்த்தாள். ஒரு விரல் இல்லை. ரத்தம் கீழே கொட்டியது. மெள்ள சொம்பைத் தூக்கிய மகள் அப்பாவிடம் வந்து அவரின் இடதுகையைத் தண்ணீர் ஊற்றிக் கழுவினாள்... கந்தசாமியின் கண்களில் இருந்து நீர்த்துளிகள் விழுந்தன. அது கண்ணீர அல்ல....." (ப. 270)

என்ற கதையாடலில் இரக்கம் படிப்பவர்க்கு மேலிடுகிறது. துயரமான நிகழ்வுகளுக்கு இடையில் மனித உயிர்கள் படும்பாட்டினை இந்தச் சிறுகதை அவலச் சுவை ததும்ப விவரிக்கின்றது.

மாத்தளை சோமு படைத்துள்ள கதைகளில் அவரின் கதையாடல் வளர்ச்சிமுறை மிகத் தெளிவாகத் தெரிகின்றது. அவரின் ஆரம்ப நிலைக் கதைகள், வளர் நிலைக்கதைகள் எனப் பல நிலைக் கதைகள் இத்தொகுப்பில் இடம்பெற்றுள்ளன. இவற்றின் வழியாக அவரின் படைப்பு வளர்ச்சி அறியத்தக்கதாக உள்ளது.

மலையக மக்களை முன்வைத்து அவர்களுக்கான இலக்கியத்தைப் படைத்துவரும் அவரின் முயற்சிக்கு அவரின் படைப்புகள் சான்றுகளாக அமைகின்றன. இலங்கை சார்ந்த மலையக இலக்கியம் என்ற பிரிவிற்கு இவர் தனிச் சான்றாகின்றார்.

புலம் பெயர் இலக்கியம் என்ற நிலையில் ஆஸ்திரேலிய நாட்டில் வாழும் இலங்கைத் தமிழர்தம் நிலையை இவரின் கதைகள் எடுத்துரைக்கின்றன. சிட்னி நகர வாழ்வைப் படம்பிடித்துக்காட்டும் அவரின் படைப்புத்திறன் புலம் பெயர்ந்தோர் இலக்கியத்தில் குறிக்கத்தக்க இடம்வகிக்கின்றது.

குறிக்கத்தக்க ஐந்து கதைகளை மட்டும் எடுத்துக்கொண்டு, அவற்றில் தொனிக்கும் செம்மொழிச் சாயல்களை இக்கட்டுரை எடுத்துரைக்கிறது என்றாலும் விடுதலாகியுள்ள கதைகள் அனைத்திலும் அங்கொன்றும் இங்கொன்றுமாகத் தமிழ்ச் செவ்விலக்கிய மரபு உறைந்துள்ளது என்பது மறுக்க இயலாத உண்மை. இலங்கைத் தமிழர்கள், மலேயத் தமிழர்கள், சிங்கைத் தமிழர்கள், மொரீசியஸ் தமிழர்கள் இன்று எல்லை தாண்டினாலும் அனைத்துத் தமிழர்களின் தாய்மண், தாய் இலக்கியம் செம்மொழி இலக்கியங்கள் என்பது கருதத்தக்கது. செம்மொழி இலக்கியங்களின் தாக்கம் திரைகடலோடிய தமிழர்கள் அனைவரிடத்திலும் ஏதாவது ஒருவகையில் தாக்கம் செலுத்துகின்றது என்பதற்கு மாத்தளை சோமுவின் கதைகள் நல்ல சான்றுகள்.

### துணை நூல்கள்

மாத்தளை சோமு, மாத்தளை சோமுவின் சிறுகதைகள் (தொகுதி2) இளவழகன் பதிப்பகம். சென்னை, 2003.

சுப்பிரமணியன்.ச.வே. சங்கஇலக்கியம் எட்டுத்தொகை தொகுதிகள் 1,2,3) மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 2010.

# கலாநிதி ஆ. கந்தையா படைப்புகளில் சங்க இலக்கிய சமயத் தாக்கம்

முனைவர் ப. இராதா
முனைவர் பட்ட மேலாய்வாளர்
செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனம்
தரமணி, சென்னை 600 113.

தமிழ்கூறும் நல்லுலகிலிருந்து உலகின் பல்வேறு நாடுகளில் தமிழர்கள் புலம்பெயர்ந்து வாழ்கின்றனர். தாம் புலம்பெயர்ந்து வாழும் நாடுகளிலெல்லாம், தாய்த் தமிழின் மொழியையும், கலையையும், இலக்கியப் பண்பாட்டுக் கூறுகளையும், சமயக்கூறுகளையும் போற்றிப் பாதுகாத்துப் பின்பற்றி வருகின்றனர். உலகில் பல நாடுகளில் வாழ்கின்ற தமிழர்கள், தங்களை அடையாளம் காட்டவும், தங்களின் தனித்தன்மையைப் புலப்படுத்தவும், தங்கள் பண்பாட்டுப் பெருமையைப் பாருக்குப் பகரும் முயற்சியில் தத்தம் படைப்புகளை மரபுநிலை மாறாமல் பரந்து விரிந்தநிலையில் படைத்துவருகின்றனர். அவர்களின் படைப்புகளில் சங்க இலக்கியத் தாக்கமும், சங்க இலக்கியச் சமயத்தாக்கமும் மேலோங்கியிருக்கின்றன. அத்தகைய சங்க இலக்கியச் சமயத்தாக்கம் புலம்பெயர்ந்த தமிழர் வாழ்விலும் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தி வருகின்றது. அந்தவகையில் ஆஸ்திரேலியாவில் புலம்பெயர்ந்து வாழ்ந்த கலாநிதி ஆ. கந்தையாவின் படைப்புகளில் காணப்படும் சமயத்தாக்கத்தைச் சங்க இலக்கியத்தோடு ஒப்பிட்டு, இக்கட்டுரை ஆராயமுற்படுகிறது.

## ஆஸ்திரேலியாவும் சமயமும்

தமிழர்கள் புலம்பெயர்ந்து வாழும் நாடுகளில் ஆஸ்திரேலியாவும் ஒன்று. இங்கு 1970 களிலிருந்து தமிழர் புலம்பெயரத் தொடங்கி யுள்ளனர். ஆஸ்திரேலியா உலகின் மிகச் சிறிய கண்டமாகவும், மிகப்பெரும் தீவை உடைய நாடாகவும் விளங்கிவருகிறது. இந்நாட்டில் ஆஸ்திரேலியப் பூர்வீகப் பழங்குடிகள் மிகத்தொன்மைக் காலந்தொட்டே வாழ்ந்து வருகின்றனர். இந்நாட்டில் இந்து, இசுலாம், கிறித்துவம், பௌத்தம் போன்ற சமயங்கள் பரவலாகக் காணப்படுகின்றன. இங்குப் பல்வேறு சமயத்தைச் சார்ந்த மக்களும், சமயங்களைக் கடந்து எந்தச் சமயத்தையும் சாராத மக்களும் தொடக்கக் காலந்தொட்டே

சூரியன், சந்திரன், விண்மீன், நெருப்பு, மழை, மலை, மரம் போன்ற இயற்கைப் பொருள்களை வழிபட்டு வந்துள்ளனர். எனவே இயற்கை வழிபாடு தமிழருடைய வாழ்வில் இன்றியமையாத இடம் வகித்துவருகிறது. இத்தகைய இயற்கை வழிபாடு ஆஸ்திரேலியப் பூர்வீகப் பழங்குடிகளிடம் இருந்து வருவதை ஆய்வாளர்கள் எடுத்தியம்பி வருகின்றனர்.

## தமிழ்ப் பண்பாட்டில் இயற்கை வழிபாடு

தமிழ்ப் பண்பாட்டில் இயற்கை வழிபாடு என்பது தொன்று தொட்டே இருந்து வந்துள்ளதற்கான சான்றுகள் தமிழ்ச் செவ்விலக்கியங்களில் காணப்படுகின்றன. தமிழ்ச் செவ்விலக்கியங்களில் ஒன்றான முல்லைப்பாட்டில் இயற்கை வழிபாட்டில், நெல்லோடு முல்லை மலர் தூவி வழிபடும் வழக்கம் இருந்துள்ளதை,

அருங்கடி மூதூர் மருங்கிற் போகி
யாழிசை இன வண்டு ஆர்ப்ப நெல்லொடு
நாழிகொண்ட நறுவீ முல்லை
அரும்பவிழ் அலரித் தூஉய்க் கைதொழுது
(முல்லைப். 7-10)

என்று பதிவு செய்யப்பட்டுள்ளது. சங்க கால இயற்கை வழிபாட்டில் ஆடவரைக் காட்டிலும் பெண்டிரே முக்கியப் பங்காற்றியுள்ளனர். இத்தகைய இயற்கை வழிபாடு பழங்குடியினரிடமும் காணப்படுகின்றது.

## இறை வழிபாடு

பழந்தமிழர்கள் முற்காலம் தொட்டே இயற்கைக்கு அடுத்த நிலையில் உருவமும், அருவமுமான பல்வேறு இறை உருவங்களை வணங்கி வந்துள்ளனர். தமிழர்கள், தமிழ் நிலங்களை நான்கு வகைப்படுத்தியும் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்று நிலங்களுக்குப் பெயரிட்டும் அந்நிலங்களுக்குரிய தெய்வங்களாக முறையே மாயோன், சேயோன், இந்திரன், வருணன் ஆகியோரை வழிபட்டும் வந்துள்ளனர். முல்லை, குறிஞ்சி ஆகியவற்றின் மாறுபாட்டால் ஏற்படும் நிலமான பாலையை ஐந்தாவது நிலமாக ஏற்றுக்கொள்ளும் போக்கும் தமிழிலக்கியப் போக்கில் காணப்படுகின்றது. எனவே, அந்நிலத்திற்குரிய தெய்வமாகக் கொற்றவையைச் சுட்டுகின்றனர். இதனைத் தொல்காப்பியம்,

மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
(தொல்.பொருள்.அகம்.5)

என்கிறது.

மாயோன் என்பது திருமாலையும், சேயோன் என்பது முருகனையும் குறிக்கின்றன. பெரும்பாலான தமிழர் வணங்கும் கடவுளாக முருகன் விளங்குகின்றார். இன்றைய நிலையில் முழுமுதற் கடவுளான விநாயகர், சிவன், பார்வதி போன்ற பெருந்தெய்வ வழிபாடும், துர்க்கை, கருப்பசாமி, சுடலை மாடன், மாரியம்மன், வீரன், காத்தவராயன் போன்ற சிறுதெய்வ வழிபாடும் தமிழகத்தில் நடைபெற்று வருகின்றன. இத்தகைய பெருந்தெய்வ வழிபாடு ஆஸ்திரேலியா கோவில்களிலும் நடைபெற்று வருவதாகக் கலாநிதி ஆ. கந்தையா தம்முடைய **ஆஸ்திரேலியாவில் இந்துக் கோயில்கள்** என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். மேலை நாடுகளில் பெரும்பாலும் முருகன், சிவன், திருமால், விநாயகர் போன்ற இறை வழிபாடுகள் மேற்கொள்ளப்படுகின்றன இருப்பினும் ஆஸ்திரேலியாவில் முருகவேள் வழிபாடு அதிக அளவில் காணப்படுகின்றது எனும் குறிப்புகள் ஆ. கந்தையா அவர்களது நூலின்வழி அறியமுடிகின்றது.

## அயல் நாடுகளில் சமயத் தாக்கம்

இலங்கை, மலேசியா, சிங்கப்பூர், பர்மா, ஆஸ்திரேலியா போன்ற நாடுகளில் வாழும் தமிழர்கள் தமிழ்ப் பண்பாட்டுக் கூறுகள் பலவற்றைப் பாதுகாத்து வருகின்றனர். தமிழ்க் கடவுளாகக் கருதப்படும் முருகன் வழிபாடும், முருகன் கோயில்களும் தமிழர்கள் வாழும் எல்லா நாடுகளிலும் இடம்பெற்றுள்ளன. சிவவழிபாடும், திருமால் வழிபாடும், முருக வழிபாடும், விநாயகர் வழிபாடும் ஆஸ்திரேலிய கோயில்களில் முறையாக நடைபெற்று வருகின்றன. மேலும் தெய்வீகச் சமயச் சடங்காகக் கருதப்படும் காவடி எடுத்தல், அலகு குத்துதல், தைப்பூசத் திருவிழா போன்ற சமயச் சடங்குகளும் பின்பற்றப்படுகின்றன. ஆஸ்திரேலியா வாழ் தமிழர்கள் தங்கள் குழந்தைகளுக்குப் பெரும்பாலும் தமிழ்ப் பெயர்களையும் சிறுபான்மை சமயப் பெயர்களையும் சூட்டி வருகின்றனர். இவ்வாறு, தாய் நாட்டை விட்டுப் புலம்பெயர்ந்து பிறநாடுகளில் வாழ்ந்தாலும், தமிழர்கள் தங்கள் பண்பாடு சார்ந்த சமயக்கூறுகளைப் பெருமளவில் பாதுகாத்து வருகின்றனர்.

## ஈழத்திலிருந்து புலம்பெயர்ந்தவர்கள்

ஈழத்திலிருந்து புலம்பெயர்ந்த தமிழர்கள் இங்கிலாந்து, பிரான்ஸ், ஜெர்மனி, சுவிஸ், இத்தாலி, டென்மார்க், நெதர்லாந்து போன்ற மேற்கு ஐரோப்பிய நாடுகளிலும், வடஅமெரிக்காவில் கனடாவிலும், மற்றும் ஆஸ்திரேலியாவிலும் மிக அதிகமாக வாழ்ந்து வருகின்றனர் அவ்வகையில் யாழ்ப்பாணத்தைப் பிறப்பிடமாகக் கொண்ட கலாநிதி ஆ. கந்தையா அவர்கள் ஈழத்துத் தமிழறிஞரும் எழுத்தாளரும் ஆவார். இவர் கட்டுரை, விமர்சனம், மொழிபெயர்ப்பு ஆகிய பணிகளில் ஈடுபட்டவர். இவர் தமிழ், ஆங்கிலம் ஆகிய இரு மொழிகளில் 45 நூல்களை எழுதி இருக்கிறார்.

இவர் தமிழுக்கும் தமிழ் இலக்கியத்துக்கும் ஆற்றிய பணிகளுக்காக 1996-ஆம் ஆண்டு இலங்கை அரசின் கலாகீர்த்தி விருதைப் பெற்றவர். சங்க இலக்கியத்தோடு சமயம் சார்ந்த "செவ்வேள்" எனும் நூலையும் இவர் எழுதியுள்ளார். மேலும் ஆஸ்திரேலியாவில் இந்துக் கோயில்கள், ஆஸ்திரேலியாவில் ஆடற்கலையும் பாடற்கலையும், திருக்கேதீஸ்வரம், இந்து சமயம் போன்ற நூல்களைப் படைத்துள்ளார். இவை போன்ற சமய நூல்கள் எழுதியமையால் மதுரை ஆதீனத்தால் சிவநெறித் தொண்டன் (1965) எனும் பட்டம் பெற்றவர். இவர் தமிழறிஞர் டாக்டர் மு. வரதராசனாருடைய மாணவர். 1956-இல் சென்னை பச்சையப்பன் கல்லூரியில் இவர் படித்தபொழுது தந்தையின் பரிசு எனும் நூலை எழுதியிருக்கிறார்.

## ஆ. கந்தையா படைப்புகளில் சங்க இலக்கியத் தாக்கம்

சங்க இலக்கியத்தில் காணலாகும் சேயோன் என்று சொல்லக் கூடிய முருகக் கடவுள் குறித்த செய்திகள் இவரது படைப்புகளில் அதிகமாகக் காணப்படுகின்றன. அதனடிப்படையில் செவ்வேள் எனும் நூலில் பரிபாடலில் காணப்படும் முருகன் குறித்த எட்டுப் பாடல்களை எடுத்துக் கொண்டு அப்பாடல்களுக்கு அருமையான சமய விளக்கம் அளித்திருப்பது, தமிழ்ச் சமய இலக்கியத்தின் மீதுள்ள ஈடுபாட்டைக் காட்டுவதாக அமைகிறது. மேலும் சங்க இலக்கியத்தில் எட்டுத்தொகையில் ஒன்றான பரிபாடலில் முருகன் குறித்த எட்டுப் பாடல்களுக்கு உரையும், உரையாசிரியர்கள் வகுத்த உரையை ஒப்பிட்டு அது தொடர்புடைய செய்திகளைத் தொகுத்து வழங்கியுள்ள திறமும் இவருக்குச் சங்க இலக்கியத்தின் மீதுள்ள ஆளுமையைப் புலப்படுத்துவதாக அமைகின்றன. 'குன்று, பரங்குன்று, தண்பரங்குன்று' என்று பரிபாடல் புலவர்கள் குறிப்பிட்டுள்ளனர். இக்குன்றத்தின் புனிதத்தன்மை காரணமாகப் பிற்பட்ட காலத்தில் 'திரு' என்ற அடை சேர்க்கப்பட்டுத் திருப்பரங்குன்றம் என்று வழங்குவதாயிற்று (செவ்வேள், ப. 21) என்று திருப்பரங்குன்றத்தின் சிறப்பினைக் கந்தையா எடுத்துக்கூறியுள்ள பாங்கும் நயமும் வியக்கத்தக்கதாகும்.

> "நக்கீரனுக்கு வழிகாட்டி அறுபடைவீடு அளித்த குமரன். முருகன் குறிஞ்சி நிலக்கடவுள். 'தமிழ்க் கடவுள்' என்று போற்றப்படுபவன். புலவர்கள் அப்பெருமானைச் செந்நிறக் கடவுளாகக் கண்டு போற்றியுள்ளனர். சேய் என்றும், செவ்வேள் என்றும், சேயோன் என்றும், செய்யோன் என்றும் புலவர்கள் பாடிப்பரவியுள்ளனர். அந்தப் பெருமானின்

கோயில்கள் பொதுவாகக் குன்றுகளிலேயே அமைந்திருப்பதைப் பார்க்கலாம்.”

(ஆஸ்திரேலியாவில் இந்துக் கோயில்கள், ப.36-37). ஆறுபடை வீடுகளில் முருகப் பெருமான் கோயில் கொண்டுள்ளதாகத் திருமுருகாற்றுப்படையில் கூறப்படுவதும் இங்குச் சுட்டத்தக்கதாகும்.

கந்தையா அவர்கள் சிட்னி முருகன் கோயில் வைகாசிக் குன்றில் இருப்பது சிறப்பு என்று கூறியுள்ளார். குறிஞ்சி நிலத்துக்குரிய சிறப்பியல்புகளைக் கொண்டுள்ளது என்று கூறின் அது பிழையாகாது (ஆஸ்திரேலியாவில் இந்துக் கோயில்கள், ப.46) என்றும்,

“வருணன் எட்டுத் திசைப் பாலகருள் மேற்குத் திசைப் பாலகன். கடலுக்கும் கடல்சார்ந்த நெய்தல் நிலத்துக்கும் உரியவன். மழைக்கு அதிபதி.”

(ஆஸ்திரேலியாவில் இந்துக் கோயில்கள், ப.32) என்றும் ஆசிரியரால் சுட்டப்பட்டுள்ளது. இவ்வாறு முருகனைப் பற்றியும் வருணனை பற்றியும் குறிப்பிட்டுள்ளது அவரின் சங்க இலக்கியப் பார்வையைப் புலப்படுத்தும் சான்றாகச் சுட்டலாம்.

முருக வழிபாடு

நக்கீரர் இயற்றிய திருமுருகாற்றுப்படையில் முருகப் பெருமானின் சிறப்பையும், அவர் அமர்ந்துறையும் அறுபடை வீடுகளையும், அவர் அடியவர்களுக்கு அருள்புரிந்த திறத்தையும் இலக்கிய நயத்தோடு விளக்கியுள்ளார். முருகப் பெருமான் சிறப்பைத் திருமுருகாற்றுப்படை சுட்டுவதோடு மட்டுமல்லாமல் பரிபாடல், பொருநராற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, குறுந்தொகை, மதுரைக்காஞ்சி போன்ற நூல்களிலும் செய்திகள் இடம்பெற்றுள்ளன.

முருகன் பகைவர்களிடம் எவ்விதமான தடையுமின்றிச் சென்று போர் புரியக்கூடியவன். அவன் கடம்ப மரத்தினைக் காவல் மரமாக உடையவன் என்பதனை,

கடம்பமர் நெடுவே ளன்ன மீளி
(பெரும்.75)

என்னும் பெரும்பாணாற்றுப்படை அடியாலும்,

முருகுறழப் பகைதலைச் சென்று (மதுரை.181)

என்ற மதுரைக்காஞ்சி வரியாலும் முருகன் போர்புரிந்த செய்தியினை அறிந்து கொள்ள முடிகின்றது. எனவே, முருக வழிபாடானது பண்டைத் தமிழர்களின் மரபுவழி பட்டிருந்தமையையும் அதுவே இன்று

ஆஸ்திரேலியா, மலேசியா போன்ற நாடுகளில் பெருமளவில் தமிழர்களின் மரபு வழியோடு மாறாமல் வணங்கப்பட்டு வருவதையும் அறிய முடிகின்றது.

ஆ. கந்தையா சிட்னி முருகன் கோயில், மெல்பன் முருகன் கோவில், கான்பரா ஆறுபடை முருகன் கோயில், பேர்த் பாலமுருகன் கோயில் என்னும் தலைப்புகளில் ஆஸ்திரேலியாவில் இடம்பெற்றுள்ள முருகன் கோயில்களை ஆஸ்திரேலியாவில் இந்துக் கோயில்கள் என்னும் நூலில் கொடுத்துள்ள பாங்கு இங்குச் சுட்டத்தக்கதாகும்.

முருகப்பெருமான் 'தமிழ்க் கடவுள்' என்றும், 'முத்தமிழால் வைதாரையும் வாழவைக்கும் தெய்வம்' என்றும் போற்றப்படுகிறான். தமிழ் மக்கள் மத்தியில் முருக வழிபாடு தொன்றுதொட்டு நிலவி வந்துள்ளது. தமிழர்கள் வாழ்கின்ற இடங்களில் எல்லாம் முருகன் கோயில்கள் உண்டு. (ஆஸ்திரேலியாவில் இந்துக் கோயில்கள், ப. 172) என்றும், முருகன் குறிஞ்சி நிலக் கடவுள்; ஆறு படைவீடுகளைப் போலவே அப்பெருமானின் கோயில்கள் குன்றுதோறும் இடம் பெற்றுள்ளதைக் காணலாம்; மேற்கு ஆஸ்திரேலியாவில் கோயில் கொண்டுள்ள முருகப் பெருமானின் கோயிலும் உயர்ந்த நிலப்பரப்பில் மணல் குன்றின் மேல் அமைந்துள்ளது. (ஆஸ்திரேலியாவில் இந்துக் கோயில்கள், ப. 180) என்றும், காட்டியுள்ள சான்றுகள் மிகப் பொருத்தமானதாகும்.

புலம்பெயர்ந்த தமிழர்கள் தாம் புலம் பெயர்ந்த நாடுகளில் தத்தம் படைப்புகளின்வழிப் பண்பாட்டுக்கூறுகளையும், இலக்கியக் கூறுகளையும், கலை இலக்கியக் கூறுகளையும், இலக்கியத்தின் வழி வெளிப்படுகின்ற சமயக் கூறுகளையும், சமயத்திற்குத் தொடக்கமான சங்க இலக்கியக் கூறுகளையும் புலப்படுத்தி வந்துள்ளனர். அவ்வகையில் கலாநிதி ஆ. கந்தையா படைப்புகளில் இந்தியச் சமயத் தாக்கமும், இலங்கைச் சமயத் தாக்கமும் இரண்டறக் கலந்துள்ளதை அறியமுடிகிறது.

**துணை நூல்கள்**


1. ஆ. கந்தையா, செவ்வேள்,1985.
2. ஆ. கந்தையா, ஆஸ்திரேலியாவில் இந்துக் கோயில்கள்.
3. தொல்காப்பியம்.
4. பரிபாடல்.
5. மதுரைக்காஞ்சி.
6. ஆ. கந்தையா, ஆஸ்திரேலியாவில் ஆடற்கலையும் பாடற்கலையும், 2005.

# சிங்கப்பூர்ச் சிறார் இலக்கியத்தில் செவ்விலக்கியத் தாக்கம்

முனைவர் கா. மணிகண்டன்
முனைவர் பட்ட மேலாய்வாளர்
செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனம்,
தரமணி, சென்னை 113

தமிழர்கள் காலந்தோறும் பல்வேறு காரணங்களுக்காகப் பல்வேறு நாடுகளில் புலம்பெயர்ந்துள்ளனர். தமிழர்கள் தங்களது தாய்நாட்டைவிட்டு மொழியாலும், இனத்தாலும், பண்பாட்டாலும், பழக்கவழக்கங்களாலும் மாறுபட்ட நாடுகளான மலேசியா, சிங்கப்பூர், இந்தோனேசியா, தென்னாப்பிரிக்கா, மொரீசியஸ், பிஜி, மியான்மர், ஐரோப்பா, அமெரிக்கா, ஆஸ்திரேலியா, கனடா போன்ற நாடுகளில் புலம்பெயர்ந்து வாழ்ந்து வருகின்றனர். அவ்வாறு தமிழர்கள் நாடு, மொழி, இனம், பண்பாடு, பழக்கவழக்கங்கள் போன்றவற்றால் வேறுபட்ட நாடுகளில் வாழ்ந்தாலும் தம்முடைய தாய்நாட்டையும் தாய்மொழியையும், தமிழ்ப் பண்பாட்டையும் பழக்கங்களையும் மறந்துவிடாமல் அவற்றைத் தாம் புலம்பெயர்ந்த நாடுகளில் பறைசாற்றி வருகின்றனர் என்பதும், இவை புலம்பெயந்தோர் படைப்புகளில் முக்கியப் பாடுபொருள்களாக விளங்கி வருகின்றன என்பதும் மகிழ்ச்சிக்குரியதாகும்.

தமிழர் புலம்பெயர்ந்து வாழும் நாடுகளில் தமிழர்களுடைய படைப்புகளையும் பண்பாடுகளையும் மதித்துப் போற்றும் நாடுகளில் சிறப்பான நாடாகச் 'சிங்கப்பூர்' விளங்கிவருகிறது. சிங்கப்பூர் மண்ணில் வாழும் தமிழரின் படைப்பிலக்கியங்களில் குறிப்பாகக் 'குழந்தை இலக்கியம்' அல்லது 'சிறார் இலக்கியம்' சிறப்பான இடம் வகித்து வருகின்றது. இதனை முனைவர் ஏ ஆர் ஏ. சிவகுமாரன் சிங்கப்பூர்த் தமிழ்க் குழந்தை இலக்கியம்-திறனாய்வு என்ற நூலில் சுட்டியுள்ளார். மேலும் இந்நூலில் சிங்கப்பூர்த் தமிழ்ப் படைப்பாளர்களின் படைப்புகளான குழந்தைக் கவிதைகளைத் தொகுத்துத் திறனாய்வு செய்துள்ளார். இந்நூலில் இடம்பெறும் பல்வேறு கவிதைகளில் சங்க இலக்கியத்தின் சாயல் படிந்திருப்பதைக் காணமுடிகிறது. எனவே சிங்கப்பூர்த் தமிழ்ச் சிறார் இலக்கியங்களைச் செவ்விலக்கியங்களோடு ஒப்பிட்டு, அக்கவிதைகளில் செவ்விலக்கியத்தாக்கம் அமைந்துள்ள பாங்கை வெளிக்கொணர்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

## சிங்கப்பூர்த் தமிழ்க் குழந்தை இலக்கிய வளர்ச்சி

சிங்கப்பூர்த் தமிழ் இலக்கியத்தினூடே ஒரு பிரிவாகத் தமிழ்க் குழந்தை இலக்கியமும் வளர்ச்சியடைந்துள்ளது. குழந்தை

இலக்கியம் என்பது குழந்தைகளுக்காகக் குழந்தைகளின் மகிழ்ச்சியை மையமாகக் கொண்டு பெரியோர்களால் இயற்றப்படும் படைப்பாகும் என்று ஏ ஆர் ஏ. சிவகுமாரன் (ப.21) சுட்டுகின்றார். சிங்கப்பூர்த் தமிழ்ப் படைப்பாளர்கள் தமிழ் இலக்கியம் படைப்பதோடு தமிழ்க் குழந்தை இலக்கியத்தையும் படைத்து வருகின்றனர். 1980-களுக்கு முன்பு வரை எந்தக் குழந்தைப் படைப்புகளும் வெளிவரவில்லை. 1981முதல் 2000 வரையிலான காலக் கட்டத்தில்தான் 9 கவிஞர்களால் 15 கவிதைத் தொகுதிகள் எழுதி வெளியிடப்பட்டுள்ளன. சிங்கப்பூர்த் தமிழ்க் குழந்தை இலக்கியப் படைப்புகளைப் படைத்த படைப்பாளர்களில், 1. முல்லை வாணன், 2. முத்துமாணிக்கம், 3. க.து.மு. இக்பால், 4. பரணன், 5. இளமாறன், 6. முருகதாசன், 7. பெரி.நீல. பழநிவேலன், 8. ந.பழநி வேலு, 9. ஆ. பழனி ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர்.

தமிழ்க் குழந்தை இலக்கியக் கவிஞர்கள் தங்கள் கவிதைகளை வார, மாதஇதழ், தமிழ்ப் பத்திரிக்கை, தமிழ் வானொலி, தொலைக்காட்சி போன்றவற்றில் படித்தும், படைத்தும், பாடியும், வருகின்றனர். பெரும்பாலான குழந்தைப் பாடல்கள் சிங்கப்பூர் வானொலி நிலையப் 'பாடிப் பழகுவோம்' நிகழ்ச்சிக்காக எழுதப்பட்டதாகவே முனைவர் ஏ ஆர் ஏ. சிவகுமாரன் குறிப்பிடுகின்றார் (ப.188) சிங்கப்பூர்க் கவிதைகள் வானொலியின் அலைவரிசைகளைத் தாண்டி இன்று வலை தளங்களிலும் உலவுகின்றன.

## செவ்விலக்கியங்களில் சிறார் குறித்த பதிவுகள்

குழந்தை அல்லது சிறார்களைக் குறிப்பதற்கு இலக்கியத்தில் மழலை, குழந்தை, குழவி, மகவு, பிள்ளை, புதல்வர், சிறுவர், சிறார் போன்ற சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. தொல்காப்பியர் மரபியலில் குழவி, மகவு என்பன மக்கட்குரிய இளமைப்பெயர்கள் என்பதனை,

குழவியும் மகவும் ஆயிரண் டல்லவை
கிழவ அல்ல மக்கட் கண்ணே (தொல். பொருள். மரபு. 23)

என்ற நூற்பாவில் சுட்டியுள்ளார். 'மழ' என்ற அடிச்சொல்லும், 'குழ' என்ற அடிச்சொல்லும் இளமைப் பொருளைக் குறிக்கும் என்பதனை,

மழவும் குழவும் இளமைப் பொருள(தொல். சொல். உரி. 15)

என்ற நூற்பா தெளிவுபடுத்துகிறது. இந்நூற்பாவின் அடிப்படையில் நோக்கும் போது 'மழ' என்ற சொல்லடியாகப் பிறந்தது 'மழலை' என்று அவர்களுடைய வளர்பருவ நிலைக்கேற்பச் செவ்விலக்கியங்களில் சுட்டப்பட்டுள்ளதையும் காணமுடிகிறது.

ஈன்றோள் நீத்த குழவி போல (புறம். 230-7)

தாய் முலை தழுவிய குழவி போல (பட்டினப். 66)

என்று குழவி குறித்துக் கூறப்பட்டுள்ளதையும்,

மழலை இன்சொல் (அகம். 275-7)

என்று மழலை குறித்துச் சுட்டப்பட்டுள்ளதையும்,

மரங்கொல் தச்சர் கைவல் சிறாஅர் (புறம். 206-11)

உவருணப் பறைந்த ஊன்றலைச் சிறாஅர் (அகம். 387-4)

என்று சிறார் குறித்த செய்திகளும் செவ்விலக்கியங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளன.

சிறார் இலக்கியத்தில் 'சிங்கப்பூர்'

சிங்கப்பூரச் சிறார் இலக்கியங்களின் பாடல்களில் நாடு, மொழி, இனப்பற்றைச் சிறுவர்களுக்கு இளமையிலேயே ஊட்டும் பொருட்டுப் படைப்பாளர்களால் படைக்கப்பட்டுள்ளன. இதனைப் பின்வரும் கவிதைவழி அறியமுடிகிறது.

சின்னஞ் சிறுநாடு! - வளம்
சீர் நிறைந்த நாடு!
கண்மணிபோல் மக்கள் போற்றும்
காவியப் பொன் நாடு

அருமை! நான்கு மொழிகள் ஒன்றாய்
ஆளும் திருநாடு!
அமைதி செழிப்பு அழகு யாவும்
அமைந்து வளரும் நாடு.

உழைப்புக்கொரு சின்னமாக
உலகம் போற்றும் நாடு!
உலகக் கலைகள் யாவும் நன்றே
உயர்ந்து வாழும் நாடு!

துப்புறவில் வெற்றி கொண்ட
தூய்மை வளர் நாடு!
ஒப்புரவில்லாத நாடு!
உலகிலுயர்ந்த நாடு!

(சிங்கப்பூர்த் தமிழ்க் குழந்தை இலக்கியம் திறனாய்வு. ப. 63)

என்ற கவிதை சிங்கப்பூர் நாட்டின் பெருமையையும், வளத்தையும், அரசையும், மக்களின் உழைப்பையும், நாட்டின் தூய்மையையும் புலப்படுத்தியுள்ளதைக் காணமுடிகிறது. இதுபோல் தமிழ் நாட்டின் பெருமையையும், சிறப்பையும், புகழையும் பாரதி,

நீலத்திரைக் கடலோரத்திலே நின்று
நித்தம் தவம் செய்யும் குமரி எல்லை வட
மாலவன் குன்றம் இவற்றிடையே புகழ்
மண்டிக் கிடக்கும் தமிழ் நாடு (பாரதியார் கவிதைகள்)

என்ற கவிதையில் கூறியிருப்பதும் இங்கு ஒப்புநோக்கத் தக்கதாகும்.

சிறார் இலக்கியத்தில் மொழிப்பற்று

சிங்கப்பூரச் சிறார்களுக்கு மொழிப்பற்றை உணர்த்த வேண்டி அங்கு வாழும் கவிஞர்கள் தாய்மொழியாகிய தமிழ்மொழியின் இன்றியமையாமையைத் தம் கவிதைகளில் படைத்தளித்துள்ளனர். கவிஞர் முத்து மாணிக்கத்தின் 'தேன்சிட்டு' நூலில் தாய்மொழியின் மாண்பை,

எந்த மொழி கற்றாலும்
எங்கிருந்து வாழ்ந்தாலும்
சொந்தமொழி கற்றுக்கொள்ள
வேணுமடா (சி.த.கு.இ.தி. ப.37)

என்ற கவிதையிலும், சிங்கைக் கவிஞர் பரணன் அவர்களுடைய 'மழை' என்ற கவிதை நூலில்,

அன்னை சொல்லும் அன்புமொழி
அப்பா கூறும் அறிவுமொழி
அண்ணன் பேசும் அழகுமொழி
அதுதான் எங்கள் தமிழ்மொழி (சி.த.கு.இ.தி. ப.112)

என்று தாய்மொழியின் சிறப்பைச் சிறார்களுக்கு வலியுறுத்தி யுள்ளார்கள்.

பாரதி, பாரதிதாசன் கவிதைகளில் தமிழ்மொழி தமிழர்க்கு உயிராகவும், விழியாகவும், தேனாகவும், பாலாகவும் விளங்குவதைத் தத்தம் கவிதைகள்வழி வெளிப்படுத்தியுள்ளனர்.

தமிழுக்கும் அமுதென்று பேர் - அந்தத்
தமிழ் இன்பத் தமிழ் எங்கள் உயிருக்கு நேர்
(இன்பத் தமிழ்)

என்று பாரதிதாசனும்,

சொல்லில் உயர்வு தமிழ்ச்சொல்லே! அதைத்
தொழுது படித்திடடி பாப்பா (பாப்பா பாட்டு)

என்று பாப்பா பாட்டில் பாரதியாரும் தமிழின் மேன்மையை எடுத்தியம்பியுள்ளதைச் சிங்கப்பூரச் சிறார் இலக்கியத்தோடு ஒப்பிட்டுக் காணமுடியும்.

சிறார் இலக்கியத்தில் கதிரவன் - விண்மீன்

சிங்கைச் சிறார் இலக்கியத்தில் இயற்கைப் பொருள்களான கதிரவன் பற்றியும் விண்மீன் பற்றியும் குழந்தைகள் இவற்றை வியந்து பாடிடும்வண்ணம் இயற்றியுள்ளனர். கதிரவன் கடலில் தோன்றித் தன் ஒளிக்கதிர்களைப் பூமியில் பரப்பி உயிர்கள் வாழக் காரணமாகின்ற உண்மையை,

கீழைக் கடல்மேல் தோன்றி-ஒளிக்
கையை நிலத்தில் ஊன்றி

கோலம் புரியும் கதிரே - எதிர்
குலத்தின் அரசே வாழ்க
ஆழ்கடல் நீர் பற்றி - மழை
அளிக்கும் வெயிலே வாழ்க (சி.த.கு.இ.தி. ப.141)

என்ற பெரி.நீல. பழநிவேலனின் 'செவ்வானம்' கவிதை அமைந்துள்ளது. இக்கவிதையில்,

உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு (திருமுருகு. 1-2)

என்ற திருமுருகாற்றுப்படையின் வரிகளிலும்,

மாக்கடல் நிவந்தெழு தரும்
செஞ்ஞாயிற்றுக் கவினை மாதோ (புறம். 4)

என்ற புறநானூற்று வரிகளிலும் இடம்பெற்றுள்ள கதிரவனின் எழுச்சி குறித்த சங்கக் கவிதைகளின் சாயலை மேற்காணும் சிறார் இலக்கியத்தில் படிந்துள்ளதை ஒப்பிட்டுக் காணமுடிகிறது. எனவே, கதிரவன் கடலிலிருந்து தோன்றும் அழகுக் காட்சியை இவ்விரு கவிதைகளும் புலப்படுத்துகின்றன.

விண்மீன்கள் இரவு வானில் மின்னும் தன்மையைச் சிங்கப்பூர்ச் சிறார் இலக்கியத்தில்,

மினுக்கல் மினுக்கல் வானில்பார்
விந்தை அவற்றைச் செய்தார் யார்?
கணக்கில் கோடி வானில் மின்னும்
கம்மல் தானோ விண்மீன்கள் (சி.த.கு.இ.தி. ப.140)

என்ற கவிதையில் விண்மீன் படம்பிடித்துக் காட்டப்பட்டுள்ளது. நாமக்கல் கவிஞரின்

சூரியன் வருவது யாராலே
சந்திரன் திரிவது எவராலே
காரிருள் வானில் மின் மினிபோல்
கண்ணில் படுவன அவை என்ன?
(நாமக்கல் கவிஞர் கவிதைகள்)

என்ற கவிதையில் விண்மீன்களைப் பற்றிப் பாடப்பட்டுள்ள விதம் ஒப்புநோக்கத்தக்கதாகும். எனவே குழந்தைகளுக்கு விண்மீன்கள் காட்சிப்பொருளாய் விளங்கும் விதத்தைச் சிங்கப்பூர்க் குழந்தைப் பாடல்களின்வழியும் தமிழகத்தின் நாமக்கல் கவிஞர் கவிதை வழியும் பொருத்திப் பார்க்க முடியும்.

சிறார் இலக்கியத்தில் தாய்

சிங்கப்பூர்ச் சிறார் இலக்கியத்தில் உறவுகளில் தலைமை உறவான தாய் உறவு பற்றியும், தாயின் அன்பு, அரவணைப்பு, தியாகம், தாய்மை பற்றியும் அந்நாட்டுக் கவிதைகளில் பேசப்பட்டுள்ளன. தாயைக்

குறிக்கும் அம்மா என்ற சொல்லும், அன்னை என்ற சொல்லும் முறையே பரணன் மற்றும் க.து.மு.இக்பால் கவிதைகளில் இடம் பெற்றுக் கவியின்பத்தைத் தருகின்றன.

அம்மா மிகவும் நல்லவள்
ஆசை என்மேல் உள்ளவள்
இனிய கதைகள் சொல்பவள்
ஈகை உள்ளம் கொண்டவள் (சி.த.கு.இ.தி. ப.45)

என்ற கவிதை குழந்தைக்கு அம்மாவைப் பற்றியும் தமிழ் அகரவரிசை முறை பற்றியும் விளக்கும் கவிதையாக விளங்குகிறது.

கண்ணனைப் போல என்னையே
காத்து வளர்க்கும் அன்னையே
எனக்குத் துன்பம் என்றிடில்
இதயம் மிகவும் வாடுவாய்
எனது மகிழ்ச்சி ஒன்றையே
இரவும் பகலும் நாடுவாய் (சி.த.கு.இ.தி. ப.49)

என்று தாயின் தாய்மைப் பண்புகள் வடிக்கப்பட்டுள்ளன. இவ்விரு கவிதைகளில் இடம்பெறும் தாயின் ஈகை உள்ளமும், காத்து வளர்க்கும் அருமையும், இதயம் மிகவும் வாடும் இரக்கப் பண்பும், குழந்தையின் மகிழ்ச்சி ஒன்றையே நாடும் பரந்த உள்ளமும், செவ்விலக்கியத்தின் சாயல்கள் எனலாம்.

ஈன்று புறந்தருதல் (புறம். 312-1)

ஈன்ற பொழுதின் பெரிதுவக்கும் (குறள் 69)

ஆய்பெருஞ் சிறப்பின் அருமறை கிளத்தலின்
தாயெனப் படுவோள் செவிலியாகும் (தொல்.பொருள். 124)

என்பன போன்ற செவ்விலக்கிய வரிகளின் சாயல் மேற்காணும் கவிதைகளில் இடம்பெற்று அக்கவிதையைக் கவினுறச் செய்கின்றது.

## சிறார் இலக்கியத்தில் தமிழ்ச் சான்றோர்

### 1. அவ்வையார்

செவ்விலக்கியங்களில் தமிழ் மூதாட்டி அவ்வையார் பற்றியும் அவர் புனைந்த செவ்வியல் பாடல்கள் பற்றியும் அவர் கூறிய அறிவுரை பற்றியும் நீதிகள் பற்றியும் சமுதாயத்தில் மண்டியிருந்த உயர்வு தாழ்வு என்ற பேதங்களை நீக்கியது குறித்தும் முத்து முத்தான வார்த்தைகளால் கவிதை மொழிந்தது குறித்தும் சுட்டப்பட்டுள்ளன. குழந்தைகளை நல்வழிப்படுத்த அறக்கருத்துக்களையும், நீதிக்கருத்துகளையும் தம்முடைய ஆத்திசூடி, கொன்றைவேந்தன், நல்வழி, மூதுரை முதலிய இலக்கியங்களில் கூறியுள்ளார். அக்காலத்தில் மக்களையும் மன்னனையும் நெறிப்படுத்தி அவர்களுக்கு, உலகியல் அறிவை ஊட்டியதில் அவ்வையின் பங்கு குறிப்பிடத்

தக்கதாகும். இத்தகு பெருமை வாய்ந்த அவ்வையின் சிறப்புகள் சிங்கப்பூர்ச் சிறார்களுக்குப் படம்பிடித்துக் காட்டப்பட்டுள்ளன.

அவ்வை என்னும் பாட்டி
அன்பு வழிகள் காட்டி
செவ்வைப் பாடல் புனைந்தாள்
சிந்தை இன்பம் தந்தாள்!
கற்க நாளும் சொல்லிக்
கட்டளைகள் இட்டாள்
கற்றிடாத பேரைக்
காட்டுமனிதர் என்றாள்!
நீதி கூறும் பாடல்
நினைவில் நிற்க வைத்தாள்
பேதங்கொண்டு வாழ்தல்
பிழைகள் என்று சொன்னாள்!
முத்து முத்தாய் வார்த்தை
மொழிந்த அவ்வைப்பாட்டி
தத்துவத்தைப் போற்றித்
தரணி சிறக்க வாழ்வோம்! (சி.த.கு.இ.தி. ப.39)

என்ற அவ்வையின் நோக்கமும் அவரது படைப்பின் தாக்கமும் சிங்கை மண்ணில் வேரூன்றி விழுதுகள் பரப்பி வருவதை அம்மண்ணின் படைப்பிலக்கியம்வழி அறியமுடிகிறது.

2. பாரி

அவ்வையாரைச் சிங்கப்பூர் படைப்பிலக்கியங்களில் அறிமுகப் படுத்தியதுபோல் கடையேழு வள்ளல்களில் ஒருவரான பாரியின் கொடைப் பண்பையும் அந்நாட்டுச் சிறார்களுக்கு அறிமுகப்படுத்தி யிருக்கின்றனர்.

வளத்தைத் தருவது மாரி - அதுபோல்
வாரி வழங்கினான் பாரி (சி.த.கு.இ.தி. ப.76)

என்று மழைபோல் கைமாறு கருதாது வாரி வழங்கிய பாரியின் கொடைப்பண்பைப் புறநானூற்றில்,

பாரி பாரி என்று பல ஏத்தி
ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்
பாரி ஒருவனும் அல்லன்
மாரியும் உண்டு; ஈண்டு உலகு புரப்பதுவே (புறம். 107.1-4)

என்று பாரியைப் பற்றிப் பதிவு செய்யப்பட்டுள்ளது.

3. திருவள்ளுவர்

உலகம் முழுதும் பரவிக் கிடக்கும் திருக்குறள் கருத்துக்கள் சிங்கப்பூர்க் கவிதைகளிலும் காணப்படுகின்றன.

நன்றி மறப்பது நன்றன்று நன்றல்லது
அன்றே மறப்பது நன்று (குறள்.108)

என்று எடுத்தியம்புகிறது. இது சிங்கைச் சிறார், இலக்கியத்தில்

நன்றி மறவாப் பெருங்குணத் துக்கே
நாயினைக் காட்டுவர் நம் பெரியோர்
நன்றி மறப்பது நன்றன்று என்றுமே
அன்றே மொழிந்தனர் நம் ஆன்றோர் (சி.த.கு.இ.தி. ப.71)

என்று பளிச்சிடுகின்ற பாங்கைக் காணமுடிகிறது. இக்குறள் மட்டுமல்லாது இன்னும் பல குறள்கள் சிங்கைக் கவிதையின் குரலாக வெளிப்படுகின்றன.

குறளின் குரல்

ஒரு நாடு ஆக்கமுடைய வேந்தராலும், ஊக்கமுடைய மாந்தராலும் உயரும் என்பதற்குச் 'சிங்கப்பூர்' சரியான சான்று,

வெள்ளத் தனைய மலர் நீட்டம் மாந்தர்தம்
உள்ளத் தனையது உயர்வு (குறள். 605)

என்ற திருக்குறளின் தாக்கம் சிங்கைச் சிறார் இலக்கியத்தில்,

நீர் உயரத்தான் உயரும்
பேரழகுத் தாமரைப் பூ (சி.த.கு.இ.தி. ப.111)

என்று பதிவு செய்யப்பட்டுள்ளது. எனவே உலகப் பொதுமறை சிங்கப்பூர்ச் சிறார் இலக்கியத்திலும் ஓங்கி ஒலித்து வருவது எண்ணி இன்புறத்தக்கதாகும்.

சிறார் இலக்கியத்தில் செஞ்சொற்களின் பயன்பாடு

பண்டைத் தமிழரின் கலையையும், இலக்கியத்தையும் பண்பாட்டையும் வாழ்வியலையும் வரலாற்றையும் உணர்த்தும் ஆவணமாகச் செஞ்சொற்கள் பயன்பட்டு வந்துள்ளன. ஒரு சொல் பெயர்ச்சொல்லாகவும் அதே சொல் இடத்திற்கேற்ப வேறு வேறு பொருள் தருவதும், இருபொருள் உணர்த்தும் பண்புடையதுமாகச் செஞ்சொற்களின் பயன்பாடு இலக்கிய ஆக்கத்திற்கு இன்றியமை யாதனவாக இருந்துள்ளது. இச்செஞ்சொற்கள் சிறார் இலக்கியத்தில்,

திங்கள் என்பதோர் நாளாகும்
தெரிவாய் நிலவுக்கும் பேராகும்
கங்குல் என்பது இரவாகும்
கருத்தாய் கற்றிடு நலம் வரவாம்!
மாதத்தில் ஒன்று சித்திரையாம்
மயக்கம் வரவரும் நித்திரையாம்

சாதத்தைச் சொல்வாய் சோறென்று
சரித்திரம் தானே வரலாறு!
அரியது அரியது பண்பாடு
அதனைக் காப்பது உண்பாடு! (சி.த.கு.இ.தி. ப.55)

என்ற கவிதைகளில் திங்கள், கங்குல், பண்பாடு போன்ற செஞ் சொற்களின் தாக்கம் காணக்கிடக்கிறது. மேலும், யானையின் கருமைத் தன்மைக் காரணமாக அதனைக் 'கரி' எனச் சுட்டும் பண்பாட்டுப் பதிவை,

தடித்த மலைபோல் இருப்பாயே
தாவரம் மட்டும் உண்பாயே
கருப்பாய் நீயும் இருப்பதனால்
கரியென உன்னை அழைக்கின்றோம் (சி.த.கு.இ.தி. ப.143)

என்று சிறாரிலக்கியங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளது. இவ்வாறு, செஞ்சொற்களின் தாக்கமும் பயன்பாடும் சிறாரிலக்கியத்தைச் செஞ்சொல் களஞ்சியமாக மாற்றியிருக்கிறது.

### சிறாரிலக்கியத்தில் தமிழ்மரபைப் பதியவைத்தல்

தமிழ்ச் செவ்வியல் இலக்கியங்களை மரபிலக்கியம் என்றும் தொல்காப்பியத்தை மரபிலக்கணம் எனவும் வழங்கும் மரபு தமிழ்மரபில் தொன்றுதொட்டே இருந்து வந்துள்ளதுபோல் சில பெயர்களை மரபு வழியாக இவ்வாறுதான் அழைக்க வேண்டும் என்ற மரபும் உள்ளது. அவ்வாறு வழக்கத்திற்கு மாறாகச் சுட்டினால் அது 'மரபு வழுவாகிவிடும்' என இலக்கணத்தின் மூலம் எச்சரிக்கப்பட்டுள்ளது.

யானை, குதிரை, கழுதை, கடமை, பசு ஆகிய இவ்வைந்தின் குட்டிகளைக் "கன்று" என அழைப்பது மரபு என்பதைத் தொல்காப்பியம்,

யானையும் குதிரையும் கழுதையும் கடமையும்
ஆனொடு ஐந்தும் கன்று எனற் குரிய
(தொல்.பொருள்.மரபு. 15)

என்ற நூற்பா வழியும், ஓர் அறிவு உயிரான தென்னையின் பிள்ளையையும் கன்று என்று வழங்குவது மரபு என்பதனை,

பிள்ளை குழவி கன்றே போத்து எனக்
கொள்ளவும் அமையும் ஓர் அறிவுயிர்க்கே
(தொல்.பொருள்.மரபு. 24)

என்ற நூற்பாவழியும் தமிழ் மரபும் தாவர மரபும் மாசுறாமல் தொல்காப்பியத்தில் காக்கப்பட்டுள்ளன. இதுவே,

பசுவின் குட்டி கன்றாகும்
பாலைக் குடித்தே அது வளரும்

**தென்னஞ் செடியும் கன்றாகும்**
**தேங்காய் தருமாம் தினம் வளர்ந்தே** (சி.த.கு.இ.தி. ப.140)

என்று பதிவாகியுள்ளது. சிங்கப்பூர்ப் படைப்பிலக்கியம் தமிழ் மண்ணைத் தாண்டிப் படைக்கப்பட்டிருந்தாலும் தமிழ் மரபை மீறிப் படைக்கப் படவில்லை. அதில் சிறார் இலக்கியங்கள் தமிழின் பெருமைகளை மழலைகள் அறியும் வண்ணம் கொஞ்சு தமிழில் கூறப்பட்டுள்ள விதம் சிந்தித்தற்குரியது.

## முடிவுரை

'திரைகடல் ஓடியும் திரவியம் தேடு' என்ற ஔவையின் வாக்கிற்கேற்பத் தமிழர்கள் சிங்கப்பூர் உள்ளிட்ட பல்வேறு நாடுகளில் புலம்பெயர்ந்து வாழ்ந்து வருகின்றனர். புலம்பெயர்ந்து வாழ்ந்தாலும் தம் மொழியையும், பண்பாட்டையும் பழக்கவழக்கத்தையும் புலம்பெயர்ந்த நாடுகளில் கடைப்பிடித்தும் போற்றியும் வருகின்றனர். தம்முடைய படைப்புகளில் தமிழ் மொழிக்கு முக்கியத்துவம் கொடுத்தும் தரமான தமிழ்ச் சொற்களைத் தேர்ந்தெடுத்தும் படைத்து வருகின்றனர். சிங்கப்பூர்ச் சிறார் இலக்கியத்தில் தமிழ்மொழியின் மாண்பையும், இயற்கை குறித்த செய்திகளையும், தாயின் அருமையையும், தமிழ்ச் சான்றோரின் பெருமைகளையும் கூறியிருப்பதோடு, தமிழ்ச் செஞ்சொற்களின் பயன்பாட்டையும், தமிழ் மரபுச் சொற்களின் பயன்பாட்டையும் தம்முடைய படைப்புகளில் பதிவுசெய்துள்ளனர்.

## துணை நூல்கள்


1. ஏ.ஆர்.ஏ. சிவகுமாரன், சிங்கப்பூர்த் தமிழ்க் குழந்தை இலக்கியம் திறனாய்வு, 2006.
2. ந. கடிகாசலம், ச. சிவகாமி (ப.ஆ), அயலகத் தமிழ்க் கலை இலக்கியம் சமகாலச் செல் நெறிகள், 2001.
3. தொல்காப்பியம்.
4. எட்டுத்தொகை மற்றும் பத்துப்பாட்டு.
5. பாரதியார், பாரதிதாசன், நாமக்கல் கவிஞர் கவிதைகள்.

# முகங்கள் சிறுகதைத் தொகுப்பில் தன்னுணர்ச்சிப் பாங்கு

**முனைவர் அ. ஆலிஸ்**
மேனாள் தமிழ்த்துறைத்தலைவர்,
பாரதிதாசன் பல்கலைக்கழகம்,
திருச்சி.

முகங்கள் என்ற சிறுகதைத்தொகுப்பு வி.ஜீவகுமாரன் அவர்களால் தொகுக்கப்பட்ட புலம்பெயர் தமிழ் எழுத்தாளர்களின் சிறுகதைகளின் தொகுப்பாகும். இதன் முதல்பதிப்பு ஜனவரி 2011இல் வெளிவந்துள்ளது. இந்நூல் நியூசிலாந்து, கனடா, இலங்கை, பிரான்சு, ஜெர்மனி, ஆஸ்திரேலியா, டென்மார்க், ஹாலண்ட், இலண்டன், மலேசியா, இந்தியா, சுவீடன், நார்வே, சுவிட்சர்லாந்து, இத்தாலி, சிங்கப்பூர், அமெரிக்கா, பெர்லின் ஆகிய இடங்களில் வாழும் பல்வேறு புலம்பெயர் தமிழர்களின் 50 சிறுகதைகள் அடங்கிய தொகுப்பாகும். இந்நூலுள் உள்ள ஒரு சில சிறுகதைகள் மட்டும் இங்கு ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டுள்ளன. செவ்வியல் இலக்கியக் கூறுகள் நிச்சயமாக இத் தமிழர்களின் படைப்புக்களில் இருக்க வாய்ப்புண்டு; ஏனெனில் இப்புலம்பெயர் தமிழர்களின் உள்ளத்தில் தம் சொந்த நாட்டு மண்ணின் மீதான பற்றும் சொந்த நாட்டுப் பண்பாடு மீதான பற்றும் சொந்த நாட்டு இலக்கியப்பற்றும் அழிக்கவியலா ஏக்கங்களாக அளவின்றி ஊறிக்கிடக்கின்றன என்பதைக் கருதுகோளாகக் கொண்டு இக்கட்டுரை அமைகிறது.

இந்நூலுக்கு முகவுரையும் பதிப்புரையும் அளித்துள்ள வி.ஜீவகுமாரன்,

"தத்துக் கொடுக்கப்பட்ட ஒரு பிள்ளை எவ்வாறு பெற்றோருக்குப் பிறத்தியாகுமோ அவ்வாறே நாமும் எம் இனத்திற்குப் பிறத்தியாராய்ப் போவது கசப்புடன் விழுங்க வேண்டிய ஒரு மாத்திரை தான். எண்ணை வள நாட்டிற்கு வேலைக்காகப் போய்வரும் பொழுதும் அல்லது உயர்கல்விக்காக வேற்று நாட்டுக்குச் சென்று திரும்பும்பொழுதும் இந்தப் புலம்பெயர் முத்திரை குத்தப்படுவதில்லை. பதிலாக நாம் சென்றடையும் நாடுகளின் தரையை விமானத்தின் பின் சில்லுகள் தொடு முன்பு அல்லது கரையை வள்ளங்கள் அண்மிக்க முன்பு நாமே எங்கள் கைகளால் எங்கள் கடவுச்சீட்டைக் கிழித்துப் போட்டு அகதி அந்தஸ்தைக் கோரும்பொழுது அந்த நாட்டில் 'அகதி அந்தஸ்து கோருபவர்கள்' என்ற ஒரு புதுமுகமும் அந்தப் புதுமுகங்களைத் தாயகத்தின் கைக்கண்ணாடிகளில் பார்க்கும்பொழுது 'புலம்பெயர்ந்தவர்கள்' என்ற முகவரியும் எமக்குக் கிடைக்கின்றன"

என்று குறிப்பிடும் வரிகளில் புலப்படும் வேதனை சொல்லிலடங்காத தாகும். இவ்வடிப்படையிலேயே இச்சிறுகதைகளை அணுகும்போது புலம்பெயர் எழுத்தாளர்களின் துன்பங்கள், துயரங்கள் எழுத்தாளர்களின் மன இரணங்களாகப் பாத்திரங்களின் வாயிலாக வெளிப்படுவதைக் காண இயலுகிறது.

**தன்னுணர்ச்சிப்பாங்கு:** சங்க இலக்கியப் பாக்கள் தன்னுணர்ச்சிக் கவிதைகளாவன. இவ்வகையில் பாடலில் கூற்று நிகழ்த்தும் ஒரு பாத்திரம் தன் உணர்வுகளை வெளிப்படுத்த, கேட்போர் ஒருவர் கேட்பதாக அமையும். சங்க இலக்கியத் தலைவியும் தலைவனும் தோழியும் நிகழ்த்தும் கூற்றுக்கள் இவ்வகையில் அவர்தம் மனவுணர்வினை வாசகனுக்கு அறிவிக்கின்றன. சங்க இலக்கியங்களில் பெரும்பாலான பாடல்கள் தலைவனின் பொருள்வயிற் பிரிவினை மையமிட்டனவாகும். எனவேதான் பிரிவு குறித்துத் தலைவன் செலவழுங்குதல், பிரிவிடை தலைவனும் தலைவியும் ஆற்றாமல் தத்தமக்குள் பேசுதல், புலம்புதல் முதலியன பொருண்மைகளாக அமைகின்றன. தலைவி ஆற்றாமல் பேசுதல், தலைவனைப் பார்க்க ஏங்குதல், தனது உடல் மெலிதற்கு இரங்குதல் முதலியன தலைவியது மனவுணர்வுகளாக அவள் கூற்றின்வழி வெளிப்படுகின்றன. இச்சிறுகதைகளிலும் இத்தன்னுணர்ச்சிப் பாங்கினைக் காண இயலுகிறது. ஏனெனில் தம் சொந்த ஊரில் பிழைக்க வழியின்றி அயல் தேசத்திற்குப் பெயரும் இத் தமிழர்களும் உறவுகளைப் பிரிதலின் கொடுமையை அனுபவித்தவாறே பிரிந்து செல்கின்றனர். சங்க இலக்கியத்தில் போலல்லாது தம் சொந்தநாட்டுத் தொடர்பைத் துண்டித்துவிட்டு அயல்தேசத்தில் நிரந்தரமாகத் தங்கச் செல்லுவதனால் இவர்கள் மிகுந்த மனவேதனையுடன் உறவினரைப் பிரிந்துசெல்வதை இவர்கள் கதைகள் புலப்படுத்துகின்றன. எனவே தம் உறவினரை நினைந்தவாறே வேற்றுநாடு சென்று வேற்றுப் பிரஜைகளாக வாழும் அவர்தம் மனவுணர்வினை இக்கதைகள் நுட்பமாக வெளிப்படுத்து கின்றன.

**1 வாய்மையாளனாய் இருந்தும் வாழ்க்கை அமையாமை குறித்து ஆடவனின் உணர்வு வெளியீடு**

நியூசிலாந்தைச் சேர்ந்த அகில் என்பவர் எழுதிய **முதிர்பனைகள்** என்ற சிறுகதை தாயைச் சமீபத்தில் இழந்த மகன்கள் கூற்றில் நிகழ்கிறது. நியூசிலாந்தில் வாழ்ந்து இறந்துவிட்ட பார்வதி மாமியின் இறுதிக் காரியங்களுக்காக உறவினர் அனைவரும் நியூசிலாந்திற்கு வருகின்றனர். பார்வதி மாமியின் கணவர் ராஜரட்ணம் நியூசிலாந்தில் கவுரவமாக வாழ்ந்து இறந்தவர். இவர்களது மூன்று மகன்களுக்கும் திருமணம் ஆகவில்லை. அதற்கான காரணத்தை அந்தந்த மகன்கள் கூற்றில் சொல்வதாகக் கதை அமைகிறது.

மூத்த மகனாகிய 46 வயது சிவரூபன் இதய சிகிச்சை நிபுணர். நியூசிலாந்தில் பணியாற்றுகிறார். சிவரூபனது இள வயதில்

அவன் படித்த யுனிவர்சிட்டிக்கு வந்த நிர்மலா என்ற பெண்ணைக் காதலிக்கிறான். ஆனால் தாழ்ந்த சாதியைச் சேர்ந்தவள் என்ற பெயரில் நிர்மலா சிவரூபனின் பெற்றோரால் மறுக்கப்படுகிறாள். அதன்பின் சிவரூபனுக்குத் திருமணமே ஆகவில்லை. அவன் நிர்மலாவைத் தவிர யாரையுமே திருமணம் செய்துகொள்ள விரும்பவில்லை.

39 வயதான இரண்டாவது மகன் சிவநேசன் கடல் சார்ந்த என்ஜினியர் வேலை பார்ப்பவர். மாதக்கணக்காகக் கடலினுள்ளும் கடலின் என்ஜின் ரூமுக்குள்ளும் வாழும் அவர் தன்னைப் போன்ற பெரும்பாலான கடல் சார் மனிதர்கள் போலவே கடற்கரையில் சந்திக்கும் கன்னிகளை விரும்பித் தொடர்பு கொள்கின்றவர். நாட்டுக்கு நாடு பாலியல் நோய்களையும்தான் எடுத்துச் செல்கிறோம். எல்லாம் பாதுகாப்பான உறவுதான். ஆனால் அதையும் தாண்டிச் சில அசம்பாவிதங்கள் நடந்து விடுகின்றன. இது தெரிந்தும் யாரோ ஒருவர் பெற்றுச் சீராட்டி வளர்த்த ஒரு பெண்ணுக்கு ஒரு நோயைக் கொடுத்து வதைக்க வேண்டுமா என்று சொல்லித் திருமணத்தைத் தட்டிக் கழித்து விடுகிறார்.

32 வயது மூன்றாவது மகன் சிவச்செல்வன் பைலட் ஆகவும் விமானத்துறையில் கம்பியூட்டர் துறையிலும் படித்து அமெரிக்காவில் வேலை பார்ப்பவர். கலிபோர்னியாவில் இருக்கும் மாமா மாமியின் ஒரே மகள் சியாமியை இவனுக்குத் திருமணம் செய்யலாம் என்று அம்மா நினைக்கிறாள். அவர்களும் சரி என்று சொல்லுகிறார்கள். அவள் படிக்கும் சட்டப்படிப்பு முடியும் இரண்டு வருடம் கழித்துத் திருமணம் செய்யலாம் என்று நினைக்கிறார்கள். ஈராக் யுத்தம் ஆரம்பமாகிறது. அமெரிக்கா சார்பில் போர் நிகழ்த்திவிட்டு வந்துவிட்ட பின்னர் வந்த செய்திகளில் தாங்கள் வான்வெளியில் விமானத்திலிருந்து பறந்து போட்ட குண்டுகள் விளைத்த சேதங்களைக் குறித்துவரும் செய்திகளிலிருந்து தங்கள் தகாத செயல்களை எண்ணிப்பார்த்து சிவச்செல்வன் மனம் குமைகிறான். அடுத்து இலங்கை யுத்தம் வருகிறது. வன்னிப்பிரதேசத்தின் படம் கம்பியூட்டரில் வருகிறது. எங்கிருந்து என்ன வேகத்தில் குண்டு போட வேண்டும் என்று செய்திகளைச் சொல்வது இவனைச் சார்ந்தவர்கள் வேலை. எங்கிருந்து தகவல்கள் வருகின்றன எங்கு இவை அனுப்பப்படுகின்றன என்பது அறியமுடியாமல் இருக்கிறது. அப்பாவி மக்கள் அழிகின்றனரே என்ற வருத்தத்தில் சிலரையாவது காப்பாற்ற வேண்டும் என்ற எண்ணத்தில் பத்துக்கணிப்பீடுகளில் வேண்டுமென்றே ஒன்றையாவது தப்பாக அனுப்ப ஒருநாள் இராணுவ முகாமின் மீது குண்டு விழுகிறது. விடுதலை அமைப்புகளுக்கும் இவனுக்கும் என்ன சம்பந்தம் என்று கேட்டு அமெரிக்க இராணுவச் சிறையில் இவனுக்குத் தண்டனை தரப்படுகிறது. விசாரணையின்போது (டிஸ்பிரேசன்) அதிகமாக நோய் ஏற்படவே இராணுவ ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்படுகிறான். இந்த மருந்துகள் ஒருவரின் ஆண்மையை இழக்கச் செய்யும் என்பதறிந்து சியாமியை வேறு இடத்தில் கட்டிக் கொடுக்கச் சொல்லி அம்மாவுக்கு

எழுதிவிடுகிறான். இலங்கை யுத்தம் முடியும் வேளையில் இவனது தண்டனைக்காலமும் முடிய இடையில் பதவி இழந்து நியூசிலாந்திற்கு அவன் வந்தவேளை அம்மா இறக்கிறாள். நல்லவேளை அம்மாவைக் கடைசி நேரத்தில் நல்ல வடிவாகப் பார்த்த திருப்தி எனக்கு என்று பேசும் அவன்,

> "ஆனால் அம்மா அப்பா ஆசைப்பட்டபடி எங்கள் மூவருக்கும் திருமணம் ஆகவில்லை. இனியும் திருமணம் என்பது எனக்கு இல்லை என்பதனை என்னால் உணர முடிகிறது. செத்த வீட்டுக்குச் சியாமி வந்தபொழுது அவளின் கழுத்தில் தாலி இருந்தது. வயிறு பெருத்திருந்தது. அறையைப்பூட்டி விட்டு அதிகமாக அழுதிருந்தேன்" (ப.27)

என்ற வரிகளில் புலப்படுத்தும் ஓர் ஆண்மகனின் வேதனையை அறியலாம்.

2 சொந்த மண்ணில் வாழும் வாழ்க்கையே வாழ்க்கை

1 கனடாவிலிருந்து தேவகாந்தன் எழுதியுள்ள பேரணங்கு என்ற கதையில் இடம்பெறும் இலங்கையைச் சேர்ந்த ரமணீதரன் சதாசிவமும் அஜர்பைஜான் நாட்டைச் சேர்ந்த ஐயூன் என்ற பெண்ணும் பேசிக்கொள்ளும் உரையாடல் அவ்வவர்களது நாட்டைப் பிரிந்து வந்திருக்கின்ற சோகத்தை வெளிப்படுத்துகிறது. ஐயூன் சொன்னாள்,

> "என்னைப் பற்றி இதுவரை நான் யாரோடும் பகிர்ந்து கொண்டதில்லை. விருப்பமில்லை. நான் பேசினால் எதை அவர்கள் புரிந்துகொள்ளப் போகிறார்கள்? ஏனோ உன்னோடு பேச வேண்டுமெனத் தோன்றிற்று. நீ ரணகளமாகியிருக்கும் ஒரு தேசத்திலிருந்து வந்தவன். அந்தத் தேசத்தில் சிறுபான்மைச் சமூகம் கொண்டிருக்கக்கூடிய ஆகக்கூடுதலான சோகங்களை அனுபவித்திருக்கக் கூடியவன். அதனால்தான் சந்திக்கக் கேட்டேன்.------- அஜர்பைஜான் துயரம் மலிந்த பூமி. ஏறக்குறைய உனது நாட்டில் உனது இன்த்தவர்க்கு இருக்கக் கூடிய பிரச்சினை மாதிரியானதுதான் அங்கேயும். ஆனால் அதற்கு வேறு பரிமாணங்களும் உண்டு. ------- சோவியத்தின் சிதறலுக்குப் பின் அதனுள் அடங்கியிருந்த நாடுகளுள் முதலில் சுதந்திரப் பிரகடனம் செய்த நாடு அது. பின்னரும் அது ஒரு நிறைவான வாழ்நிலையை அடைந்துவிடாதேயிருந்தது. உள்நாட்டு மதப் பிரிவினைகளின் அரசியலால், இடம்பெற்றதும் இடம்பெறுவதுமான மனிதாயத அவலங்கள் அங்கே சொல்லமுடியாதவை. -------உள்நாட்டு யுத்தகாலத்தில் எனக்குப் பத்து வயதாயிருக்கும் போது என் அப்பாவும், அம்மாவும் என் கண் முன்னாலேயே சுட்டுக் கொல்லப்பட்டார்கள். அந்த ஸ்தம்பிதம் என் அழுகையை நிறுத்தியது. அதைத் தொடர்ந்த ஆறேழு ஆண்டுகள் அராஜகத்தினதும் வன்முறையினதும் ஆழப்பதிந்த சுவடுகள்

என் வாழ்வில். வாழ்க்கை எவருக்குமே அவ்வண்ணம் அமைந்துவிடக் கூடாது, சதா! கடைசியில் அரசியல் தஞ்சம் காணப் புறப்பட்ட என் சித்தப்பா குடும்பத்தோடு நான் மட்டும் இங்கே வர வாய்ப்புக் கிடைத்தது. உயிர் பிழைத்து விட்டேன்தான். ஆனால் வாழ்க்கை? எனது வாழ்க்கையை என் மண்ணிலல்லவா விட்டுவந்திருக்கிறேன். நான் இந்தக்கணம் வரை இந்த நாட்டில் எதுவிதத் துன்பத்தையும் துயரத்தையும் அடைந்ததில்லை என்பது மெய்யே. ஆனாலும் என் மண்ணின் நினைவு, அங்கேயுள்ள என் எச்ச உறவுகளின் நினைவு என்னை விட்டு என்றும் நீங்கியதில்லை. நான் தின்றும், குடித்தும், உறங்கியுமான ஒரு வாழ்க்கையை நடத்திக் கொண்டுதான் இருக்கிறேன். இது மட்டுமே வாழ்க்கையில்லை என்பதுதான் எனது தீர்மானம். அப்படியிருக்கையில் நான் சிரித்துக்கொண்டே வாழ்ந்துவிடுதல் சாத்தியமா. சதா! சொல்லு. .......சொந்த மண்ணோடு இயைந்ததே வாழ்க்கையென்ற தத்துவத்தின் குருவாக அப்போது அவள் அவனுள் தவிசு போட்டு வீற்றிருந்துகொண்டிருந்தாள்" (பக்.37-38).

சொந்த மண்ணின் பற்று நெஞ்சை வலிக்கச்செய்யப் புலம்பெயர்ந்தவர்கள் படும் இன்னல் மேற்குறிப்பிட்ட கதையில் ஒரு பெண்ணின் வாயிலாகப் புலப்படுவதைக் காணலாம்.

**2** இந்தியாவில் வாழும் இவள் பாரதி என்ற எழுத்தாளர் எழுதிய **இது எனது நகரம் இல்லை** என்ற சிறுகதை. இந்தியாவில் வாழும் ஓர் இளம்பெண் திருச்சியில் வாழும் இலங்கையைச் சேர்ந்த ஒரு பெரியவரிடம் இலக்கியத் தொடர்பு வைத்துக்கொள்வதைப் பற்றிய கதை. தாத்தாவும் பாட்டியும் திருச்சியில் வாழுகின்றனர். இலக்கியக் கூட்டத்தில் அவரைத் தொடர்பு கொள்ளும் இளம் மங்கையான அவள் தொடர்ந்து அவரோடு இலக்கியம் பற்றிப் பேச அவரது வீட்டுக்கு வரும்போதெல்லாம் அவரது சொந்த நாட்டுப்பற்றுக் குறித்த ஏக்கங்களைக் காணுகிறாள்.

தன்னிடம் ஒரு காலத்தில் ஐயாயிரத்துக்கும் மேலான புத்தகங்கள் இருந்ததாக அவர் சொல்லும் போது அவை எங்கே என்று கேட்கிறாள்.

'அது எங்கட சொந்த நாட்டுல விட்டுட்டு வர வேண்டிய சூழலாயிடுச்சு' என்று சொல்லும்போது அவரது கண்கள் கலங்கியிருந்தன. தன் நாட்டிலிருந்து இன்னொரு நாட்டிற்குப் புலம்பெயர்ந்து செல்வது எவ்வளவு வேதனைக்குரியது. பொருளாதாரத்தை முன்னிட்டு இடம்பெயர்வதே ஒவ்வொரு வீட்டிலும் ஒரு வருத்தத்தை நிரந்தரமாகத் தங்க வைத்து விடுகிறது. எனில் தன்னிடத்தில் வாழ முடியாமல் பெயர்த்து எறியப்படுவது இன்னும் கொடுமையான வலியைத் தந்திருக்கும் (ப.400).

தாத்தா திருச்சிக்கு வந்து 20 வருடங்கள் ஆகின்றன. அவரது எல்லாப் பிள்ளைகளும் தாங்கள் வாழும் நாடுகளுக்கு அவரையும் அம்மாவையும் அழைத்தபோது மறுத்துவிடுகிறார்.

> "எல்லாப் பிள்ளைகளும் தன்னிடத்திற்கு இருவரையும் அழைத்தபோதும், 'இல்ல.. மீண்டும் தாய்மண்ணுக்குச் செல்லும் காலம் வரும். அதனால் இங்கேயே இருந்துவிட்டுப் போகிறோம். என்று சொல்லி விட்டாராம். ஏழு பிள்ளைகளுக்கும் பிறந்த பேரப்பிள்ளைகளைக் கொஞ்சக் கூடக் கொடுத்து வைக்காத நிலையில் அவரது உணர்வுகளை எந்த வார்த்தையில் வெளிப்படுத்துவது எனத் தெரியவில்லை. 'உணர்வுகள் சாகடிக்கப்படுவதுதான் முதல் மரணம்'. தாத்தாவும் பாட்டியும் பலமுறை மரணத்தைச் சந்தித்து விட்டார்கள் (ப.401).

என்ற வரிகள் அவரது சோகத்தைப் புலப்படுத்துகின்றன.

### 3 வெளிநாட்டு வாழ்வில் ஏற்படும் அடிமைத்தனம்

ஜெர்மனியிலிருந்து சாந்தினி வரதராஜன் எழுதியுள்ள **எல்லாம் இழந்த பின்னும்** என்ற கதை இலங்கையிலிருந்து வந்து ஒரு வெள்ளைக்காரியிடம் வீட்டு வேலை பார்க்கும் ஒரு பெண்ணின் கதை. வீட்டுக்குப் பணம் அனுப்ப வேண்டி வேலை பார்க்கிறாள். வெள்ளைக்காரி தன்னை அடிமை போல நினைத்திருக்கிறாள் என்பதை உணர்ந்து அனுபவிக்கும் போதெல்லாம் அழுகிறாள். எல்லா வேலையையும் தூக்கி எறிந்துவிட்டு எந்த அழுத்தமும் இல்லாமல் ஓட வேண்டும் என்று நினைக்கும்போதெல்லாம் இல்லாமையை எண்ணிப்பார்க்கிறாள். மனம் வங்கிக்கடனை எண்ணிப்பார்க்கிறது. மகனுக்குப் புத்தகம் வாங்க வேண்டும். அதற்கு அண்ணாவுக்குப் பணம் அனுப்ப வேண்டும். கிறிஸ்துமஸ் காசாக ஐம்பது ஈரோ காசு தருவா. அதையும் சேர்த்து அனுப்ப வேண்டும் என்று பல விதமாகச் சிந்திக்கிறாள்.

> "ஏணிப்படியின் உச்சத்தில் இருந்த வாழ்க்கை என்ன நடக்கிறது என்று சிந்திக்கும் முன் மலைப்பாம்பின் வாய்க்குள் அகப்பட்டு, சட்டென்று கீழ் இறங்கிய விளையாட்டுப் போல் எல்லாம் நடந்து முடிந்துவிட்டது. இயலாமையும் இல்லாமையும் இணைந்து வேதனைத் தீயை வளர்த்தபடி இருக்க இவைகளிலிருந்து மீளமுடியாத மனசு பெரும் குரல் எடுத்து அழுகிறது, (ப.56).

இவள் அகதிதானே. இவளுக்கு மானம் ரோசம் ஒன்றும் இருக்காது. இருக்கவும் கூடாது. அப்படித்தான் மனதுக்குள் என்னைப்பற்றி ஒரு வரைவிலக்கணத்தை வைத்திருப்பாள் என்று எண்ணிப்பார்க்கிறாள் அப்பெண். இப்பொழுது ஊர் பேர் தெரியாத நாட்டில் வேலையை முடித்துவிட்டுப் போனால் வசதியற்ற வீட்டில் வாழும் நிலையில் அவள் தன் பழைய வாழ்க்கையோடு ஒப்பிட்டுத் தற்கால வாழ்க்கையை எண்ணிப்பார்க்கிறாள்.

"எப்படியெல்லாம் என்னை அம்மா வளர்த்தா...... இப்படித்தான் எனக்குள் எழும் எல்லா உணர்வுகளும் நம்பிக்கையும் எதிர்பார்ப்பும் பொய்யாகிப் போகும் பொழுது வாழ்க்கை வெறுத்துப் போய்விடுகிறது. வருவன் என்று சொல்லிவிட்டுத்தானே வந்தனன். கட்டிப்பிடித்து பின் கைகள் இறுகி, விரல் நுனி தடவி, கண்கள் கலங்கி, ஏங்கி அம்மா நின்ற காட்சி அப்போதும் கால்கள் தன் பாட்டில் நீட்சியான பாதையை நோக்கி நடை போட்டன. இடைவெளிகள் நீள நீள மனம் பெருங்குரல் எடுத்து அலைபோல் அழுதிருக்கும். ..... இப்பொழுது நான் வேராகி வேர்களில் முளைத்ததெல்லாம் மலர்கள் என முகிழ்த்து நின்றபொழுது அவை நெருஞ்சி முட்களாக முகம் காட்டிச் சிரித்தன. அப்போதுதான் நான் முதல் முதலாக உடைந்து போனேன். மறுபடியும் என் வேர்களைத் தேடினேன். அழுதழுது தேடினேன். அவை அழுது, களைத்து, உக்கி, நெருப்போடு போன சேதி காலம் கடந்து.....
(ப.57 – 58)

என்று தன் பழைய சொந்த ஊர் உறவுடனான வாழ்க்கையையும் தற்போதைய வெளிதேசத்து அடிமை வாழ்க்கையையும் எண்ணி அழும் பெண்ணின் உணர்வுகள் குறிப்பிடத்தக்கன. இதே கதையில் அழுவதற்கும் நேரம் இல்லாத வாழ்க்கை. எவர் கண்களுக்கும் புலப்படாத விலங்கு பால்களில் பூட்டப்பட்டுக் கிடந்தது. ஒரு குறிப்பிட்ட எல்லைக்குள் நடந்து நடந்து அலுக்கும் மனதை இசைக்கும் கருவியாகப் பழைய நினைவுகள் என்ற வரிகளும் அவளின் ஆழ்மன உணர்வைப் புலப்படுத்துகின்றன.

## 4 வெளிநாட்டு வாழ்க்கை வாழ முற்படும் சில பெண்கள் ஏமாற்றப்படுதல்

### 4.1 ஏறகெனவே ஒரு பெண்ணுடன் தொடர்பு வைத்திருக்கும் ஆடவனுக்கு உண்மையை மறைத்துத் திருமணம் செய்யப்படுதல்

எனக்காகவா நான் என்ற கதை சு.ஸ்ரீ. கந்தராசா என்ற ஆஸ்திரேலிய எழுத்தாளர் எழுதிய கதை. இந்தச் சிறுகதையில் சுகந்தி இலங்கையில் வசதியாக வாழ்ந்த குடும்பத்துப்பெண். அவள் இலங்கையில் வாழும்போது தந்தை தொழில் போட்டி காரணமாகக் கொல்லப்பட்டுவிட அவரைத் தேடியதற்குச் செலவழித்ததில் வீட்டுச் சொத்தெல்லாம் கரைந்துவிடுகிறது. அவளது தம்பி தங்கியிருந்த விடுதியில் இருந்த இளைஞர்களெல்லாம் குண்டுவைக்க வந்தவர்கள் என்று அள்ளிக்கொண்டு போகப்பட, அவன் அன்றிலிருந்து காணாமல் போய்விடுகிறான். அவன் எங்கிருக்கிறான் என்றே தகவல் தரப்பட வில்லை. இச்சூழலில் வெளிநாட்டு ஆடவனுக்கு வாழ்க்கைப்படுகிறாள். ஆனால் வெளிநாட்டிற்கு வந்த பின்னர்தான் தெரிகிறது கணவன் வேறொரு பெண்ணுடன் குடும்பமாகத் தொடர்பு வைத்திருக்கிறான்

என்று. மனம் உழல்கிறாள். தன் தங்கைக்குத் திருமணத்திற்கு உதவி செய்யும்பொருட்டுத் தான் விவாகரத்து செய்ய விரும்பியும் செய்ய முயலாமல் அந்தக் கணவனுடனேயே வாழ முற்படுகிறாள்.

## 4.2 வெளிநாட்டில் வீட்டு வேலை என்று சொல்லிக் கூட்டிச்சென்று விபச்சாரத்தில் தள்ளப்படுதல்

சிங்கப்பூரைச் சேர்ந்த ஜெயந்தி சங்கர் எழுதிய சக்கரம் என்ற சிறுகதையில் கலா என்ற பெண் வீட்டுவேலைக்கு என்று கூட்டிச்செல்லப்படுகிறாள். மாசம் பத்தாயிரம் சம்பளம் என்று சொல்லப்பட, தன் குழந்தையை மாமியார் பொறுப்பிலும் கணவன் பொறுப்பிலும் விட்டுவிட்டு மகனைப் பிரிய மனமில்லாமல் செல்கிறாள்.

> "சென்னை மீனம்பாக்கம் வரும் வழியெல்லாம் பேருந்தில் குழந்தையை நினைத்து வருந்தியபடியே இருந்தாள். விமானத்தில் ஏறியதும் கலாவுக்குப் புதிய அனுபவங்களும் காட்சிகளும் கொடுத்த பிரமிப்பு அடங்கவே வெகுநேரமானது. சன்னலையொட்டிய இருக்கை கலாவுக்கு. வெளியே எல்லாவற்றையும் பார்த்துப் பார்த்து வியந்தாள். பறக்க ஆரம்பித்த இரண்டாவது மணியில் அவளுக்கு லேசாகத் தூக்கம் வந்தபோதிலும் இருந்தபடியே சரியாக உறங்கவும் முடியாதிருந்தது. அவள் அசந்து தூங்குவதாக நினைத்து கோகிலாக்கா யாரிடமோ பேசிக்கொண்டிருந்தது காதில் விழுந்தது. "நா நெனச்சிருந்த பொண்ணு மூஞ்சே மாறிப் போச்சிக்கா. ரெண்டு மாசம் முன்ன அம்மை போட்ருந்துச்சாம். மூஞ்சப் பாக்க ஒரே கோரம். இருட்ல கூட எவனும் கிட்ட கூட' வரமாட்டான். அதான் வேற தேட்னேன். ஒண்ணும் மாட்ல. உங்களுக்குத் கெடச்ச பொண்ணு எடுப்பா நல்லாத் தான் இருக்குது. இருபத்தெட்டு வயசின்னீங்க. பாத்தா அப்டித்தெர்ல. பத்து வருசத்துக்குக் கவலையில்ல" என்று அந்தாள் பேசியதிலிருந்து சிங்கப்பூரில் தான் செய்யவிருந்த வேலை பற்றி லேசாகச் சந்தேகம் தட்டியது. கழிவறைக்குப் போனால் கூட இருவரில் ஒருவர் அவள் பின்னாலேயே வந்தார்கள்(ப.303).

என்பதன் பின்னர் அவள் அனுபவிக்கும் சித்திரவதைகள் சொல்லிலடங்கா. வலுக்கட்டாயமாக விபசாரத்தில் தள்ளப்படுகிறாள். அவளது உணர்வுகள் கதை முழுக்கச் சுட்டப்படுகின்றன.

## 5 தம் சொந்த மக்களின் தனிமனிதப் பண்பாட்டுக் கேடு குறித்த விமர்சனம்

1 புலம்பெயர் தமிழர்கள் வெளிநாட்டுப் பண்பாட்டுடன் தம் சொந்த நாட்டுப் பண்பாட்டினை ஒப்புநோக்கிப் பார்த்து விமர்சிக்கும்

இடங்களில் கூற்று நிகழ்த்துவோரின் தமிழ்ப் பண்பாடு குறித்த ஏக்கத்துடனான உணர்வு வெளிப்பாட்டினைக் காண முடிகிறது. யாகாவாராயினும் நா காக்க என்ற கதை சிங்கப்பூரைச் சேர்ந்த கனடா முர்த்தி என்பவர் எழுதியதாகும். இக்கதையில் தமிழர் ஒருவர் நாயால் கடிக்கப்பட்டு, சிகிச்சைக்காக நண்பர் ஒருவருடன் ஆஸ்பத்திரியில் உட்கார்ந்திருக்கிறார். அப்போது நாயால் கடிபட்ட வாசுதேவன் என்ற தனிமனிதரின் சமுதாயப்பார்வை முன்வைக்கப்படுகிறது. அவர் சிங்கப்பூரில் பெண்கள் தொடை தெரிய ஆடை அணிவதையும் அதைத் தமிழ்ப் பெண்களும் பின்பற்றுவதையும் இளங்காதலர்கள் பொது இடங்களில் முத்தமிடும் பண்பாட்டினையும் சாடுகிறார். ஆனால் வரதட்சணை வாங்குதல், தன் சாதி பார்த்துத் திருமணம் செய்தல், படித்த பெண்ணைப் பார்த்துத் திருமணம் செய்து சிங்கப்பூருக்குக் கொண்டுவந்து சம்பாதிக்க வைத்தல், பணக்காரியான அப்பெண் சம்பாதிப்பவளாகவும் இருப்பாளாதலால் அவள் தொடை தெரிய ஆடை அணிந்து கொண்டாலும் அவளது பணத்திற்காக அதை ஒத்துக்கொள்ளுதல் என்பது போன்ற சில மோசமான பண்பாட்டுப் பழக்கவழக்கங்களுக்கு அவர் ஆட்பட்டிருப்பதை அவரது நண்பர் கண்டு வருந்தி அது குறித்து எண்ணிப்பார்க்கிறார். கதை பின்வருமாறு முடிகிறது.

> "கொஞ்சம் கண்ணை மூடிக்கொண்டேன். ஒரு நாய் ஊளையிட்டதைக் கேட்டுவிட்டுத் தானும் ஊளையிடும் நாய் ஞாபகத்திற்கு வந்தது. தனக்குத் தெரியாத நாகரீக உருவத்தை விரட்டித் துரத்தும் நாய் ஞாபகத்திற்கு வந்தது. இலஞ்சம் வாங்கி விட்டுத் திருட்டைக் காணாமல் விட்டுவிடும் நாய் ஞாபகத்திற்கு வந்தது. இருந்தபோதும் எனக்கென்னவோ நாய் மீது பலத்த மதிப்பும் வந்தது. நாய்க்குப் பைத்தியம் பிடித்தாலென்ன? அது கூட யாரைக் கடிப்பது என்று நன்கு யோசித்துத்தான் முடிவு செய்யுமோ? (ப.454).

தனிமனிதர்களின் மன ஈனங்களை இக்கதை எடுத்துக்காட்டுகிறது. ஒருவர் செய்வது போலவே தாமும் செய்வதை நியாயப்படுத்தும் கூட்டத்தைக் கதையாசிரியர் விமர்சிப்பது இக்கதையின் சிறப்பாகும்.

2 இதே போல டென்மார்க்கைச் சேர்ந்த வி.ஜீவ குமாரனின் நிர்வாண மனிதர்கள் என்ற கதையில் இடம்பெறும் சாந்தி சமூகத்தை விமர்சிக்கும் இடம் குறிப்பிடத்தக்கது.

> "எது அரியண்டம்---- ஜேர்மன்காரியைத் தன் மகன் வைச்சிருக்கிறான் எண்டும் தெரிஞ்சு கொண்டு சுஜியை பொம்பிளை கேட்டு ஒரு யாழ்ப்பாண மனுசி எங்கடை வீட்டை வந்தாவே---- உன்னைக் கட்ட வந்திட்டு ஹொலண்டிலை இறங்கிப்போனாளே ஒருத்தி --- போடராலை கூட்டிக்கொண்டு வாறன் எண்டு சின்னப் பெட்டைக்கு மயக்க மருந்தைக் கொடுத்து கற்பழிச்சானே ஒருத்தன். --- இந்தியாவிலை பிளட்

வாங்கித் தாறன் எண்டுட்டு காசை எல்லாம் எடுத்துக்கொண்டு தலைமறைவானானே ஒருத்தன்.----அண்ணா அண்ணா எண்டு இவரோடை உயிராய்ப் பழகிக்கொண்டு அவருக்கு நாமம் போட்டுட்டு கனடாக்கு ஓடினானே ஒருத்தன். – கோயில் உண்டியயிலை சேர்த்த காசை ஏப்பம் விட்டாங்களே --- அவன்கள் ---- ஒவ்வொரு நாட்டிலும் சீட்டுகளை முறிச்சுக் கொண்டு மற்ற நாட்டுக்கு அகதி தஞ்சம் கேட்டு ஓடுறாங்களே ---- அவன்கள் - கைகளைக் குலுக்கிக்கொண்டு காலுக்கு கீழே குழிபறிக்கிறாங்களே – அவன்கள் ஓடுறதுதான் நிர்வாண ஓட்டம் - அருவருப்பு - இவன்கள் ஓடுறதிலே என்ன இருக்கு"

(ப.546)

என்ற காட்டமான விமர்சனம் அனைத்து நாட்டு மனிதர்களையும் விமர்சிக்கும் நியாயமான விமர்சனமாக அமைகிறது.

6 தம் பண்பாட்டுச்சிறப்புக் குறித்து எண்ணுதல்

1 கனடா எழுத்தாளர் ஸ்ரீரஞ்சனியின் கதை தடம் மாறும் தார்ப்பரியம் என்ற கதை. வெளிநாட்டில் வாழும் ஒரு தமிழ்த் தம்பதியருக்கு மூன்று குழந்தைகள். அவர்களுள் சற்று முரட்டுக்குணமுள்ள ஒரு குழந்தையை ஒரு நாள் தகப்பன் சிறிது அடித்துவிட அவன் வகுப்பில் ஆசிரியரிடம் சொல்ல அதை அந்நாட்டு அரசு கேட்டுப் பிள்ளை வளர்க்கத் தெரியவில்லை எனக் குற்றம் சாட்டித் தாயைக் குழந்தைகளிடமிருந்து பிரித்து வைத்து வாரம் ஒரு நாள் சிறிது நேரம் மட்டும் குடும்பத்தினரைச் சந்திக்க வைக்கின்றனர். ஒரு குழந்தைகள் நல மையம் அதற்குப் பொறுப்பெடுத்துக் கொள்கிறது. அது தரப்போகும் அறிக்கையின் அடிப்படையில் குடும்பம் ஒன்று சேருமா என்பது தெரியவரும் என்று அம் மையத்தைச் சேர்ந்தவள் தெரியப்படுத்துகிறாள். தமிழில் குடும்பத்தினர் பேசுவதை மொழிபெயர்த்து அம்மையத்தைச் சேர்ந்த பெண்ணுக்குச் சொல்லவந்த தமிழ்ப்பெண் அனைத்தையும் கவனிக்கிறாள். வாரம் ஒரு முறை பேச அனுமதிக்கப்படும் இக்குடும்பத்தினரின் ஒருவர் மீது மற்றொருவர் கொண்டிருக்கும் பாசத்தை அவள் கவனிக்கிறாள். குழந்தைகள் தாயிடமிருந்து அழ அழப் பிரிக்கப்படுகின்றனர். இறுதியில் இவர்கள் ஒன்று சேர முடியாமல் போய்விடுமோ என்று கலங்குகிறாள். ஒன்றுமில்லாததைப் பெரிதுபடுத்தும் மேலை நாட்டுக்கலாச்சாரம் இங்கு விமர்சிக்கப்படுகிறது. கதையில் வரும் குடும்பத்துக் கணவன்,

"அப்படி அவள் அழ அழ அவளைத் தாயிடமிருந்து பறித்து எடுப்பது போலத் தூக்கி எடுத்த அவன், "இந்த வெள்ளையளுக்கு என்ன தெரியும்? பதினெட்டு வயசானதும் இனி உன்ரை வேலையை நீ பார் எண்டு, தங்கடை பிள்ளையளை இவை கலைச்சுவிடுற மாதிரியே நாங்கள் பிள்ளை வளக்கிறனாங்கள்? எனக் கோபமாகச் சொல்லிக் கொண்டு நடக்க ஆரம்பித்தான். மீண்டும் சூரியன் மேகக்

கூட்டத்தினுள் மறைந்து கண்ணாமூச்சி விளையாட, கேள்விக் குறியாய்ப் போன அந்தச் சின்னஞ்சிறு குழந்தைகளின் எதிர்காலத்தை எண்ணி என் இதயம் பலமாகக் கனத்தது" (ப.460)

என்று மொழிபெயர்ப்பாளர் கருத்தில் கதை முடிகிறது.

2 இதே போலப் பிரான்சைச் சேர்ந்த ஜோதிலிங்கம் என்பவரின் லா சப்பல் என்ற கதையில் பிரான்சில் வாழும் தாய் ஒருத்தி கல்லூரிக்குச் செல்லும் தன் தமிழ் மகளைப் பார்த்துப்பார்த்து அடக்கமான உடையுடன் வெளியே அனுப்புகிறாள். ஆனால் அந்தப் பெண் வெளிநாட்டுக் கலாச்சாரத்துக்கு ஆட்பட்டு விளைவாகப் பாலியல் பலாத்காரத்துக்கு உட்பட்டுத் தன் உயிரையே இழக்கிறாள். இக்கதை தமிழர்களின் பெண்கள் அடக்கமாக உடை அணிய வேண்டும் என்ற பண்பாட்டின் ஏற்றத்தினை எண்ணிப் பார்க்கிறது.

முடிவுகள்: பல்வேறு வெளிநாடுகளில் வாழும் புலம்பெயர் இலங்கைத் தமிழர்களின் எழுத்துக்களான இக்கதைகள் இரு கருத்துக்களைக் குறிப்பாக முன்வைக்கின்றன. 1 அவர்களது தாய் நாட்டின் மீதான பற்றும் சொந்த நாட்டில் வாழக் கொடுத்து வைக்கவில்லையே என்பது குறித்த ஏக்கமும் 2. வெளிநாட்டில் வாழும் அவர்களது அடிமைத்தன வாழ்க்கை பற்றிய கழிவிரக்கம். வெளிநாட்டுப் பண்பாட்டுடன் தம் நாட்டுப் பண்பாட்டை ஒப்பிட்டாலும் சரி சமுதாய அவலங்களைச் சீர்தூக்கிப்பார்த்தாலும் சரி இவர்தம் விமர்சனப் பார்வை மிகச் சிறப்பாக இக்கதைகளில் வெளிப்படுகின்றன. இவை யாவும் சங்க இலக்கியத் தன்னுணர்ச்சிப் பாங்கினை அப்படியே கொண்டு விளங்குகின்றன. இதற்கு அவர்கள் தமிழ் இலக்கியங்கள் மீது கொண்டிருக்கும் பற்று ஒரு முக்கியமான காரணம் எனலாம். அதன் தாக்கத்தை இவர்களது இவ்வெழுத்துக்களில் காண இயலுகிறது. காதல், வீரம், தாய்மை போன்ற உள்ளடக்கம் மட்டுமில்லாது அவற்றை வெளிப்படுத்தும் தன்னுணர்ச்சிப்பாங்கும் இக்கதைகளில் குறிப்பிடத்தக்கனவாய் அமைகின்றன. இப்பாங்கு இக்கதைகளின் உயிர்நாடி எனலாம்.

# சிங்கப்பூர்த் தமிழ்க் கவிதைகளில் செவ்வியல் இலக்கியத்தின் சாயல்

முனைவர் அ.அறிவுநம்பி
பேராசிரியர்
சுப்பிரமணிய பாரதியார் தமிழியற்புலம்
புதுவைப் பல்கலைக்கழகம்
புதுச்சேரி - 14

தமிழ்மொழியின் வளமும் நலமும் பரந்துபட்டவை. உலகின் பல பகுதிகளிலும் தமிழின் வீச்சைக் காணஇயலும். தமிழகத்திலிருந்து இந்தியாவின் பிறபகுதிகளுக்கும் உலகின் பல பகுதிகளுக்கும் குடிபெயர்ந்தோர் எண்ணிக்கை மிகப்பெரியது. அவர்கள் வதியும் இடங்களில் தமிழின் பதியம் இடம்பெறக் காணலாம். வாழுகின்ற சூழலுக்கேற்ப அவர்களிடம் புதியபொலிவுடன் பூக்கள் பல மலரலாம். விண்ணை அவை மணமுள்ளதாக்கலாம். ஆனால் வேர்கள் இன்னமும் தாய்மண்ணுடன்தான் உறவுகொண்டுள்ளன. அதனால் அவர்களின் படைப்புகளில் மரபுசார்ந்த தமிழ்ச் செவ்வியல் இலக்கியத்தின் தாக்கம் இடம்பெறுவது இயல்பானது. சிங்கப்பூர் நாட்டில் வாழுகின்ற தமிழர்தம் கவிதைகளில் இழையோடும் செவ்வியல் இலக்கியக் கூறுகளை இனங்காண இக்கட்டுரை முயல்கின்றது. அவ்வளவே.

மலேசியத் திருநாட்டின் ஒரு பகுதியாக அமைந்திருந்த சிங்கப்பூர் 09.08.1965இல் பிரிந்து, தனிக் குடியரசு நாடாகியது. எனினும் அதற்கு முன்னதாகவே சிங்கப்பூர்ப் பகுதியில் மொழி, இலக்கியம் போன்றவற்றைக் கருதும் எழுத்துப் பணிகளும் பொழிவுப் பணிகளும் நடந்தேறின.

> "05.07.1952இல் வை.திருநாவுக்கரசு தலைமையில் எழுத்தாளர் பேரவை என்னும் ஒரு புதுப்பகுதி தமிழ்முரசு நாளிதழில் உருவாக்கப்பட்டது. 'புலவர்கள் சங்கம் கூடித் தமிழ் வளர்த்தனர்; நாம் எழுத்தாளர் பேரவை அமைத்து விழுமிய எழுத்தைப் பெருக்குவோம்' என்னும் முகவுரையோடு இது தமிழ்முரசில் தொடங்கப்பெற்றது"[1]

என்ற குறிப்பு சிங்கப்பூர்த் தமிழர்கள் சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த தமிழ்நிலப் பாதையிலேயே பயணிக்க முடிவுசெய்தமையைப் பகரும்.

யாப்பும் போக்கும்

கவிதை எழுதத் தம் எழுதுகோல்களை ஏந்திய சிங்கப்பூர்ப் பாவலர்களின் கண்களில் செவ்வியல் நூலான தொல்காப்பியம் படர்ந்தமையை நூலொன்று பின்வருமாறு மொழிகிறது:

> "இலக்கண உலகில் யாப்பிலக்கண மரபு நமக்கு இன்று நேற்றுத் தோன்றியதன்று. தொல்காப்பியர் காலத்துக்கு எத்தனையோ ஆயிரம் ஆண்டு களுக்கு முன் தோன்றிய ஒன்று என்பதைத் தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் வரும் .... தொடர்கள் காட்டும்...... சான்றோரால் தொன்று தொட்டு வழங்கிய யாப்பிலக்கண முறைமையைப் பின்பற்றி இயற்றப்பெற்ற மரபுக்கவிதைகள் தோற்றத்தால் தொன்மை இயல்பும், ஊற்றத்தால் வலிமையூட்டும் தன்மையும் கொண்டவை...... இத்தகைய மரபுக் கவிதைகள் தமிழகத்தின் சேய்நாடாகிய சிங்கப்பூரில் வளர்ச்சிகண்டுள்ள திறத்தை விளக்க முயல்கின்றது.... இந்நூல்"[2]

எனவே தொல்காப்பிய மரபுகளைச் சிங்கப்பூரார்களும் தொடர்ந்து பேணிவருவதனை இச்சொல்லாடல்களால் உணரலாம்.

தொல்காப்பிய யாப்பு மரபுகள் மட்டுமின்றிச் சின்னச் சின்னச் சொல்லாட்சிகளும் அவர்களிடம் பதிந்துள்ளமையை உணர வாய்ப்பாகப் பல கூறுகளைக் காணலாம். ஒரு பதச்சோறு: "மழலையின் சிறப்பைக் கூறவந்த இளமாறன் அதனின் ஓசைநயத்தை

> "இனியதமிழ்ப் பண்ணத்தி
> இளையராசா இசையமைப்பு" ....

என ஒப்பிடுகிறார்.[3] இவைபோன்ற இடங்கள் செவ்வியற்பனுவல்களின் இழைகளைச் சிங்கப்பூர்ப் பாக்கள் பெற்றமையைப் படம்பிடிக்கும்.

சிங்கப்பூர்க் கவிதைகளில் ஆசிரியப்பா, வெண்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்னும் பாவகைகளும், தாழிசை, துறை, விருத்தம் என்னும் பாவினங்களும் பயின்றுவருவன கணக்கிலெடுக்கப்பெற வேண்டிய ஒரு முதன்மைக்கூறு. அறிஞர் சுப.திண்ணப்பன் சிங்கப்பூர்க் கவிதைகளில் 78% வெண்பாக்கள் என்பதை வலியுறுத்திக காட்டும்போது வரையும் வரிகள் நோக்கத்தக்கன. அவை வருமாறு: "கவிதையுலகில் வெண்பா என்பது யாப்பிலக்கணக் கட்டுப்பாடு மிக்க

ஒன்று. ஆகவே வெண்பாவில் கவிதை இயற்றுவது என்பது ஒருசிலர்க்கே கைவந்த கலையாக இருக்கின்றது....

> 'எதுகையும் மோனையும் வேண்டவே வேண்டாம்; சீரும் கீரும் சுத்தச் சனியன்கள்; வெண்பாவும் கிண்பாவும் விருத்தமும் கிருத்தமும் வேண்டாத தொல்லைகள்' என்று கருதி 'யாப்பிலக்கணம்' கவிஞர்க்கு ஒரு கைவிலங்கு; அதனை உடைத்தெறிய வேண்டும்' என்னும் கொள்கையுடன் வீறிட்டெழுகின்ற கவிஞர்கள் புதுக்கவிதை என்னும் பெயரால் உரைவீச்சுகளை உலவவிட்டுக் கொண்டிருக்கும் வேளையில், மரபுக் கவிதைகளிலேயே இலக்கணக் கட்டுப்பாடு மிக்க வெண்பா யாப்பினால் இயற்றிய கவிதைகளை ஒரு நூலாகத் தொகுத்து வெளியிடும் இக்குவனம் அவர்களின் முயற்சி பாராட்டுதற்குரிய ஒன்றாகும்.[4]

இக்குறிப்புரையினால் தொல்காப்பிய நெறிகளைச் சிங்கப்பூரும் வளர்த்தெடுத்தமையைப் பெறலாம்.

### இலக்கியங்களில் பழந்தமிழ் மரபுகள்

சிந்தனைகள் காலந்தோறும் விளைவன. எனினும் கூறுமுறையில் பழையபாங்குகள் பதிவாக வேண்டுமென்று சட்டதிட்டம் ஏதுமில்லை. இருப்பினும் செவ்வியல் நூற்செய்திகளையும் மரபுகளையும் சிங்கப்பூரார்கள் முனைமுறியாது பயன்கொண்டமை படித்துப்படித்து இன்புறத்தக்கது. அதற்கான சான்றுகள் பலவுள. ஒருசில இவண் மொழியப்பெறுகின்றன.

> *"பணத்துக்கும் புகழுக்கும் பழிகள் செய்து*
> *பண்பறுத்து வாழாமல் பணிவும் அன்பும்*
> *மனத்துக்கண் பெருகிவர மானத்தோடு*
> *மாசின்றி நடப்பவரே மாட்சியாளர்"*[5]

என்ற பாடலில் வள்ளுவரின் 'மனத்துக்கண்', 'மாசு' என்ற சொற்கள் இழைந்துவரக் காணலாம். அதைப்போலக் கவிதை ஒன்றை அலசும் ஏ.ஆர்ஏ.சிவகுமாரன்

> "ஐ.உலகநாதனின் கருத்து 'பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல்' என்னும் வள்ளுவரின் குறளடியை நினைவுகூர வைக்கிறது"[6]

என்பதும் குறிக்கத்தக்கது.

ஏழைகளைத் துயரற்றவர்களாக மாற்ற மற்றவர்கள் முன்வர வேண்டும் என்பது போன்ற கருத்துகள் இடம்பெறும் பாக்களில் சங்ககால வள்ளன்மை நினைவுகூரப்பெறும். தத்துவங்கள் கூடப் பழந்தமிழ் நூல்களிலிருந்து உள்வாங்கப்பெற்று வேறுசொற்களில் பிறப்பெடுக்கின்றன.

*"மரணத்தை வென்றவர்கள் மண்ணுலகில் பலருண்டு*
*மரணம்வரும் முன்னாலே மடிந்தவரும் நிறையவுண்டு"*[7]

என்ற பாடலில் சங்கமறவர் வீரம், போர்க்கள உறுதி போன்றவையும் குறளில் இடம்பெறும் 'செத்தாருள் வைக்கப்படும்' சிந்தனையும் உறங்குவதை உணரலாம். நிலையாமை என்பது எல்லாக்காலத்திற்கும் உரிய நிலைத்த ஒரு கொள்கை. எனினும் பழந்தமிழ் இலக்கியங்கள் முன்நிறுத்தும் முருகனைப் போற்றும் ஒரு பாடல் பொருள் நிலையாமையை முதன்மைப்படுத்துவது நோக்கத்தக்கது.

*"காணும் பொருள்யாவும் காலப் பெருஞ்சுழலில்*
*பூணும் அழிவதனைப் பூமியிலே - பேணும்*
*மயிலா சனத்திருக்கும் வள்ளிமண வாளன்*
*அயில்வேல் முருகனடி அண்டு"*

என்பது பாடல்.[8] சங்ககாலக் கடவுளான முருகனும், பண்டைத் தமிழ் மரபின் நிலையாமையும் பின்னிப் பிணைந்து வெளிப்பட்ட பாடலிது.

தமிழ் என்றால் சங்ககால வேந்தர்களின் அரவணைப்புக் குள்ளான தனிமொழி என்பது சிங்கப்பூர்க் கவிவாணர்களின் மனக்கருத்து. இதனை,

*"கொற்றவர் மடியில் / குலவிய செல்வி*
*குளிர்தமிழ் என்னுமோர் / குமரி அவட்கே*
*அற்புதமலர் மாலை சூட்டுவேன்"*[9]

என்ற பாடல் பழந்தமிழர் மொழியுணர்வை எடுத்துரைப்பதுடன் அதனை மீளக்கூறும் இக்காலக் கவிஞரின் மனநிலையையும் எடுத்துமொழியும். காதல் பாடல்களில் திணை, துறை அமைப்பு இடம்பெறவில்லையே தவிரப் பண்டைத் தமிழ்நூல்கள் செப்பும் காதலின் சிறப்பு, இன்பம், தூது, கனவு, ஆற்றியிருத்தல், காதலியின் பொலிவு எனப் பல்வகைச் செய்திகள் பரிமாறப்பெற்றுள்ளன. சிங்கப்பூர், மலேசியா, தமிழ்நாட்டுச் சான்றோர்கள் இறந்தபோது, சிங்கைக் கவிஞர்கள் பாடிய இரங்கற்பாக்கள் 'முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே' என்பது போன்ற வரிகளில் பொதும்பும் சோகச் சாயலைப் படியிறக்கம் செய்கின்றன.

அன்றைய தமிழ் இலக்கிய வரிகளையும் தமிழரின் வாழ்வியலையும் படம்பிடிக்கும் பாக்களும் சிங்கப்பூரில் தென்படுகின்றன.

*"மயிர்நீப்பின் வாழா மானொத்த பண்பில்*
*மானத்தைப் போற்றியவன் தமிழன்; வேட்கைத்*
*துயர்நீக்க நீரளித்தான் வெஞ்சிறையில் மாற்றான்*
*துடிக்கின்ற நாவறட்சி தோற்றோடிப் போக*
*உயிர்வெறுத்து மாற்றான்கை நீர்மறுத்துச் செத்தான்;*
*உளத்தினிலே நிலைத்ததடா ஒண்டமிழர் பண்பே"*[10]

மெய்சிலிர்க்க வைக்கும் இந்தப் பாடலில் திருக்குறளின் 'மானக்' கருத்துகளும், புறநானூற்றின் 74ஆம் பாடலின் 'மானக்' கருத்துகளும் ஒருசேர வழங்கப்பெறுகின்றன.

வேந்தர்கள், மன்னர்கள், வள்ளல்கள் போன்றாரைப் புகழ்தல் சங்கப் பா மரபு. சிங்கப்பூரிலும் இம்மரபின் தொடர்ச்சி இடம்பெறும். ஆள்பவரை, சான்றோரை, புலவர்களைத் தூக்கிப்பிடிக்கும் வாழ்த்தியல் கவிதைகள் அங்கும் ஏராளம். சிங்கை நாட்டுத் தமிழ்ச் சமுதாயத் தலைவரான தமிழவேள் கோ.சாரங்கபாணியைப் புகழ்ந்து பாவலர்கள் பலரெழுதிய பாக்களின் தொகுப்பே 'கவிக்குலம் போற்றும் தமிழவேள்' என்பதாம். இதுபோன்ற பணிகளை ஆராயும் நூலொன்று,

> "சங்ககாலந்தொட்டே தனிமனிதனைப் புகழ்வதும், அரசர்களைப் புகழ்வதும் நம் தமிழ் இலக்கியத்தில் ஒரு கூறாக இருந்துவருகிறது. தனிமனிதர்கள் - தலைவர்கள் இவர்களது புகழ்ச்சிக்குக் காரணமானவற்றைக் குறிப்பிட்டுச் சொல்வது அக்காலந்தொட்டே புலவர்களிடையே இருந்துவரும் மரபாக உள்ளது" எனப் பழமையை நினைத்துப் பார்க்கும்.[11]

இவ்வாறான சூழலில் இனப்பழிப்பும், அதனை எதிர்க்கும் பகுதிகளும் பாடுபொருள்களாக அமையக் காணலாம். மேற்சுட்டிய நூல் ***"தன் இனத்தானைப் பிறர் குறைகூறுவதைக் கண்டு கொதித்து எழுதல், மொழிப்பற்றற்ற பெரிய மனிதர்களின் அவலங்களைப் பற்றிக் கூறல் முதலிய செய்திகளும்...."***[12] சிங்கைப் பாவலரிடையே அமைவதைக் கூறும். சிலப்பதிகாரத்தின் சேரன் செங்குட்டுவனின் வடநாட்டுப் படையெடுப்பு உடன்வைத்து எண்ணத்தக்கது.

"தொல்காப்பியத்தில் பேசாதனவற்றைப் பேசுவன போலவும் கேளாதனவற்றைக் கேட்பனபோலவும் அமைத்துப்பாடும் தன்மை பற்றி,

*'சொல்லுந போலவும் கேட்குந போலவும்*
*சொல்லியாங் கமையும் (பொருள், செய்யுளியல், 501)*

என்று கூறப்பட்டுள்ளது... நன்னூலிலும் அது பற்றிய குறிப்புக் காணப்படுகிறது.... இதனைத் தமிழில் இலக்கணை என்பர். இவ்வுத்திகளைச் சிங்கைக் கவிஞர்களில் ஐ.உலகநாதன், சிங்கைமுகிலன், சி.த.பழனிச்சாமி, ஜமீலா ஆகியோர் கையாண்டுள்ளனர்.... ஐ.உலகநாதன் அ..றிணைப் பொருளாகிய மூட்டைப்பூச்சி பேசுவதுபோல் இரங்கற்பா பாடியுள்ளார்.... சிங்கையில் 'மூட்டைப்பூச்சி' கூட இரங்கற்பா பாடும் எனக் கவிஞர் கற்பனை செய்திருப்பது குறிப்பிடத்தக்கது." சித.பழனிச்சாமி என்ற பாவலர் மனிதருக்குக் 'கொசு' அறவுரை கூறுவதாகக் கற்பனை செய்து பாப்புனைந்துள்ளார்.

இவ்வண்ணமாகச் சிங்கப்பூர்த் தமிழ்ப் பாவலர்களின் படைப்புகளில் செவ்வியல் இலக்கண, இலக்கியக் கூறுகள் ஒளிர்வதனைக் கண்டின்புறலாம்.

### துணை நூல்கள்


1. டாக்டர் சுப.திண்ணப்பன், டாக்டர் ஏ.ஆர்.ஏ.சிவகுமாரன், 'சிங்கப்பூர்த் தமிழிலக்கிய வரலாறு ஒரு கண்ணோட்டம்', ப.16.
2. டாக்டர் ஏ.ஆர்.ஏ.சிவகுமாரன், 'சிங்கப்பூர் மரபுக் கவிதைகள் - ஒரு திறனாய்வு', அணிந்துரை, பக்.v-vi.
3. மேலது, ப.61.
4. மேற்கோள், சுப.திண்ணப்பன், மேற்சுட்டிய நூல், ப.118.
5. மேலது, ப.81.
6. மேலது, ப.83.
7. மேலது, ப.77.
8. மேலது, ப.96.
9. மேலது, ப.70.
10. மேலது, ப.71.
11. மேலது, ப.56.
12. மேலது, ப.64.

# செவ்வியல் இலக்கியங்களில் புலம்பெயர் தமிழர்களின் அடையாளம் பண்பாடு - நம்பிக்கைகள்

சூ.யோ.பற்றிமாகரன்
ஒக்ஸ்வேர்ட்
ஐக்கிய இராச்சியம்

## நோக்கை விளக்குதல் - அகநோக்கு

செக்கோசிலாவிக்கியாவின் சார்ளஸ் பல்கலைக்கழகத்தில் பேராசிரியராக இருக்கையில் 1973ல் கமில் சுவெலபில் தான் 1973இல் எழுதிய கவிஞர்களும் சக்திகளும் (The Poets and the Powers) என்னும் நூலில் தமிழர்களைக் கிரேக்கர்களுடன் ஒப்பிட்டுள்ளார். கிரேக்கர்களுக்கு உள்ள சிறப்பு அவர்களின் இலக்கியத் தொன்மையே. ஆனால் தமிழர்களின் செவ்விலக்கியங்கள் தொன்மையை மட்டுமல்ல தொடர்ச்சியையும் கொண்டிருப்பமை தமிழ் மொழியின் தனிச்சிறப்பு எனலாம். இதனைக் கவிஞர் முத்துலீலன் நெடுமாறன் அவர்கள்

> "தமிழின் மேன்மை அதன் தொன்மையில் இல்லை
> தொடர்ச்சியில் உள்ளது"

எனக் கவிவாக்காகவே பதிவு செய்துள்ளதைக் காண்கின்றோம்.

மேலும் கனடாவிலிருந்து நவரத்தினம் கிரிதரன்

> "எனக்குத் தமிழ்நாட்டு எழுத்தாளர்களாக இருந்தால் என்ன சிங்கப்பூர் மலேசியா இலங்கைத் தமிழ் எழுத்தாளராக இருந்தால் என்ன வேறுபாடு தெரிவதில்லை. நாம் எல்லோரும் தமிழ் எழுத்தாளர் குடும்பத்தைச் சேர்ந்தவர்களே. உதாரணமாகத் தமிழ்நாட்டின் பல்வேறு பகுதிகளையும் சேர்ந்தவர்கள் வித்தியாசமான முறையில் தமிழைப் பேசலாம் எழுதலாம். இவ்விதம் வேறுபட்ட முறைகள் தமிழப் பேச்சு, எழுத்துக்களில் இடம்பெறுவதால் அவர்கள் வேறானவர்கள் என்று பொருளில்லை. எல்லோருமே தமிழ் எழுத்தாளர் குடும்பத்தைச் சேர்ந்தவர்களே. இதனாலே

> புலம்பெயர் தமிழ் இலக்கியங்களாக இருந்தால் என்ன சிங்கப்பூர் மலேசிய இலங்கைத் தமிழ் இலக்கியங்களாக இருந்தால் என்ன? அவை எல்லாமே தமிழ் இலக்கியம் என்னும் பொதுச் சொற்பரப்பில் அடங்குபவையே"

என்கிற கருத்தை முன்வைத்தார்.

இந்த உணர்வு உலகத்தில் வாழும் எல்லாத் தமிழர்களுக்கும் பொதுவானது என்பதை மதுரை மாநகரில் 1948 முதல் சிறப்பாகக் கல்விப்பணியாற்றும் தொன்மையைக் கொண்டும், விஜய் தொலைக்காட்சியின் இவ்வாண்டுக்கான சிறந்த தமிழகக் கல்லூரி என்ற விருதினைப் பெற்றதன் மூலம் கல்விப்பணியாற்றும் சிறப்பு இன்றும் தொடர்கிறது என்ற உண்மையை நிருபித்தும் நிற்கும், லேடி டோக் மகளிர் கல்லூரி தமிழ்த்துறையினர் நடத்தும் இந்த "புலம்பெயர் தமிழ்ப்படைப்புக்களில் செவ்வியல் தாக்கம்" என்னும் அனைத்துலக மகாநாடு எடுத்துக்காட்டுகிறது.

இந்தப் புலம்பெயர் படைப்புக்கள் என்னும் வகைமையின் சாரங்களின் தேடல் 01. தமிழர்களுக்கு அவர்களின் அடையாளமாகத் தொடரும் தன்மையைக் கொண்டுள்ளது. 02. தமிழ்க் கலாச்சாரத்தினைத் தொடரவைக்கும் ஆற்றலைக் கொண்டுள்ளது. 03 தமிழர்கள் தாம் வாழும் இடங்களில் தமிழராக வாழ்வதற்கான நம்பிக்கையை வலுப்படுத்துகிறது என்பது என் கருத்து. (இதனைச் சிறிது விளக்குவதே இச்சிறு ஆய்வின் நோக்காக அமைகிறது. இந்த நோக்கின் பயனாகச் செவ்விலக்கிய அறிவு தமிழர்களுக்கு என்றும் எங்கும் நல்ல முறையில் அளிக்கப்படல் வேண்டும் என்னும் எண்ணத்தைத் தோற்றுவிப்பது இவ்வாய்வின் அகநோக்காக (subject) அமைகிறது.

## போக்கை விளங்கிக் கொள்ள வைத்தல் - புறநோக்கு

செவ்விலக்கியத்தின் தொடர்த் தாக்கம் புலம்பெயர் படைப்புக்களில் உள்ளது என்று சொன்னாலும் செவ்விலக்கியங்கள் பிறந்த காலத்திற்கும் இன்றைய காலத்திற்கும் இடையில் உள்ள பரிணாம வளர்ச்சிகள் புலம்பெயர் படைப்புக்கள் பழமைமிகு செவ்விலக்கியத்தில் இருந்து வேறுபட்ட மாறுபட்ட ஒன்றாகவும் அமைவதை இயல்புடைய தாக்குகின்றன. அதிலும் நவீனத்துவக் காலம் உருவாக்கப்பட்ட உண்மைகளில் இருந்து விடுபட்டுக் காணாநிலையிலுள்ள உண்மையைத் தேடல் வேண்டும் என்பதை மையமாகக் கொண்டது. ("disenchantment with material truth and search for abstract truth."). இக்காலத்தில்தான் தந்தை பெரியார் ஈ. வெ. இராமசாமி அவர்களால் தொடங்கப்பெற்ற திராவிட உணர்வு, பேரறிஞர் அண்ணாதுரைவழி திராவிட இயக்க உணர்வாகிப் படைப்புக்களுள் சாதி சமயத்தைக் கடந்த "மனிதாயம்" என்னும்

செம்மையைத் தேடிச் சங்க இலக்கியங்களில் அதனைக் கண்டு, செவ்விலக்கிய மரபை நவீனத் தமிழ் இலக்கியத்தின் அத்திவாரமாக்க முயன்றன. ஆனால் 1968களை அடுத்து உலகில் பின்நவீனத்துவம் வளர்ச்சி பெறத் தொடங்கிய பொழுது உலகப் பொதுமையான உண்மையோ வேறு எதுவுமோ இல்லை (There are no Universal Truth, abstract or otherwise) என்கிற கருத்து படைப்புக்களின் வெளிப்பாடாக அமையத் தொடங்கியது. இந்தக் காலத்தில் ஏற்பட்ட தமிழர்களின் புலப்பெயர்வுகள், பின்முதலாளித்துவக் காலத்தின் தன்மையான "தனிமைப்படுத்தல்"(Isolation), 'பாழ்படுத்தல்' (Exploitation) என்பவற்றைத் தமது போக்குகளாக வெளிப்படுத்தின. இன்றும் வெளிப்படுத்துகின்றன. இப் போக்குகள் ஓர் இலக்கியப் பரிணாமமே தவிர வேறுஒன்றுமில்லை என்பதை விளங்கிக் கொண்டாலே புலம்பெயர் படைப்புக்களில் உள்ள யதார்த்தத்தைப் புரிந்து கொள்ள முடியும். 'உள்ளதை உள்ளபடி சொல்லுதல் என்னும் யதார்த்தத்தில்' செவ்வியல் இலக்கியத்தின் தாக்கம் புலம்பெயர் படைப்புக்களில் காணப்படுவதில் இவ்விருவகை இலக்கியங்களிலும் பொதுமைப் போக்கைக் கொண்டுள்ளன. இது புலம்பெயர் தமிழர்களின் அடையாளம், கலாச்சாரம், வாழ்தலுக்கான நம்பிக்கை என்பதில் முக்கியப் பங்கை வகிக்கின்றது என்பதை இன்றைய இலக்கியச் சுவைஞர்கள் விளங்கிக் கொள்ள வைப்பதைத் தனது புறநோக்காகக் (Object) கொண்டுள்ளது.

### தொல்சீர் இலக்கியங்கள் அடையாளம் என்பதே பயன்

"செம்மொழிகள், செவ்விலக்கியங்கள் என்னும் சொற்களைவிடத் "தொல்சீர் மொழிகள்" தொல்சீர் இலக்கியங்கள்" என்பதே "Classical Language, Classical Literature" என்ற ஆங்கிலச் சொல்லுக்கு ஏற்புடைய சொற்கள் என்பதனைக் காலமாகி விட்ட பேராசிரியர் கார்த்திக்கேசு சிவத்தம்பி அவர்கள் தமது "செம்மொழி வரையறைகளும் தமிழும்"[1] என்னும் ஆய்வுக்கட்டுரையில் விளக்கியுள்ளார். "தொன்மை, தொடர்ச்சி, செழுமை வளம்" என்று மூன்று முக்கியப் பண்புகள் செம்மைத்தன்மைக்கு முக்கியம் என்பது பேராசிரியர் கா. சிவத்தம்பி அவர்களின் கருத்தாக உள்ளது. தமிழிலக்கியம் தொன்மையானதாக மட்டுமல்ல தொடர்ச்சியானதாகவும் செழுமை வளத்துடனும் இருக்கிறது என்பதை வலியுறுத்தவே பேராசிரியர் கா. சிவத்தம்பி அவர்கள் "தொல்சீர்" என்ற சொல்லை "Classical" என்பதற்குச் சமானமான தமிழ்ச்சொல்லாக எடுத்துரைத்தார். நாம் வரலாற்றுக்கு முற்பட்ட வரலாறு கொண்டவர்கள் என்ற அடையாளத்தைத் "தொன்மை"யும் நாம் கலாச்சாரத் தொடர்ச்சி கொண்டவர்கள் என்பதைத் "தொடர்ச்சியும்" வாழ்வுக்கான நம்பிக்கையைச் "செழுமை வளமும்" எமக்கு உணர்த்துகின்றன. அதாவது வாழ்வின் எல்லாவிதமான சவால்களுக்கு மத்தியிலும் அடையாளத்தை, கலாச்சாரத்தை, வாழ்வதற்கான நம்பிக்கையை

இழந்து விடாது வாழவேண்டும் என்னும் உறுதியைத் தருகிறது. இதுவே செவ்விலக்கிய அறிவின் பயன்.

**புலம்பெயர் இலக்கியங்களில் செவ்வியல் இலக்கியத் தாக்கம்**

இந்தச் செவ்வியல் இலக்கியத்தின் தன்மை புலம்பெயர் இலக்கியங்களிலும் உள்ளது என்பதற்குச் சிறு உதாரணமாக அமைகின்றன, எழில் எழுதிய 'முள்ளிவாய்க்காலும் post (பின்) முள்ளிவாய்க்காலும் என்னும் கவிதைத் தொகுதியில் உள்ள

**அலைச்சல்கள்**
**இடப் பெயர்வுகள்**
**இருப்பதற்காக**
**மட்டுமல்ல**
**இருப்பிற்கானதும் கூட**

வரிகள். இத்தனைத் துன்பங்களுக்கு மத்தியிலும் வாழ்வு உண்டு. வளமைகள் மீளும் என்கிற நம்பிக்கையை ஊட்டுகிறது. புலம்பெயர் படைப்புக்கள் தரும் இந்த நம்பிக்கையை வளர்த்தல் வழி புலம்பெயர்ந்தவர்களாக வாழுகின்ற தமிழர்கள் வாழ்வதற்கான சக்தியை அளிப்பதே (empowerment) புலம்பெயர் படைப்புக்கள் மீதான ஆய்வுகளின் நோக்காக அமைதல் வேண்டும் என்பது என் விருப்பு.

இந்த நோக்குடன் புலம்பெயர் படைப்புக்களாகப் பல அற்புதமான நூல்கள் பல இருப்பினும் எனக்குக் கிடைத்தவைகளின் அடிப்படையிலும் ஆய்வின் அளவின் அடிப்படையிலும், வகைமாதிரியாக 4 நூல்களை மையப்படுத்தி இவ்வாய்வினைச் செய்யலாமென எண்ணுகிறேன்.

இலண்டன் புலவர் ந. சிவநாதன் அவர்களின் "சத்தியம்" சாகாது கவிதைத் தொகுதி, தான்யா, பிரதீபா கனா, தில்லைநாதன் ஆகியோர் கனடாவில் இருந்து தொகுத்த "ஒலிக்காத இளவேனில்" கவிதைத் தொகுதி, தாயகத்திலும் தமிழகத்திலும் ஐரோப்பாவிலும் வாழ்ந்த அனுபவங்களுடன் புலம்பெயர்வு வாழ்வின் அவலங்களை வெளிப்படுத்தும் எழில் எழுதிய "உள்மை" "Post முள்ளி வாய்க்கால்" என்னும் இரு நூல்கள் ஆகிய நான்கு நூல்களை மையப்படுத்தி இச்சிறு ஆய்வைச் செய்கின்றேன்.

**புலம்பெயர்ந்தோர் படைப்புக்கள் என்னும் கருத்தியல்**

'புலம்' என்ற சொல்லுக்கு 1911ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட நா. கதிரைவேற்பிள்ளை அவர்களின் தமிழ்மொழி அகராதியின்படி அறிவு, இடம், ஒலி, முதலைம்புலன், திக்கு, நுண்மை, மேட்டுநிலம், வயல், புலவரிசி என்கிற அர்த்தங்கள் கூறப்பட்டுள்ளன.[3]

'இடம்' என்பது நிலத்தைக் குறிக்கிறது என்ற பொது எண்ணத்தில் ஒருவர் வாழும் இடத்திலிருந்து இன்னொரு வாழ்விடத் திற்கு இடம்பெயர்கின்ற பொழுது அவரை இடம்பெயர்ந்துள்ளார்

என்கிறோம். இடப் பெயர்ச்சி என்பது கணித மொழியில் ஒரு புள்ளியில் இருந்து இயங்கத் தொடங்கிய ஒன்று நிற்கின்ற நிலைக்கும் உற்பத்திப் புள்ளிக்கும் இடையிலான பாதையின் நீளம் ஆகும். இயங்கத் தொடங்கிய புள்ளி மீளவும் உற்பத்திக்கே திரும்பி விட்டால் அதனது இடப்பெயர்வு பூஜ்ஜியம் ஆகும். இந்தப் பின்னணியில் இடம் பெயர்வு என்பது ஒருவர் தனது உற்பத்தி நிலையில் நின்று விலகி நிற்கும் தூரத்தைக் குறிக்கும் சொல்லாகி அது ஆகுபெயராக இடம்பெயர்ந்தோர் என இடப்பெயர்வு அடைந்தவர்களையும் குறிக்கிறது. ஆயினும் என்னிடம், உன்னிடம், அவரிடம், அவ்விடம், இவ்விடம் என்கிற சொற்களில் எல்லாம் இடத்திற்கும் ஆளுக்கும் அல்லது பொருளுக்கும் உள்ள உரிமைத் தொடர்பு ஒன்றும் உணரப்படுகிறது. ஆகவே இடம்பெயர்வு என்கையில் உரிமைத்தன்மையிலும் மாற்றம் ஏற்படுகிறது என்பதனை மறத்தல் கூடாது. இங்குத் தான் திக்கு என்ற சொல்லாட்சியின் முக்கியத்துவத்தை உணர வேண்டும். "திக்குத் தெரியாத" நிலை என்பது ஒருவர் தாம் எந்தத்திசையில் உள்ளார் என்பதை வரையறை செய்ய இயலாத நிலை. இதனால் புலம் பெயர்தல் என்பதற்குத் திக்குத் தெரியாத நிலையில் வாழ்வினை எதிர் கொள்ளுதல் என்கிற கருத்தினை நாம் கவனத்தில் கொள்கின்ற பொழுது தான் புலம்பெயர்ந்தோர் இலக்கியங்களில் "புலம்பல்" சுவை மிகுவதைப் புரிந்து கொள்ள முடியும். இதற்குக் காரணம் புலப்பெயர்வு 'தனிமை' (isolation) என்கிற நிலையைத் தோற்றுவிக்கின்றது. இதனால் புலம்பல் என்ற சொல்கூடத் தனிமை உணர்வுடன் தொடர்புடையதென்றே தொல்காப்பியம் கூறுகிறது.

**"புலம்பே தனிமை"** (தொல் சொல் 814).

செவ்வியல் இலக்கியக் காலத்தில் புலம் என்பது வயலைக் குறித்துள்ளது. திருக்குறள் காலத்தில் புலம் என்ற சொல்லுக்கு வயல் என்ற பொருளிருந்துள்ளது. அந்த வகையில் வயல் விளைத்தலுக்காகச் சென்றவர்களும் புலம் பெயர்ந்தவர்களாகவே கொள்ளப்பட்டுள்ளனர். அவ்வாறே மேட்டுநிலம் நோக்கி நகர்ந்து வாழ்ந்தவர்களும் புலம்பெயர்ந்தவர்களாகக் கருதப்பட்டுள்ளனர். இவற்றை எல்லாம் எடுத்து நோக்கும் பொழுது தொழிலுக்காகவோ வாழ்வுக்காகவோ தாம் வாழ்ந்த நாடு விட்டு வேறு ஒரு நாட்டுக்குத் போகும் திசைதெரியாது நடைபெற்ற இடப்பெயர்வுகளைப் புலப்பெயர்வு எனலாம்.

### சிதறுண்டு வாழ்பவர் (Diaspora) படைப்புக்களே சிறந்த வகைமாதிரிகள்

அதேவேளையில் ஒரு நாட்டிலிருந்து இன்னொரு நாட்டுக்கு நிரந்தரமாக வசிப்பதற்கென்று விருப்பத்தின் பெயரில் சென்றவர்கள் குடியேற்றவாசிகள் (Immigrant) என்பர். கட்டாயத்தின் பேரில் புலம்பெயர்ந்தாலும் குடியுரிமை பெற்று அத்தேசத்தவராகவே நீண்ட காலமாக வாழத்தொடங்கிவிட்டால் அவர்களது இலக்கியங்களையும்

புலம்பெயர் படைப்புக்கள் என்று கொள்ளலாம் என்கிற பொதுவான கருத்தும் உண்டு. அதனாலேயே இந்த ஆய்வரங்கத்திற்கான தலைப்பின் ஆங்கில மொழிபெயர்ப்பும் கூட 'Influence of classical literature on immigrant literature',என்றே இடம்பெற்று இருப்பதைக் காணலாம். ஆனால் ஒருவர் தன் சொந்த நாட்டிலிருந்து விரட்டப்பட்டு (Expel) அல்லது அகற்றப்பட்டு (Remove).இன்னொருநாட்டில் வாழ்தலை புலப்பெயர்வு (Expatriate) என்று குறிக்கின்ற பின்னணியில் புலம்பெயர் படைப்புக்களைப் பார்த்தாலே அவற்றின் உயிர்த்தன்மையைப் புரிந்து கொள்ளலாம். கட்டாயத்தின் தாக்கத்தால் இன்னொருநாட்டிற்குப் புலம் பெயர்தலை வெளியக இடப்பெயர்வு (External Displacement) என்றும் கூறுவர். உள்நாட்டிலேயே தங்கள் சொந்தநாட்டிலேயே வீடுகளில் வாழ இயலாத நிலையில் கட்டாயத்தின் பேரில் அல்லது அழிவிலிருந்து மறுவாழ்வு தொடங்கும் வரை வாழும் வாழ்வை உள்ளக இடப்பெயர்வு (Internal Displacement) என்று கூறுவர். இதுவும் ஒருவகைப் புலப்பெயர்வுதான் என்பதினால் இவர்களின் இலக்கியங்களையும் புலம்பெயர் படைப்புக்கள் என்பதில் அடக்குதல் அவசியமாகிறது. மேலும் இனங்காணக் கூடிய அச்சுறுத்தலால் அல்லது வெளியே தள்ளப்படுவதினால் ஒரு நாட்டில் என்று இல்லாது உலகின் பல நாடுகளிலும் பிரிந்து தமக்குச் சொந்த நாடற்ற மக்களாக வாழும் நிலையில் உள்ள மக்களைச் சிதறுண்டு வாழ்பவர்கள் (Diaspora) என்பர். வரலாற்றில் யூத இனம் இந்த அனுபவத்தைச் சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளாகக் கொண்டிருந்ததால் "டயஸ்பரா' (Diaspora) என்ற இந்தச் சொற்றொடர் ஆகுபெயராக யூதர்களையே குறித்து வருகிறது. ஆயினும் 1983க்குப் பின்னர் இலங்கைத் தமிழர்களும் உலகின் பலநாடுகளிலும் சிதறுண்டு வாழ்வதால் தமிழ்ச் சிதறுண்டு வாழ்வோர் (Tamil Diaspora) என்ற சொல்லாட்சியும் நிலவுகிறது. இவர்களது இலக்கியங்களைப் புலம்பெயர் படைப்பு என்பதற்கான வகைமாதிரியாகக் கொள்ளுதல் சிறப்புடையதாக அமைகிறது.

### புலப்பெயர் வாழ்வுக்கு ஒரு கவிதை உதாரணம்

புலப்பெயர்வை எழில் அவர்களின் 'உள்மை' கவிதைத் தொகுதியில் வரும் புலப்பெயர்வு என்னும் கவிதை மிக அழகாக எடுத்து விளக்குகிறது.

பிறந்த மண்
அந்நியமானது
மனக்குமுறல்கள்
குண்டு வெடித்த ஓசையாய்
சொந்தங்கள்
நினைவுகளில்
மட்டும் பசுமையாய்
கனவில்
தூக்கம்
விழிக்கிறேன்

யாரோ
என்
தாய் மண்ணை
வன்புணர
முயல்வதாய்
அகதி- என்ற
அடையாளத்தில்
இயந்திரத்தில்
சக்கையாய்
மறுநாள்
விடியும் என்ற
எதிர்பார்ப்புடன்

இக்கவிதை புலப்பெயர்வின் துன்பத்தை விளக்கினாலும் தாய்மண்ணின் தொடர்பைவிட மனமில்லா மனிதர்களாகப் புலம்பெயர்ந்தவர்களில் பெரும்பாலானவர்கள் வாழ்கின்றார்கள் என்ற உண்மையை வெளிப்படுத்துகிறது. இவ்வாறு உலகில் எங்கு வாழ்ந்தாலும் தாயகத் தமிழகத் தமிழர்களுடனான தங்கள் உள்ளத்தொடர்பைத் தொடர்வதும் இதற்கு இன்றைய தகவல் யுகமும் தொலைத்தொடர்பு மற்றும் போக்குவரத்து வளர்ச்சிகளும் துணைசெய்வதும் தமிழர்களை எல்லைகள் பரந்த தேசியத்தில் (Trans National) வாழவைத்துக் கொண்டிருப்பது இன்றைய காலத்தின் யதார்த்தமாக உள்ளது. இதனால் புலம்பெயர் படைப்புக்கள் பலவும் தாம் வாழும் மண்ணில் நின்று தாயகத் தமிழக நிலைகள் குறித்த பார்வைகளை முன்வைக்கின்றன, வாழ்தலுக்கு நம்பிக்கை ஊட்டுகின்றன என்கிற பொதுமைப்படுத்தலுக்கு எழிலின் மேற்சொன்ன கவிதை நல்லதொரு உதாரணமாகிறது. யுக பாரதி "இந்த நூற்றாண்டை முன்நடத்திச் செல்லும் இலக்கியவாதி இலங்கையில் இருந்தே தோன்றுவான்" என்றதும் மாலன் "புலம்பெயர்ந்த தமிழர்கள் தமிழை உலகத்தரத்திற்கு எடுத்துச் செல்கிறார்கள்" என்றதும்[4] பொய்யாக மாட்டா என்பதற்கு இலண்டன் புலவர் சிவநாதன் முதல் எழில் வரையான பல புலம்பெயர் படைப்புக்கள் உதாரணங்களாகின்றன.

## தாயக வாழ்விடக் கவிதை உலப்பு

தாயகத்திலும் புலத்திலும் கவிதை உலப்பு, (அலைவு உலைவு) நிகழ்த்துவனவாகப் புலம்பெயர் படைப்புக்கள் உள்ளன என்பதற்கு புலத்து வாழ்வை இலண்டன் சிவநாதன் புலவர் பின்வருமாறு பாடி வாடி வாழ்வது உதாரணமாகிறது.

ஆழ்கடற் பிறந்த மீனை
அலையது இழுத்து வந்து
பால்மணற்பரப்பிற் போடப்
பலமுறையுயிர் துடித்து

**வால்தலையடித்துச் சாகும்**
**வண்ணம் போல் நானுமிங்கு**
**வாழ்வினை நகர்த்துகின்றேன்**
**வல்வினை வசத்தாற்றானே** (சத்தியம் சாகாது பக்51)

இவ்வாறு புலம்பெயர் வாழ்வை உள்ளத்தில் துன்பமாகக் கருதும் புலத்து 1ஆம் தலைமுறையினர் தங்கள் பிள்ளைகளின் எதிர்காலத்தை நினைத்துக் கவலைப்படுவதிலேயே மனஅழுத்தம் (Stress) அடைகின்றனர். இந்த மன அழுத்தம் பலரை நடைமுறை நோயாளிகளாக்குகிறது. இந்த மன அழுத்தத்தை இலண்டன் சிவநாதப்புலவர் மிக அழகான ஒரு தமிழ்ப்பாடலாகவே “விருட்சம்” என்ற தலைப்பில் ‘சத்தியம் சாகாது’ கவிதைத் தொகுப்பில் இலக்கியமாக்குகிறார்.

**பாட்டொடும் ஏட்டோடும் என் பூட்டன் மறைந்தான்**
**நாட்டோடும் அரசோடும் என் பாட்டன் தொலைந்தான்**
**வீட்டோடும் வளவோடும் எந் தந்தை இறந்தான்**
**வீதியிலே அலைவதற்கோ என் பிள்ளை பிறந்தான்?**

இந்தத் தவிப்புக்கு உட்படாத புலம்பெயர்ந்த பெரியவர்கள் யாருமேயில்லை எனலாம். இதனால் புலம்பெயர்ந்த நாட்டில் எல்லா வளமும் இருப்பது போல் தோன்றினாலும் அந்த மண் மீது எமக்குச் சொந்தமில்லை. சொந்தங் கொண்டாட நினைப்பவர்களை நிறவெறியும் இனவெறியும் வெருட்டும் - விரட்டும். எவ்வளவு புற அறிவு பெற்றாலும் ஐரோப்பா ஐரோப்பியர்க்கே .என்ற எண்ணம் உள்ளங்களை விட்டு மறைந்து விட்ட மனிதர்கள் ஐரோப்பிய அமெரிக்க ஆஸ்திரேலிய கண்டங்களில் மிகச்சிலரே. நாம் இலங்கையராக இருந்தாலென்ன இந்தியராக இருந்தாலென்ன பாகிஸ்தானியராக அல்லது பங்களாதேசியராக இருந்தாலென்ன இந்திய உபகண்டத்தினர் என்ற பொது அமைப்பில்தான் பிறரால் கருதப்படுகிறோம் என்பதை இனவெறியாளர்கள் பலமுறை தமது பேச்சு மொழியாலும் செயல் வழியாலும் தெளிவாக்கியுள்ளனர்.

இந்திய உபகண்டத்து மக்களாகிய நாம் இதனை உணர்ந்து இந்திய உபகண்டத்தில் வாழ்ந்தால் புலப்பெயர்வுகள் கூட இல்லாது போகலாம். நமக்குள்ளே காலனித்துவ ஆட்சிகள் தோற்றுவித்த மதஉணர்வுகள் மொழியுணர்வுகள் பிரதேச உணர்வுகளால் நாம் நம்மைக் கூறாக்கி நமது இந்திய உபகண்டத்தின் பாதுகாப்பையும் அமைதியையும் சீர்குலைப்பதின் எதிரொலியே இந்திய உபகண்டத்தினரின் புலம்பெயர் வாழ்வு நிலைகள். இந்தியா என்பது ஒரு தனியான நாடு என்பதற்கு அப்பால் இந்திய உபகண்டத்தின் கலாச்சாரப் பீடம். மக்களில் பெரும்பான்மையினரான இந்திய மக்களின் இணைப்புடன் உறவுடன் இந்திய உபகண்டத்தின் மற்றைய மக்கள் வாழ்வதும், இந்திய மக்கள் இந்திய உபகண்டத்து மக்களை அவரவர்

தேசிய இனத்துவத் தனித்தன்மைகளுடன் ஏற்று வாழ்வதும், புலப்பெயர்வு என்கிற அவலநிலையை இந்திய உபகண்டத்தில் இல்லாது செய்வதற்கு அவசியமாகிறது. இந்திய உபகண்டத்தவர் நாம், ஆசியர் நாம் என்கிற பொதுமை உணர்வுகள் புலம்பெயர் வாழ்விலேயே புரியப்படும் உண்மைகளாகின்றன. புலம்பெயர்ந்து வாழ்கையில்தான் தொல்காப்பியர் நிலம் காலம் குறித்துக் கூறிய நூற்பாக்கள் அனுபவ மொழிகள் என்பது புரியும்.

### தொல்காப்பியத்தில் நிலம் காலம் குறித்த விஞ்ஞான அணுகுமுறை

"முதல் எனப்படுவது நிலம்பொழு திரண்டின்
இயல்பென மொழிப இயல்புணர்ந் தோரே"

என்பது இன்று எமக்குக் கிடைக்கும் முதல் தமிழிலக்கண நூலாகிய தொல்காப்பியப் பொருளதிகாரத்தின் 4ஆம் சூத்திரம். இந்நூற்பா பாடுபொருளுக்கு "முதலாக அமைவது நிலம் பொழுது இரண்டினதும் தன்மையென்று உலகவழக்கினை உணர்ந்தோர் உரைத்தனர்" என்கிறது. இதன் வழி நிலம் என்ற சொல் பாடுபொருளின் தலைமை உறுப்பாக்கப்படுகிறது. இன்றைய காலத்திற்கு ஏற்ப உரைப்பின் நிலம் காலம் என்னும் இரண்டுமே எந்த உயிர்க்கும் அது வாழ்வதற்கான முதல்நிலையாகின்றன. நாம் பிறந்த மண் நமது முதலாகிறது. இதனால் கருவில் எமக்கு வாழ்வாதாரமாக இருந்த தாய் போன்றே உலகில் நமக்கு வாழ்வாதாரமாக விளங்கும் நிலத்தைத் தாய் நிலம் என்று அழைக்கின்றோம்.

இதனை வரலாற்றுத் தொடக்கக் காலத் தமிழன் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் எனத் தான் வாழ்ந்த வாழ்வின் இயற்கைத்தன்மைக்கு ஏற்ப நானிலமாக உட்பகுப்புச் செய்தான். மலையும் மலைசார்ந்த இடமும் அங்குப் பன்னிரு வருடத்திற்கு ஒரு முறை மலரும் குறிஞ்சி மலராலும், காடும் காடு சார்ந்த இடமும் காடெங்கும் மலர்ந்து மணம் பரப்பும் முல்லை மலராலும், வயல்களின் மருங்கில் ஓங்கி வளரும் மருதமரத்துப் பூக்கும் மருதப் பூவால் வயலும் வயல்சார்ந்த நிலமும், கடற்கரைகளினால் கட்டவிழும் நெய்தல் மலரால் கடற்கரைப் பிரதேசங்களும் சுட்டப்பட்ட மனிதன் குறித்த செவ்வியல் அடையாளப்படுத்தல், உலகிலேயே விஞ்ஞானப் பூர்வமாக நடத்தப்பெற்ற முதல் நிலப்பகுப்பு என்பது செக்கோசிலாவிக்கியரான தமிழ்ப்பேரறிஞர் கமில் சுவெலபில்லின் ஆய்வுமொழி.

இயற்கையாலோ யுத்தத்தாலோ வளம் இழந்து வாழ்கின்ற மக்கள் வாழமுடியாத நிலை வரும்பொழுது அதனைப் பாலை என்று பாடினர் நம்முன்னோர். இதனைச் சிலப்பதிகாரம்,

"முல்லையும் குறிஞ்சியும் முறைமையிற் றிரிந்து
நல்லியல் பிழந்து நடுங்குதுயர் உறுத்துப்
பாலை என்பதோர் படிவம் கொள்ளும்"[5]

என விளக்குகிறது. எனவே பாலை என்கிற நிலப்பகுப்பு நிலத்தை அடிப்படையாகக் கொள்ளாது நில இழப்பை மையப்படுத்தி செய்யப்பட்டது என்பது முக்கியமான விடயம். இந்தப் பாலைத் திணைக்குச் சமானமானதே புலம்பெயர்ந்து வாழும் வாழ்வு. புலம்பெயர்வாழ்வில் எவ்வளவுதான் பொருள்வளம் தொழில்நுட்பத்திறன் பெற்றாலும், எந்தத் தேசத்தவராக இருந்தாலும் தங்கள் தேசத்தவராக மற்றவர்களை மனதளவில் ஏற்பதில்லை என்றே கூறலாம். குடியுரிமை (Citizenship) பெற்ற பொழுதிலும் கூட அந்தக் குடியுரிமையின் தரத்தில் வேறுபாடு சட்டப்படிகூட உண்டு. பிரித்தானியாவில் அதன் குடி என்பதில் இரு நிலைகள் உண்டு. ஒன்று பிரித்தானியாவில் பிறந்த நிலை (By Birth). மற்றது பிரித்தானியாவில் வாழ்வதற்காகத் தன்னை இயற்கைப்படுத்திய நிலை (Naturalisation). பிறப்பால் குடிகளானவர் களுக்கும் இயற்கை நிலைவகையால் குடிகளானவர்களுக்கும் சட்டஉரிமைகளில் கூடச் சில வித்தியாசங்கள் உண்டு. இவற்றை ஏன் இங்குக் கூறுகின்றேன் என்றால் எவரும் தன் தாய் மண்ணை விட வேறொரு மண்ணை வாழ்விடமாகக் கொள்வது அதாவது புலம்பெயர்ந்து வாழ்வது என்றும் பாதுகாப்பானதாக அமையாது. இதனால்தான் தொல்காப்பியம் புலம்பெயர்தலின் காரணங்களையும் கூறி எப்பொழுதும் புலம்பெயர்தல் பிரிவுச்சுவையையே கொடுக்கும் என்கிறது.

"ஓதல் பகையே தூதிவை பிரிவே"
(தொல். பொருள் அகத்திணையியல் நூற்பா 27)

எனப் புலம்பெயர்தலின் பிரிவுத்தன்மையை விளக்கிய தொல்காப்பியம் அடுத்த நூற்பா 28இல் கற்றலுக்காகவும் தூதாகவும் பிரிதலை

"அவற்றுள்
ஓதலுந் தூதும் உயர்ந்தோர் மேன"

என்றும் நூற்பா 29இல் யுத்தம் காரணமாக அரசனும் அரசனது குடிமக்களும் புலம்பெயர்தலை,

தானே சேறலுந் தன்னொடு சிவணி
ஏனோர் சேறலும் வேந்தன் மேற்றே

என்றும் விளக்குகிறது. 30வது நூற்பாவில் வேண்டுதலுக்கு யாத்திரையாகவும், அறத்தை நிலைநாட்டக் கரந்து வாழ் நிலையிலும், பொருள் தேடியும் பிரிவு நிகழ்தலைக் குறிக்கிறார்.

மேவிய சிறப்பின் ஏனோர் படிமைய
முல்லை முதலாச் சொல்லிய முறையாற்
பிழைத்தது பிழையா தாகல் வேண்டியும்
இழைத்த ஒண்பொருள் முடியவும் பிரிவே

இந்தத் தொல்காப்பிய நூற்பா நிலை இன்றைய புலப்பெயர்வுக்குப் பெருமளவில் பொருந்தும். இறுதியாக 37வது நூற்பாவில்

"முந்நீர் வழக்கம் மகடூஉ வோடு இல்லை"

எனப் புலப்பெயர்வுகளில் கடல் கடந்து புலம்பெயர்கையில் பெண்களைக் கூட்டிச் செல்ல வேண்டாம் என்ற பொதுவான எச்சரிப்பு ஒன்றையும் தொல்காப்பியம் வெளிப்படுத்துவதைக் காணலாம்.

புலம்பெயர் வாழ்வின் தனிமை (isolation) பாழ்படுத்தும் இயல்பு (Exploitation) என்பவற்றின் தாக்கத்தைப் பெண்கள் அனுபவித்துத் துன்பத்துள் மூழ்கிடக்கூடாதென்ற உயர் எண்ணத்தில் இந்த எச்சரிப்பு விடுக்கப்பட்டது என்பதைப் புலம்பெயர் படைப்புக்களில் பெண்கள் அதிக அளவில் சோகத்தை வெளிப்படுத்துவதை உணர்ந்து புலம்பெயர் தமிழர்கள் தாயகத்தில் உள்ள தங்கள் உடன்பிறப்புகளுக்கு இதனைப் பலமாகக் கூறக் கடமைப்பட்டுள்ளார்கள்.

புலம்பெயர்ந்தவர் இனங்காணக் கூடிய அச்சத்தைத் தம் தாய் நாட்டில் அனுபவித்தார் என்று 1951ஆம் ஆண்டு அகதிகள் ஐ. நா. மரபுசாசனத்தின் படி அரசியல் தஞ்சம் கோரி நிரூபிக்கின்ற போதே அவருக்கு அரசியல் தஞ்சம் (Political Asylum) கிடைக்கும். அதுவரை உணவுக்கும் இருப்பிடத்திற்கும்கூடத் தங்கி வாழும் நிலை புலம்பெயர் வாழ்வின் ஆபத்தான நிலை. அவ்வாறே மூன்றாவது நாடொன்றில் நுழையாது நேரடியாக அரசியல் தஞ்சம் கேட்கும் நாட்டுக்கு வந்தாலே அரசியல் தஞ்சம் வழங்கப்படும். இதனை நிறுவுதலிலும் பல துன்பங்கள் உள. எல்லாவற்றுக்கும் மேலாகப் பயணமுகவர்களாக இருப்பவர்களால் வாழ்விழந்த, வளமிழந்த பெண் அகதிகளின் கதைகள் பல. இதனால் பெண்களை அழைத்துப் புலம்பெயர்தல் ஆகாதென்ற தொல்காப்பியர் நூற்பா ஓர் அனுபவ மொழி என்றே கூறலாம்.

### செவ்வியல் இலக்கியத் தாக்கம் அடையாளப்படுத்தலுக்கு உதவுகிறது

மேலும் இன்று உலகெங்கும் மனிதர்கள் அவர்கள் பிறப்பால் (by birth) பரம்பரையாக வாழ்தலால் (descent) அல்லது குடியமர்ந்து அந்நாட்டின் இயற்கைத்தன்மையினை அடைதலால் (Naturalisation) அவர்கள் வாழும் நாட்டின் குடிமக்கள் (Citizen) என அடையாளப்படுத்தப்படுகின்றனர். இவ்வாறு வாழும் நிலத்தால் மனிதன் அடையாளப்படுத்தப்படுதலை, முதன் முதலில் தொடங்கி வைத்த வரலாற்றுப் பெருமை தொல்காப்பியத்திற்கு உண்டு. இன்றைய உலகில்கூடக் கார்லைலின் கூற்றான

> "மிருகங்களுடைய அரசில் சாப்பிடு அல்லது
> சாப்பிடப்படுவாய். மனிதர்களுடைய அரசியல்
> அடையாளப்படுத்து அல்லது அடையாளப்படுத்தப்
> படுவாய்"

என்ற கூற்று பொதுவிதியாக அமைகிறது. இதனால் அடையாள அரசியல் சார்ந்த விடயமாக ஒருவரின் அவர் பிறந்த நிலம் அமைகிறது.

வாழும் நாட்டின் குடியுரிமையைப் பெற்ற பின்னரும்கூட அவர் பிறந்த மண் அவரின் தேசியமாக (Nationality)த் தொடர்கிறது. இன்று நான் இங்கிலாந்தின் குடிமகன் எனக் குறித்தாலும்கூடத் துணைக் கேள்விகளாக அமையும் பிறப்புற்ற நாடு (Country of origin) எது? பிறந்த ஊர் (Birth Place ) எது? என்கிற கேள்விகளுக்கு நான் இலங்கையர் எனவும் பிறந்த ஊர் யாழ்ப்பாணம் எனவும் விடை அளிக்கையில் எனது வாழ்வில் தாய்மண்ணும் தாய்நாடும் தொடர்ந்து கொண்டே வருகின்றன. அதே வேளை நாம் எமது முன்னோர்களின் அர்ப்பணிப்புக்களின் தொடர்ச்சியாக வாழ்கின்றோம் என்கிற ஆன்ம உணர்வே எம்மைத் தேசஇனமாக (Nation) மாற்றுகிறது. தமிழர்கள் என்கிற எமது முன்னோர்களின் அர்ப்பணிப்புக்களும் தியாகங்களுமே இன்று நாம் தமிழர்கள் என்கிற தேசமக்களாக வாழ்வதற்குக் காரணமாக உள்ளன. இந்த எமது முன்னோர்களின் வரலாற்றுத் தொடக்கக் கால வாழ்வின் இலக்கியமாகிய சங்க இலக்கியங்கள் வரலாற்றுக் கால இலக்கியங் களாகிய சங்கம் மருவிய காலத்து இலக்கியங்கள் இவையே எமது தமிழர் என்னும் தேசமக்கள் தன்மையினை எமக்களிக்கும் கருவூலமாகின்றன. இதனால் தமிழர்கள் புலம்பெயர்ந்து வாழும் இன்றைய காலக்கட்டம் செவ்வியல் இலக்கியங்கள் என்னும் சங்ககாலத்து எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும் சங்கமருவிய காலத்துப் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களும், சிலப்பதிகாரம் மணிமேகலை ஆகிய காப்பியங்களும் தொல்காப்பியமும் இறையனார் களவியலுரையும் படைக்கப்பட்டுப் பன்னூறு ஆண்டுகளாயினும் இவற்றின் வழி உருவான தமிழர் வாழ்வியல் விழுமியங்கள் புலம்பெயர் தமிழர்களிடை அவர்களின் அடையாளமாகத் தொடர்ந்து கொண்டே உள்ளன. “பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல கால வகையினானே” என்னும் நன்னூல் சூத்திரத்திற்கு அமையச் செவ்வியல் இலக்கியக் காலத்துப் பழமைகள் பல கழிந்து புதியன பல புகுந்திருப்பினும், தமிழர் என்று சொல்லப்படும் இனத்துவத்தின் அடையாளம் செவ்வியல் இலக்கியங்கள் தந்த அழிக்கப்பட முடியாத முத்திரைகள் பலவற்றின் வழியாகவே தொடர்கிறது.

### செவ்விலக்கியத் தாக்கத்தால் கலாச்சாரத் தொடர்ச்சி

“கலைக்களஞ்சியம் பண்பாடு என்பது ஒவ்வொருவரும் சமுதாயத்திடமிருந்து பெறும் செல்வமாகும். இது சடப்பொருள்கள், சடப்பொருள்கள் அல்லாதன என்று இருவகைப்படும். வீடுகள், கருவிகள், ஆடைகள், அணிகள் போன்றவை சடப்பொருள்கள். மொழி, தொழில். மனப்போக்கு, கொள்கைகள், வழக்கங்கள், அறநெறி போன்றவை சடப்பொருள்கள் அல்லாதன”[6] என்கிறது என்கிறார் பேராசிரியர் முனைவர் கா.அரங்கசாமி. இவ்வகையில் செவ்வியல் இலக்கியங்கள் புலம்பெயர்ந்தோர் பண்பாட்டின் அடித்தளமாகின்றன. “தமிழரின் சங்ககாலப் (செவ்வியல் இலக்கியக்காலப்) பண்பாடு, அறம், பொருள், இன்ப வாழ்வில் தோன்றி வீரமும் ஈரமும் காதலும்

கடமையுமாக மலர்ந்தது" என்னும் முனைவர் கா. அரங்கசாமி அவர்களின் கருத்து இன்று புலம்பெயர் படைப்புக்களிலும் இந்த நீதியைத் தேடல் (அறம்), பொருளாதார முறைமைகளைச் சாடல் (பொருள்), பிரிவுகளும் சோகங்களும் இருப்பினும் புலத்தில் புதுவாழ்வு (இன்பம்) காணும் முயற்சிகள் என்பவற்றைப் புலம்பெயர் படைப்புக்களும் கொண்டுள்ளன.

கூடவே வீரத்துடன் படைப்பிலக்கியம் கொண்டு தாம் தவறு என்று கருதியவற்றைத் தாக்கல், ஈரத்துடன் தம் மண் மக்கள் குறித்த பார்வைகளை முன்வைத்தல், காதலின் போக்கை ஆராய்தல், கடமையுணர்வுடன் தம் எண்ணத்தை வெளியிடல் என்பனவும் புலம்பெயர் படைப்புக்களில் காணப்படுகின்றன. இவற்றையே புலம்பெயர் படைப்புக்களில் செவ்வியல் இலக்கியத் தாக்கமாகக் கருதக் கூடியதாக உள்ளது. செவ்விலக்கியக் காலத்துச் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் படைப்பு உத்திகளும், உள்ளுறை உவமம், இறைச்சி போன்ற உவமான முறைகளும்கூடப் புதிய வடிவில் புலம்பெயர் படைப்புக்களில் மேற்குலக இலக்கியத்தின் தரிசனங்கள் அறிதல்கள் என்ற எண்ணத்தில் புகுத்தப்படுகின்றன. பண்பாடு என்பது அகவளர்ச்சியை அடிப்படையாகக் கொண்டது என்ற வகையில் புறவளர்ச்சியான நாகரிகத்தின் வேராகப் பண்பாடே திகழ்கிறது. இவ்வகையிலும் புலம்பெயர் படைப்புக்களில் செவ்வியல் இலக்கியத் தாக்கம் புலம்பெயர் இலக்கிய நாகரிகத்தின் வேராக அவர்களை அறியாமலே திகழ்கின்றது. இதனை

"எங்கும் எதிலும் தமிழோசை – லண்டன்
எதிரொலிக்கும் அந்த மணியோசை – பொங்கும்
தமிழ்ப்பாட்டின் இன்னோசை – மனம் பூரித்துப்
பாடுதம்மா என்னாசை. சங்கம் வளர்த்த தமிழ் -
உலகமெங்கும் இங்குத் தனிநடை போடுதம்மா -
வீறுகொண்டு சங்கக் குலவிளக்கைத் தமிழ்த்தாயை-
இந்தத் தலைநகர் பாடுதம்மா ஆவல் கொண்டு"

என்று பாடிய சீர்காழி கோவிந்தராஜன் தொடர்ந்து,

"உலகம் முழுதும் சென்றார் தொழில் நடத்த -
தமிழன் உள்ளமும் சென்றதம்மா தமிழ் நடத்த"

என்று பாடுகிற பொழுது தமிழரின் குடிவரவிலும் கலாச்சாரத்தைப் பேணல் மையமாவதை உணர்த்துகிறது. இந்தப் பாடலை இயற்றிய கண்ணதாசன் தமது அமெரிக்க அனுபவத்தின் பொழுது

"கடல் கடந்தான் எங்கள் தமிழன் - அங்கும் கற்பூரத்தீபம் கண்டான் இறைவன் - உடலுக்குப் பொருள் தேடி உள்ளத்தில் இறைநாடி – தமிழுக்கும் பணிசெய்து தன்மானத்துடன் வாழ", எனப் பாடியதையும், இறுதியாக, தான் காலமாவதற்கு முன்பு கடைசியாக

எழுதிய கவிதை வரிகளிலும் கண்ணதாசன் புலம்பெயர்ந்தோர் தங்கள் பிள்ளைகளுக்குத் தமிழ் படிப்பித்தல் வேண்டுமென உருக்கமாக வேண்டுகோள் விடுத்ததையும் நினைவுபடுத்திப் பார்க்கையில் தமிழரின் புலப்பெயர்வில் கலாச்சாரத்தைப் பேணல் என்பது அவசியமாகிறது என்பதைக் கவிஞர் கண்ணதாசன் வலியுறுத்தினார் என்றே கூறலாம். 51 நாடுகளுக்குத் தமிழ்த்தூது சென்ற தனிநாயக அடிகளும் தமது அனுபவமாக

> "தமிழிலக்கியத்தைப் படியாது விட்டால் தமிழர்களாக வாழ மாட்டார்கள். தமிழ் இலக்கியத்தைப் படிப்பதாக இருந்தால் தமிழ் மூலமே அதனைப் படிக்க வேண்டும். பிறமொழி பெயர்ப்புகள் ஊடாகப் படிக்கக் கூடாது"

என்று கூறியதும் தமிழர்கள் செவ்விலக்கிய அறிவினைத் தமது படைப்புக்களின் ஆதாரமாகக் கொண்டாலே தமிழர்கள் என்னும் அடையாளம் தொடரும் என்பதை நிரூபிக்கின்றது.

### புலம்பெயர்ந்த படைப்புக்கள் காலத்தை உருவாக்கும் வல்லமைகள்

புலம்பெயர்ந்தவர்கள் அடையாளத்தை இழந்து, கலாச்சாரத்தை இழந்து நம்பிக்கையற்றவர்களாய்ப் பல துன்பங்களை அனுபவிக்கிறார்கள். உலகை நாம் காண்பது அது இருக்கும் நிலையில் அல்ல, மாறாக நாம் எவ்வாறு இருக்கின்றோமோ அவ்வாறுதான் நாம் காண்கிறோம். இதனால்தான் புலம்பெயர் படைப்பாளிகள் பலரும் தாம் சமூகவிலக்கு (Social Exclusion) நிலையில் உள்ளதான உள்ள உணர்வு நிலையில் துன்பச்சுவை மிகுந்த இலக்கியங்களை, வெறுப்பு மிகு எழுத்துக்களைப் படைக்கின்றனர்.

ஆனால் செவ்வியல் இலக்கியங்களும் அன்றைய காலத்துப் பிரிவுகள் பலவற்றைப் பேசினாலும் "யாதும் ஊரே யாவரும் கேளிர்!" என்கிற உணர்வைத் தந்து "தீதும் நன்றும் பிறர்தர வாரா" என்ற அடிப்படையில் மனிதாயத்தை வளர்த்தன. இந்தப் பண்பைப் புலம்பெயர் படைப்புக்களால் உணர்த்துகின்ற பொழுது இலக்கியத்தால் சமூக உள்வாங்கல் (Socail Exclusion) நிலைக்குப் பாதிப்புற்ற, துன்புற்ற மனிதர்களைக் கொண்டு வரமுடியும். இலக்கியம் காலத்தின் உற்பத்தியாக இருப்பினும் அதனால் காலத்தை உற்பத்தி செய்யவும் முடியும். ஒரு படைப்பு எவ்வாறு காலத்தின் படைப்பாகவும் அதே வேளை காலத்தை உற்பத்தி செய்யும் ஆற்றலையும் வெளிப்படுத்து கிறது என ஆய்வு செய்யும் பொழுதே அந்த ஆய்வால் மானிடம் சிறப்புறும்.

இலக்கியத்தைக் காலத்தின் உற்பத்தியாகவும் காலத்தை உருவாக்கும் வல்லமையாகவும் கருதுகிற இலக்கியப் பண்புக்கு

ஓர் உதாரணமாக புலம்பெயர் படைப்புக்களில் நான் இலண்டன் புலவர் நல்லதம்பி சிவநாதன் அவர்களின் "சத்தியம் சாகாது" கவிதைத் தொகுதியைப் பார்க்கின்றேன்.

**"நரைதிரை வந்த தேகம்**
**நடுங்கிட நடக்கும் போதும்**
**தரையெது என்று கேட்டாற்**
**தாயகம் என்றே சொல்வேன்"**[7]

என்றும்,

"ஊர் கூடிச் சென்ற காலம், உறவோடு நின்ற காலம்-
பூர்வீகம் புகட்டி நின்ற புழுதியிற் படுத்த காலம் - மார்மீது
ஊஞ்சலாட, மல்லாந்து படுத்துக் கண்கள்
நீர்வாரக் கிடப்பேன்! – நெஞ்ச முள்ளெல்லாம் நோகுமன்றோ!

என்றும்,

"அலை அலையாக என்னுள் ஆர்த்தெழும் ஞாபகங்கள்!-
விலைமதிப்பில்லா அன்பு வீழ்ச்சிகள் உறவின் கண்கள்!-
தொலைவினில் நின்று என்னைத் தொடுவதாய் உள்ளுணர்ந்தேன்!-
அலையுமோர் ஆவி போல அந்நிய மண்ணில் நின்றேன்! –
உலையிலே கொதிக்கும் நீர்போல், உள்ளத்தில் உணர்வு பொங்கக்,
கவலையுடன் கவிதை செய்தே காலத்தை யுருட்டி நின்றேன்"

என்றும் புலவர் ந. சிவநாதன் பாடும் பொழுது அவரின் புலப்பெயர்வின் துன்பத்தைப் புரிய முடிகிறது.

இந்தத் துன்பத்தின் நடுவிலும் மானிடத்தின் துன்பத்தைத் தன் துன்பமாக ஏற்பவன்தான் தரமான திறமான கவிதையினைப் படைக்க முடியும். இதற்கு உதாரணமாக இலண்டன் வோர்டர்லூ பிரிஜ் நிலத்தடிப் புகையிரத நிலையத்திற்கு முன்னால் நடைபாதையில் கடுங்குளிரில் படுத்திருந்தவரைக் கண்டதும் கவிஞனின் செவ்வியல் இலக்கியத்து வழிவந்த மானிடம் போற்றும் பண்பு விழிப்படைகிறது. உடனே "வேதனை தீர்த்திட வெளிப்படு இறையே" எனத் தெய்வத்தை நோக்கிக் கவிதை பிறக்கிறது.

**பாதையின் ஓரத்தே படுக்கை விரித்துக்**
**காதினைப் பொத்திக் கடுங்குளிர் விரட்டிப்**
**போதினைக் கழிக்கும் புண்பட்ட மனிதரின்**
**வேதனை தீர்த்திட வெளிப்படு இறையே!**[8]

என்கிறது கவி வரிகள். இந்த மானிடம் போற்றும் பண்புடன் தன்னுடைய அடையாளத்தை, கலாச்சாரத்தை, நம்பிக்கையை உயரக் கூறுபவன் தான் தரமான வளமான புலத்துப் படைப்பாளன். புலவர் சிவநாதனின் "சத்தியம் சாகாது" கவிதைத் தொகுதியின் இறுதிப் பாடல் இதனை நிரூபிக்கிறது.

திங்களும் கதிரும் தென்றலும் தீயும்
பொங்கு கடலும் பூமியும் உள்ளவரை
எங்கள் தமிழும் இனமும் வாழுமென
என் கர முயர்த்தி எல்லோர்க்கும் வாக்களிப்பேன்"

என்று முடிகிறது சத்தியம் சாகாது புலத்துக் கவிதைத் தொகுதி.

இவ்வாறு புலம்பெயர்ந்த படைப்புக்களைக் காலத்தின் படைப்புக்களாகவும் காலத்தை உருவாக்கும் வல்லமைகளாகவும் கொண்டு செவ்வியல் இலக்கியத்துவழி தொல்காப்பியம் கூறுவது போல "மாற்றருங் சிறப்பின் மரபு" பேணி எழுதும் தமிழின உணர்வாளர்கள் பலருண்டு. இங்கு மரபு என்பது தொல்காப்பிய உரையாசிரியர்களில் ஒருவராகிய நச்சினார்க்கினியர் கூறுகிற "காலந்தோறும் இடந்தோறும் வழக்குத் திரிந்தவற்றிற்கேற்ப வழுப்படாமற் செய்வதோர் முறைமை"[9] என்பதே இத்தகைய தமிழ்த் தேசியப் படைப்பாளிகளின் பெரும்பாலானவர்களின் கருத்தாக அமைகிறது.

அதே வேளை புலம்பெயர் வாழ்வின் யதார்த்தத்தின் தரிசனங்களைக் கொண்ட கவிதைத் தொகுதியான தான்யா, பிரதீபா கனகா, தில்லைநாதன் ஆகியோரின் தொகுப்பில் வெளிவந்த "ஒலிக்காத இளவேனில்கள்" கவிதைத் தொகுதியை இவ்வாய்வுக்கான வகைமாதிரியாகப் பார்க்கிறேன்.

**செவ்வியல் இலக்கியம், புலம்பெயர் இலக்கியம் சில சிந்தனைகள்**

செவ்வியல் இலக்கியங்கள் படைப்பாளன் வாழ்ந்த இயற்கைச் சூழலால் தீர்மானிக்கப்பட்டவை. புலம்பெயர் படைப்புக்கள் படைப்பாளன் வாழ்ந்த இயற்கைச்சூழல் மாறியதால் புதிய சூழலால் தீர்மானிக்கப் பட்டவை. இந்த நுட்பமான வேறுபாட்டை முதலில் மனதிருத்திடல் புலம்பெயர் படைப்புக்கள் குறித்த தெளிவுக்கு அவசியம். செவ்வியல் இலக்கியங்கள் வாய்மொழி மரபில் பழகி வந்து தொகுக்கப்பட்ட தன்மையைக் கொண்டவை. புலம்பெயர் படைப்புக்களையும் அவற்றை உருவாக்குபவர்கள் அவற்றைப் பேணுவதற்கும் போராட வேண்டியதாக உள்ளது. ஓசியோ மாண்டெல்ஷ்டாமின் மனைவி தனது கணவனின் கவிதைகளை எழுத்தில் கூடக் காப்பாற்ற முடியாமல் தான் இரவு நேரங்களில் வேலை செய்த துணிக்கடையில் அவற்றைப் பாட்டாகப் பாடிப்பாடி மறந்து விடாது காத்து வந்தே, பின்னர் நூலாகத் தொகுத்ததாக நம்பிக்கைக்கு எதிர் நம்பிக்கை' (Hope Against Hope) கைவிடப்பட்ட நம்பிக்கை (Hope Abandonded) என்னும் பென்குயின் வெளியீடாக வந்த இருநூல்களிலும் கூறியுள்ளதாக இக்கவிதைகளைத் தமது "எதிர்ப்பிலக்கியம் : ஒரு கலாசார ஆயுதம்" என்னும் நூலில் 2003 மார்கழியில் அறிமுகம் செய்த சிராஜ் மஷ்ஹூர்

அவர்கள் குறிப்பிடுகின்றார். இலங்கையின் அனுபவத்தில் பல புலம்பெயர் படைப்பாளர்களும்கூடத் தாம் கண்டவைகளை உடன் எழுத முடியாது வெளிநாடுகளுக்கு வந்து எழுதிய வரலாறுகளும் நிறையவே உள்ளன.

இனிச் செவ்வியல் இலக்கியத்தில் ஒரு காட்சி. இதனைப் படிக்கும் பொழுது செவ்வியல் இலக்கியக் காலத்திலும் புலம்பெயர படைப்புக் காலத்திலும் பெண் தண்டிக்கப்படுபவளாகவும் கண்டிக்கப்படுபவளாகவும் உள்ள கருத்துநிலை தொடர்வதைக் காண்கின்றேன்.

"அன்னையும் கோல் கொண்ட லைக்கும் அயலாரும்
என்னை அழியும்சொல் சொல்லுவர் - நுண்ணிலைய
தெங்குண்ட தேரை படுவழிப்பட்டேன் யான்
திண்தேர் வளவன் திறத்து"[10]

இளம்பெண்ணுக்கு இற்செறிப்பு சங்க காலம் முதல் சோழர் காலம் வரை தொடர்ந்த கதை சொல்லும் முத்தொள்ளாயிரப் பாடலிது. "சோழ மன்னனைப் பார்க்க வெளியே செல்லக் கூடாதெனப் பெற்ற அன்னை கோலால் அடித்துத் துன்புறுத்துகிறாள். அயலவர்களோ அலர்தூற்றியே என்னைப் பற்றி இல்லாததும் பொல்லாததும் கூறியே என்னைக் கொல்லாமல் கொல்கிறார்கள். கடினமான தேங்காயை நுண்ணியதான தேரை உண்ணமுயற்சித்தால் என்ன துன்பத்தை அனுபவிக்குமோ அத்தகைய துன்பத்தை வலிமை பொருந்திய தேரை உடைய சோழனால் அடைகின்றேன்." இது செவ்வியல் காதல் துன்பம். காதல் துன்பத்தைவிடத் தாய் தண்டிப்பதும் ஊரார் கண்டிப்பதும் பெண் மனதிற்குக் கொடுக்கும் வேதனையைப் பாடல் தெளிவாக்குகிறது. புலப்பெயர்வுக் காதல் பாடல்கள் பலவற்றிலும் பெண்களை அவர்களது குடும்பத்தினரே "கட்டுப்பாடு" என்னும் போர்வைக்குள் அடக்கி ஒடுக்கும் பொழுது ஏற்படும் துன்ப உணர்வுகள் இந்தச் செவ்வியல் இலக்கியப்பாடல் போன்றே அமைவதைக் கண்டுள்ளோம். இதனால் எழில் "கவிதைகள் அல்ல" என்று புலம்பெயர்படைப்புக்களை அனுபவத்தின் மொழிப்பரவல்கள் என்கிறார்.

**"இங்கு**
**கிறுக்கப்பட்டவை**
**கவிதைகள்**
**அல்ல**
**உள்ளக் குமுறல்கள்.**

**காயம்பட்ட**
**உணர்வுகள்**
**வரிவடிவ**
**கருப்பைக்குள்**
**தங்க முயற்சிக்கின்றன.**

கற்பனை சுமந்த
மூட்டைகள் அல்ல
வரலாற்றுப் புருஷிகளுக்குச்
சொந்தமானவை இந்த மழலைகள்
அனுபவங்களின் பெற்றோருக்குப்
பிறந்தவை
மனிதப்படியாக்கம் (Cloning)
அல்ல.

எழிலின் இக்கவிதை புலம்பெயர் படைப்புக்களின் உயிர்த்தன்மை சொல்லுகிறது. புலப்பெயர்வு எப்பொழுதுமே புலம்பெயர்ந்தவர் மனதில் துன்ப உணர்வாகவே தொடர்வது என்பதினால் புலம்பெயர் படைப்புக்களில் செவ்வியல் இலக்கியத்துப் பாலைச்சுவை போன்று பிரிவின் வேதனையே பெரிதாகப் பேசப்படும். துன்ப உணர்வைக் கவிதையாக்கும் செவ்வியல் இலக்கிய வழியில் புலம்பெயர் வாழ்வில் தாயைப் பிரிந்த மகள் ஒருத்தியின் துன்பத்தைக் குறிப்பிடும் இலண்டனில் வாழும் தமிழினி ஜோதிலிங்கத்தின் "என் தாயுமானவளுக்கு" என்னும் கவிதை "ஒலிக்காத இளவேனில்"[11] செவ்வியல் இலக்கியங்கள் காதல் பிரிவை விபரித்தது போலப் பாசப்பிரிவை எடுத்துரைக்கிறது.

நெற்றிப் பொட்டில் முகிழ்த்தெழுந்து
வேர் கொண்டகன்று
நீண்டு
வளர்ந்து
கிளைவிரித்து உயர்ந்துயன்று
தலைமுழுவதும் பரவும்
வலி.........
நீயில்லா வலி
சிந்தனைகளின் அழுத்தல்களில் - கேள்விகளின்
குடைதலில்
தலைக்குள் குருதி
தறிகெட்டு தடை தகர்த்து குமுறிப்பாய
நரம்புகள் பின்னிப் பிணைந்து
இறுகித் தெறித்து
வெடித்துச் சிதறக் கூடும்
நானும் சிதையக் கூடும்
சீக்கிரம் வந்து விடு

அடிக்கடி
நீ அருகிலிருப்பதாய்த் தோன்றுவதெல்லாம்
பொய்பொய்யென
பிரமைதானென
உணர்ந்துணர்ந்து உள்குறுகும்போது

கண்முன்னே மயிர்பிடுங்கும் வேதனையில்
மனசு மருகுகின்றது
சீக்கிரம் வந்துவிடு

..................................

நெஞ்சம் நெகிழ்ந்து நெகிழ்ந்து
நெக்குருகி - உடல்நடுங்கி
நீயில்லா ஏக்கம் நிரம்பி
வழிய
நிற்கிறேன்
சீக்கிரம் வந்துவிடு

....................................

ஒற்றைக் குயிலின் அழுகையின் நீட்சியில்
எழுகிறது என் சோகம்
பொழியும் மழையின் ஒவ்வொரு துளியிலும்
வழிகிறது என் கண்ணீர்
தனிமை தனிமை தனிமை
தனிமை தலைவிரித்தாடுகிறது
சீக்கிரம் வந்துவிடு

................................

விரக்தி மிகுந்த வெறுமையும்
வெறுமை நிறைந்த விரக்தியும்
விரவி நிற்கும்
கையறு நிலையில்
மெய்யது தவிக்க
ஏற்றுண்டு கிடக்கிறேன்
கணங்களின் கரையோரம் .....
சீக்கிரம் வந்துவிடு

தாங்கவொணாத் துயரமாயிருக்கிறது
உன்பிரிவு.....
சீக்கிரம் வந்து விடு

முடிவுரை

"ஓர் அறையில் இருக்கும் யாவரும் ஒரு மனதாகச் சதிசெய்பவர்கள் போல் மௌனமாக இருக்கையில் உண்மையை எடுத்துக் கூறும் ஒரு வார்த்தை ஒரு துப்பாக்கி வெடிபோல் மௌனத்தைக் கலைக்கும்". ஷெஸ்லோ மிலோஷின் நோபெல் பரிசு உரையின் வரிகள் புலம்பெயர்ந்த படைப்புக்கள் என்னும் பொதுப்பரப்புக்கும் பொருந்தும். ஷெஸ்லோ மிலோஷ் கூறிய " சிறைப்பட்டிருக்கும் சமுதாயத்தின் மொழி, நின்று நிலைக்கக் கூடிய சில தன்மைகளைப் பெறுகிறது" என்னும் கூற்றும் புலம்பெயர் படைப்புக்களின் பயன் என்று கூறலாம். "உண்மையைத் தேடும்

கவிஞன் கடன்வாங்கப்பட்ட மொழிநடையிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்வதற்கு இடைவிடாது பாடுபடுகிறான்" என்னும் ஷெஸ்லோ மிலோஷ் இன் கூற்றும் புலம்பெயர்ப்படைப்புக்களின் வரிவடிவத்தை விளங்கிக்கொள்ள உதவும்.

"இலக்கணச் செங்கோல்
யாப்புச் சிம்மாசனம்
எதுகைப் பல்லக்கு
மோனைத் தேர்கள்
தனிமொழிச் சேனை
பண்டித பவனி
இவை எதுவுமில்லாத
கருத்துக்கள் தம்மைத் தாமே
ஆளக் கற்றுக் கொண்ட
புதிய மக்களாட்சி முறையே
புதுக்கவிதை"

என்ற கவிஞர் மேத்தாவின் புதுக்கவிதை வரைவிலக்கணம்வழி பிறந்தவை புலம்பெயர்படைப்புக்கள். உருஷ்யாவின் எதிர்ப்புக் கவிஞர் எனப்பட்ட ஓசிய மாண்டெல்ஷ்டாம் 'ஸ்டாலினுக்கு' என்ற தலைப்பில் எழுதிய கவிதையில்

"என்னிடமிருந்து எல்லாச் சமுத்திரங்களையும்
எல்லா இடங்களையும் பறித்துக் கொண்டீர்கள்
இப்பூமியிலே என் காலடி அளவுக்கே
எனக்கு இடம் விட்டு வைத்தீர்கள்
அதைச் சுற்றிலும் கம்பிகள் நட்டீர்கள்
இவற்றாலெல்லாம் நீங்கள் சாதித்தது என்ன?
"ஒன்றுமில்லை
எனது உதடுகளை விட்டு வைத்தீர்கள்
அவை மௌனத்திலும் கூட வார்த்தைகளை வடிக்கின்றன"

என்கிற வார்த்தைகள் புலம்பெயர் படைப்புக்களின் உலகப் பொதுத் தன்மைக்குப் பொருந்தும் என்பது எனது கருத்து. ஓசியோ மாண்டெல்ஷ்டாமின் மற்றொரு கவிதையான "புத்துயிர்ப்பு" என்பது

"குவிக்கப்பட்ட மனிதத்தலைகள் பார்வையிலிருந்து
மறைகின்றன
யாரும் கவனிக்காத வண்ணம் நான் மிகவும்
சிறியவனாகிறேன்
நான் மரணமடைந்தாலும்
குழந்தைகளின் மிருதுவான புத்தகங்களிலும்
புதிய விளையாட்டுக்களிலும்
உயிர்த்தெழுவேன்
கதிரவன் பிரகாசிக்கிறான் என்பதைக் கூற"

என அமைகிறது. இதுதான் புலம்பெயர் படைப்புக்கள் தாம் வெளிப்படுத்துகின்ற தனிமையின்(Isolation) உணர்வான "புலம்பல்", பாழ்படுத்தப்பட்டதன் (Exploitation) உணர்வான "வெறுப்பு" என்பனவற்றுக்கு அப்பால் உள்ளுறை உவமங்களாகவும் இறைச்சிப் பொருளாகவும் "காலம் மாறும்" என்னும் நம்பிக்கை வெளிப்படுத்தப்படுவதற்கு உதாரணமாகிறது. இந்த உள்ளுறை உவமமும் இறைச்சியும் புலம்பெயர் படைப்புக்களில் இடம்பெறுவது செவ்வியல் இலக்கியத்தின் தாக்கம் எனலாம்.

இவ்விடத்தில் உள்ளுறை உவமம் என்பது முனைவர் தமிழண்ணலின் கருத்துப்படி

> "பாடற்பொருளோடு சேர்ந்து உணரப்படும். தலைவன் பண்பை உணர்த்த அல்லது தலைவனைத் திருத்தப் பயன்படுத்தப்படும். கடவுள் தவிரப் பிற கருப்பொருள்களைக் களனாகக் கொண்டு தோன்றுவது. தலைவனது ஊர், நிலம் வருணனையில் வரும். அவ்வாறே இறைச்சி பாடற்பொருளின் புறத்தே கிடக்கும். தலைவன் தலைவியரது அன்பைக் காட்டப் பயன்படும். விலங்குகள் பறவைகள் போன்றவற்றைக் கருப்பொருள் களனாகக் கொண்டு தோன்றுவது. வழியில் காணும் விலங்கு பறவைகளின் வருணனையில் வரும்."[12]

முனைவர் மா. பார்வதி அவர்களின் கருத்துப்படி உள்ளுறை உவமத்திற்கும் இறைச்சிக்கும் உள்ள ஒற்றுமைகள். 1. குறிப்பால் பொருள் உணர்த்துவன. அகப்பொருட்கே சிறப்புரிமையுடையன. அகப்பொருள் மாந்தரால் வெளிப்படுத்தப்படுபவை. அகப்பாடல் சிறக்கத் துணை நிற்பன. இந்த உள்ளுறை உவமங்களும் இறைச்சியும் புலம்பெயர் படைப்புக்களின் கலைத்துவத்திற்கு ஒளிசேர்க்கின்றன.

சுருக்கமும் சுதந்திரமும் கலந்த மொழிநடை புதிய வரிவடிவத் தன்மைகளையும் புதிய இலக்கியப் போக்கையும் உருவாக்குவதால் செவ்வியல் இலக்கியங்கள் போலவே புலம்பெயர் படைப்புக்களும் விளங்கிச் செவ்வியல் இலக்கியத் தாக்கம் புலம்பெயர் படைப்புக்களிலும் உண்டு எனப் பேசவைக்கின்றன. ஆயினும் இது ஓர் அகஉணர்வே தவிரப் புறஉணர்வன்று என்பதே இவ்வாய்வின் முடிவுரையாகிறது. புலம்பெயர் இலக்கியம் தனித்துவமானது என்பதை மறத்தலாகாது. அடையாளப்படுத்தலுக்கும் கலாச்சாரத்தைப் பேணுவதற்கும் வாழ்தலுக்கான நம்பிக்கையை வளர்த்தலுக்கும் செவ்விலக்கிய அறிவை வளர்த்துப் புலம்பெயர் படைப்பாளிகள் சிறப்பான படைப்புக்களை இன்றைய காலத்திற்கு ஏற்ற வகையில் படைக்க இச்சிந்தனைகள் உதவுவதாக. மொழிவேண்டாம் இனம்

வேண்டாம் என்னும் போக்கு பாதுகாப்பான அமைதியான எதிர்காலத்திற்கு உதவாது. எனவே செவ்வியல் இலக்கிய அறிவு காலத்தின் தேவையாகப் புலம்பெயர்ந்தவர்களுக்கு உள்ளது.

குறிப்புகள்:

[1] சிவத்தம்பி, கா. (2010),"செம்மொழி வரையறைகளும் தமிழும்" உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு, கோவை, சிறப்புமலர், தமிழக அரசு, பக். 41

[2] எழில், (2011). முள்ளிவாய்க்காலும் post முள்ளிவாய்க்காலும், கவிதைத் தொகுதி (அச்சில்) பக் 4.

[3] கதிரைவேற்பிள்ளை, நா. (2002), தமிழ்மொழி அகராதி Asian Educational Services, பக். 1051.

[4]தயானந்தா, இ. (2003) வானலையின் வரிகள், ஆரபி பதிப்பகம், பக். 163ம் 173ம்.

[5] ஸ்ரீசந்திரன், ஜெ. (2000) இளங்கோ அடிகள் அருளிய சிலப்பதிகாரம், வர்த்தமானன் பதிப்பகம். பக். 202.

[6] அரங்கசாமி, கா. (1995), அறவியலும் பண்பாடும், அறிவரசு பதிப்பகம், பக். 109.

[7]சிவநாதன், நா. (2004), சத்தியம் சாகாது, வாசன் பிரிண்டர்ஸ், பக். 29.

[8] சிவநாதன், நா. (2004), சத்தியம் சாகாது, வாசன் பிரிண்டர்ஸ், பக். 385.

[9] தொல்காப்பியம், பொருளதிகாரம், செய்யுள். நூற்பா 1.

[10]உலகநாதன், செ. உ. (2006), முத்தொள்ளாயிரம் - தெளிவுரை முல்லை நிலையம், பக். 27.

[11]தான்யா, பிரதீபா, கனகா – தில்லைநாதன், (2009), ஒலிக்காத இளவேனில், வடலி, பக். 58.

[12] பார்வதி, மா. (2004) "தொல்காப்பியரின் உள்ளுறையும் சங்க இலக்கியப் பாடல் சான்றுகளும்" ஒல்காப் பெரும் புகழ்த் தொல்காப்பியக் கட்டுரைகள், ஈழத்துப் பூதன் தேவனார் தமிழ்ப் புலவர் கழக வெளியீடு. பக். 82.

# சிங்கப்பூர்க் கவிஞர் ந. பழநிவேலு கவிதைகளில் சங்க இலக்கிய வாழ்வியல் கூறுகள்

திருமதி கல்பனா
தமிழாசிரியர்
ஈசூன் உயர்நிலைப் பள்ளி
சிங்கப்பூர்

## முன்னுரை

தமிழ் மொழியும் தமிழர்களும் இத்தரணி முழுவதும் கடல் கடந்தும் பரவி இருக்கும் சூழல் ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே தொடங்கிவிட்டது. இன்றளவும் அது தொடர்ந்து கொண்டே இருக்கிறது. கடந்த இருபதாம் நூற்றாண்டில் புலம்பெயர்ந்த தமிழர்கள் தாங்கள் சென்று வாழ்ந்த நாடுகளில் தங்களது வாழ்வாதாரத்தை மட்டும் தேடாமல் தங்களது வாழ்க்கையைப் பதிவு செய்யும் ஊடகமாக இலக்கியங்களையும் படைத்தனர். அத்தகைய இலக்கியங்களும் தரம் வாய்ந்ததாக, இலக்கியச்சுவை நிறைந்ததாக, தமிழர்களின் மரபை நிலைநிறுத்துவதாக அமைந்து புகழ்பெற்றுள்ளன. தென்கிழக்காசிய நாடுகளில் வாழ்ந்த தமிழ்ப் படைப்பிலக்கியவாதிகள் சிறந்த தமிழ் படைப்புகளை வெளியிட்டுப் புகழ் பெற்றுள்ளனர். அந்த வகையில் சிங்கப்பூரைச் சேர்ந்த கவிஞர் ந.பழநிவேலு கவிதைகள் மட்டுமல்லாமல் நாடகங்கள், சிறுகதைகள், உரையாடல் எனப் பல இலக்கிய வடிவங்களில் தம் கருத்துகளைப் பதிவு செய்துள்ளார். அவருடைய கவிதைகளில் இடம்பெற்றுள்ள சங்க இலக்கிய வாழ்வியல் கூறுகளை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## 20ஆம் நூற்றாண்டின் தொடக்கக் காலங்களில் சிங்கப்பூர் இலக்கியச் சூழல்

சிங்கப்பூர் இன்று பன்முக வளர்ச்சி பெற்ற சிறந்த நாடாக விளங்கினாலும் அவ்வளர்ச்சியை அடைவதற்கு அங்கு வாழ்ந்த மூதாதையர்கள் பட்ட சிரமங்கள் ஏராளம். இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் சிங்கப்பூர் ஆங்கிலேயரின் காலனிய நாடாகத்தான் திகழ்ந்தது. அங்குச் சீனர், மலாய்க்காரர், இந்தியர் மற்றும் ஆங்கிலேயர் என நான்கு இன மக்கள் வாழ்ந்தனர். சிங்கப்பூர் மலாயாவுடன் இணைந்திருந்தது. அத்தகைய சூழலில் அங்கிருந்த மக்கள் தங்கள்

படைப்புகளை ஆங்கிலேய ஏகாதிபத்தியத்திற்கு இடையூறு விளைவிக்காமல் எழுதி வந்தனர். சிங்கப்பூர் அரசியல் விடுதலை பெற்றவுடன் நான்கு இன மக்களை ஒன்றிணைத்து, ஒரே உணர்வு கொண்ட சிங்கப்பூர் மக்களாக மாற்றவேண்டிய கடமை ஆட்சியாளர் களுக்கு இருந்தது. இதனைத் தொடர்ந்து சிங்கப்பூரில் இரண்டு வகைத் தலைமுறைகள் உருவாயின. ஒரு சாரார் ஆங்கிலேய ஆட்சிக்கு ஏற்பத் தங்களது வாழ்க்கையைச் சரிசெய்து கொண்டவர்கள். மற்றொரு சாரார் குடியரசின் புதிய சித்தாந்தங்களுக்கு உட்பட்டு வாழ்ந்தவர்கள். முன்னையவர்கள் தம் வாழ்க்கை, தம் சமூகம் என்ற ஒரு குறுகிய வட்டத்திற்குள் அடங்கியவர்கள். பின்னையவர்களோ சிங்கப்பூரர் என்ற உணர்வு கொண்டவர்களாக, தம் மொழி, இனம் ஆகியவற்றையுங்கூட அரசாங்கக் கொள்கைக்கு ஏற்ப மாற்றிக் கொண்டவர்களாக இருந்தனர்.

ஆங்கிலேயர் காலம் தொடங்கிப் புதிய சமுதாயம் அமைந்த காலம் வரை தம் படைப்புகளை வெளியிட்டவர் கவிஞர் ந.பழநிவேலு. அவர் 1908-ஆம் ஆண்டு தஞ்சை மாவட்டம் சிக்கலில் பிறந்தவர். 1930-ஆம் ஆண்டு முதல் இலக்கியங்களைப் படைக்கத் தொடங்கினார். அவர் அடிப்படையில் தமிழகத்திலிருந்து வந்தவராதலால் அவர்தம் படைப்புகளில் தமிழ் இலக்கியங்களின், குறிப்பாகச் சங்க இலக்கியங்களின் கருத்தாக்கங்கள் வெளிப்படுவதைக் காண முடிகிறது. எளிமையான நடையில், புதுக்கவிதை அமைப்பிலும் மரபுவழியிலும் தம் கவிதைகளைப் படைத்திருக்கும் கவிஞர் ஆழமான கருத்துகளை அழகுறச் சொல்லிச் செல்கிறார். இவர்தம் கவிதைகளை இறைவணக்கத்துடன் தொடங்கியிருந்தாலும் சங்ககால மரபிற்கேற்ப இயற்கையை அதிகம் சார்ந்து பாடியுள்ளார். வட இந்தியச் சமயங்கள் தமிழ்நாட்டிற்கு வருமுன்பு தமிழ் மக்கள் வாழ்க்கை ஆன்மீக ஈடேற்றத்தை நோக்கமாகக் கொண்டிருந்தது என்று கருத அக்கால இலக்கியச் சான்றுகள் இடந்தரவில்லை. இயற்கையான வாழ்க்கையில் ஈடுபாடு மிகுந்தவர்களாக விளங்கிய அக்காலத் தமிழர், மக்களுக்குரிய இயல்பான தன்மைகளையே போற்றினர். எனவே, அக்காலத் தமிழ் இலக்கியம் இயற்கை நெறிக்கால இலக்கியமாக அமைந்தது என்கிறார் ஆ.வேலுப்பிள்ளை.[1] இத்தகைய சாரங்கள் நிறைந்த கவிதைகளே கவிஞர் ந.பழநிவேலு அவர்களுடையதுமாகும்.

## பால் வேறுபாடு பற்றிய பதிவுகள்

மக்களின் வாழ்க்கைக்கும் இலக்கணம் வகுத்த பெருமை தமிழர்களையே சாரும். அதற்குச் சான்றாக விளங்கும் தொல்காப்பியம் உயர்திணைக்கும் அஃறிணைக்கும் ஐந்து வகைப் பால்களாகப் பிரித்துரைக்கின்றது. இதனை,

ஆடூஉ அறிசொல் மகடூஉ அறிசொல்
பல்லோ ரறியும் சொல்லொடு சிவணி
அம்முப் பாற்சொல் லுயர்திணை யவ்வே

(தொல். சொல் -2)

ஒன்றறி சொல்லே பலவறி சொல்லென்று
ஆயிரு பாற்சொ லஃறிணை அவ்வே(தொல். சொல் - 3)

என்ற நூற்பாக்களால் அறியலாம். இக்கருத்தைக் கவிஞர் ந.பழநிவேலு 'பால்' என்ற தலைப்பில்,

"இலக்கணத்தில் ஐந்துவகைப் பால்க ளுண்டு
ஏற்றமுள்ள ஆண்பாலும் பெண்பா லோடு
பலர்பாலும் ஒன்றன்பால் பலவின் பாலும்
பகுத்திட்ட தகைத்தமிழர் அறிவார்"

என்ற வரிகளில் எடுத்தியம்புகிறார். அதோடு மட்டுமல்லாது இவ் ஐவகை பால் வேறுபாடுகளால் சமுதாயத்தில் நிலவும் பிரச்சினைகளைத் தம் கவிதைகளின்வழி பதிவுசெய்துள்ளார்.

சினம் பற்றிய சிந்தனைகள்

கோபம் என்ற குணம் ஒருவனை மட்டுமல்லாது அவனைச் சார்ந்தவர்களையும் அழிக்கும் தன்மை கொண்டது என்பது வள்ளுவர் வாக்கு. இதனை,

"சினம்என்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனம்என்னும்
ஏமப் புணையைச் சுடும்" (குறள் 306)

என்ற குறள் நமக்கு உணர்த்துகிறது. சினத்தின் கொடூரத் தன்மையைக் கவிஞர் ந.பழநிவேலு,

"கோபம் கொடியது தம்பி – உன்னைக்
கூத்தாட வைக்குமே வார்த்தையைக் கொட்டி
பாபச் செயல் கோபம் தம்பி – உன்றன்
பக்கம் தலைகாட்டா தோட்டத்தைத் தம்பி"

என்ற வரிகளில் விளக்குகிறார். 'சினம்' ஒரு பாவச்செயல் என்கிறார். மேலும்,

"சினங் கொள்ளும் வேளையில் தம்பி – உன்
சிந்தை தடுமாறும் கண்கள் சிவக்கும்
மனிதனும் மிருகமாய் மாற – அது
வைக்குமே நீ அதை விட்டொழிப் பாயே"

என்று மனிதனுக்குச் சினத்தால் ஏற்படும் உடற்பாதிப்புகளை விளக்குகிறார் கவிஞர். வள்ளுவரோ, சினத்திலிருந்து தன்னைக் காத்துக் கொள்ளாதவனை அச்சினமே அழிக்கும் என்று கூறுகிறார். இதனை,

"தன்னைத்தான் காக்கின் சினம்காக்க காவாக்கால்
தன்னையே கொல்லும் சினம்" (குறள் 305)

என்ற குறள் வழி அறியலாம். சினத்தினால் உயிரையே இழக்க நேரிடும் என்பது வள்ளுவரின் கருத்து.

**இளமைப் பருவம் பற்றிய செய்தி**

இளமை நிலையில்லாதது. இளமை அனைவரின் வாழ்விலும் ஒருமுறை மட்டுமே வரக்கூடியது. இத்தகைய கருத்துகளைச் சங்க இலக்கியங்கள் தொடங்கிப் பல கவிஞர்கள் பல பாடல்களில் வெளிப்படுத்தியுள்ளனர். அனைவரும் அறிந்த புறநானூற்றுப் பாடல் ஒன்று இளமையின் அழகையும், இன்பத்தையும் சிந்தித்து ஏங்கும் மனிதனின் உணர்வுகளைப் படம்பிடிக்கிறது.

"நெடு நீர்க் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து
குளித்து மணற் கொண்ட கல்லா இளமை
அளிதோ தானே! யாண்டு உண்டு கொல்லோ-
தொடித் தலைவிழுத் தண்டு ஊன்றி, நடுக்குற்று
இரும் இடை மிடைந்த சில சொற்
பெரு மூதாளரேம் ஆகிய எமக்கே?" (புறம்: 243)

என்ற பாடல் வரிகள் மேற்குறிப்பிட்ட கருத்துகளை விளக்க வல்லன. இளமை என்ற தலைப்பில் கவிஞர் ந.பழநிவேலுவும் இளமை நிலையாமையை மறைமுகமாக எடுத்தியம்புகிறார்.

"வாழ்வில் ஒருமுறை தானே – வரும்
யார்க்கும் இளமைப்பருவம்
தாழ்வுகள் ஏதடா நமக்கு – இதைத்
தம்பி அறிந்துமுன் னேறு"

எனவே, வாழ்வில் ஒருமுறை மட்டுமே வரும் இளமைக் காலத்தை நாம் நன்கு பயன்படுத்தி முன்னேற வேண்டும் என்பதை உணர்த்துகிறார்.

**காதலர் பிரிவும் தலைவி இரங்கியிருத்தலும்**

சங்க காலத்தில் களவு, கற்பு என்ற இருவகை வாழ்க்கையிலும் தலைவனின் பிரிவுத் துன்பம் தலைவியை வருத்துவதும், தலைவனின் வருகைக்காகத் தலைவி ஏங்கியிருப்பதும் பல அகப்பாடல்களில் பதிவு செய்யப்பட்டுள்ளன. பொருள் ஈட்டுவதற்காகவோ, கல்வி கற்பதற் காகவோ, போர் நிமித்தமாகவோ தலைவன் தலைவியைவிட்டுப் பிரிந்து செல்கிறான். ஆனால், அவன் குறிப்பிட்டுச் சென்ற காலம் வந்த பிறகும் அவன் தலைவியை வந்து அடையவில்லை. இதனால், தலைவி ஏங்குகிறாள், பிரிவுத்துன்பம் தாளாமல் புலம்புகிறாள். இத்தகைய நிலை முல்லை நிலம் மற்றும் நெய்தல் நிலப் பெண்களிடத்தில் அதிகம் இருந்ததை அகப்பாடல்கள் சுட்டுகின்றன.

இத்தகைய உணர்வுகளைக் கவிஞர் ந.பழநிவேலு தம் கவிதைகளில் படைத்துள்ளார். 'இன்ப நிலா' என்ற தலைப்பில் அமைந்த கவிதையில்,

"வானத்தில் இருள் கவிந்த வேளை நானும்
வரமாட்டேன் இன்பநிலா தோன்றும் போதோ
தேனே உன் அருகிருக்க விரைவேன் என்றே
செப்பியென் காதலரும் எங்குச் சென்றார்?
கூனலிளம் பிறைமாறிக் கொழுத்து விட்ட
கோலநிலா இன்பநிலா இதுபோ லன்றோ
ஆணழகர் அன்றெதிரே எதிர்ப்பட்டாரென்
ஆவிதனைக் கொள்ளைகொண்டோர் இன்னும் காணேன்!"

என்று தலைவனின் வருகையை எதிர்நோக்கி ஏங்கும் பெண்ணின் மனநிலையைச் சித்திரிக்கிறார் கவிஞர். இயற்கையைப் பற்றிப் பாடும் போதும் கவிஞர் அதனுடன் தொடர்புடைய பெண்களின் உணர்வுகளான தனிமைத்துயரையும், பிரிவுத்துயரையும் பற்றிப் பாடுகிறார்.

பரத்தமை பற்றிய சிந்தனைகள்

சங்ககால மருத நிலம் சார்ந்த மக்களின் வாழ்க்கை முறையில் பரத்தையர்களும், பரத்தமையும் முக்கிய இடத்தை வகிக்கின்றன. செல்வச் செழிப்புடன் வாழ்ந்த மன்னர்கள் முதல் சாதாரண மக்கள் வரை பரத்தையர் ஒழுக்கம் மேற்கொண்டது சங்க இலக்கியங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளது. பரத்தையரிடம் உறவு பூண்டு ஒழுகின தம் கணவனைப் பெண் புலந்தும், பிறகு அவன் செய்த பிழையை மறந்தும் வாழ்ந்து வந்தாள் என்று அறிகின்றோம்.[2] 'காமக் கிழத்தியர்', 'பொருட் பெண்டிர்', 'வரைவின் மகளிர்' என்றெல்லாம் குறிக்கப்பட்ட பரத்தையர்கள் பிற்காலத்தில் 'தேவரடியார்கள்' என்றும் சுட்டப்பட்டனர். அவர்களின் இழிவாழ்க்கையையும் அதற்குக் காரணமான ஆண்களையும் சாடுகிறார் கவிஞர். இதனை,

"பெண்கள் தலைமீது போடவேண்டாம் – பழி
பேடிகள் தம்செய லாகுமய்யா!
ஆண்கள் பரிசுத்த ராகிவிடில் – ஓரிரு
ஆண்டுக்குள் தாசிக் குலமறையும்"

என்ற வரிகள் புலப்படுத்துகின்றன. தேவரடியார்களின் வாழ்க்கையை மாற்றுவதற்கும் சங்க காலம் முதல் கூறாத ஒரு புது வழியையும் அவர் கூறுகிறார்.

"சீர்திருத் தம்செய்ய வேண்டுமெ னில் – அந்தத்
'தேவ ரடியார்'' களை மணப்போம்"

என்ற புரட்சிமிகு கருத்தைத் தெரிவிக்கிறார் கவிஞர்.

## முடிவுரை

தமிழகத்திலிருந்து புலம்பெயர்ந்து பல நாடுகளுக்கும் சென்ற தமிழர்கள் படைக்கும் இலக்கியங்களில் அவர்கள் படித்துப் பழகிய பழம்பெரும் இலக்கியங்களின் தாக்கங்கள் இருப்பது தவிர்க்க முடியாததாகும். தமிழர்களின் மரபையும் சிறப்பையும் தமிழர்களுக்கே இன்றளவும் பறைசாற்றிக் கொண்டிருப்பவை நமது செவ்வியல் இலக்கியங்களே ஆகும். எனவே, எந்த ஒரு படைப்பாளியும் அதனுடைய சாராம்சம் இல்லாமல் தனது படைப்பை உருவாக்க இயலாது. தமிழக மண்ணிலேயே தோன்றும் இலக்கியவாதிகளுக்கே இந்த நிலை என்கிற போது தமிழ்நாட்டை விட்டுப் புலம்பெயர்ந்து சென்ற படைப்பாளிகளுக்கு அந்நாட்டில் வாழும் பிற தமிழ் மக்களுக்குத் தமிழர்களின் பாரம்பரியத்தையும் பண்பாட்டையும் உணர்த்த வேண்டிய கடமை உள்ளது. எனவே, அதனை நினைவூட்ட வேண்டியும் புதிய தலைமுறை களுக்கு உணர்த்த வேண்டியும் செவ்வியல் இலக்கியங்களின் கருப்பொருள்களைக் கொண்ட படைப்புகளை அதிகம் படைக்கின்றனர். கவிஞர் ந.பழநிவேலு, தமது கவிதைகளில் மட்டுமல்லாது, உரைநடைப் படைப்புகளிலும் சங்க இலக்கியங்கள் பற்றி விரிவாக எழுதியுள்ளார். எட்டுத்தொகை, பத்துப்பாட்டு நூல்களின் தலைப்புகளில் அவற்றைப் பற்றிய சிறு வரலாறாக உரைநடை அமைப்பில் எழுதியுள்ளார். எனவே, இவரது படைப்புகளில் சங்க இலக்கியத்தின் தாக்கங்கள் பற்றிய விரிவான ஆய்வு செய்வதற்கான களம் இருக்கின்றது.

### உதவிக்குறிப்புகள்

1. வேலுப்பிள்ளை, அ., தமிழ் இல்க்கியத்தில் காலமும் கருத்தும், பக்.17.
2. பிள்ளை, கே.கே., தமிழக வரலாறு மக்களும் பண்பாடும், பக். 137.

### மூல நூல்

பாலகிருட்டிணன், ப.(பதி), கவிஞர் ந.பழநிவேலு படைப்புக் களஞ்சியம் தொகுதி-2, (UNITED BIND GRAPHICS,) Chennai, 1999.

### மேற்கோள் நூல்கள்

1. ஆய்வரங்கம், “சிங்கப்பூர்த் தமிழ் இலக்கியம் - ஒரு நூற்றாண்டு,” சிங்கப்பூர்.
2. எத்திராசன் முத்து, புலவர், சங்க இலக்கியச் சமுதாயம், கவிதா பதிப்பகம், சென்னை 2012.
3. செந்துறை முத்து, புலவர், தொல்காப்பியர் வாழ்க்கை நெறி, வள்ளுவர் பண்ணை, சென்னை, 2002.

4. திருக்குறள், பரிமேலழகர் உரை, உமா பதிப்பகம், 1997.

5. தியாகராசன்,மா., சிங்கப்பூர்ப் புதுக்கவிதைகள் - ஒரு திறனாய்வு, தமிழ்க் கலை அச்சகம், சென்னை.

6. புறநானூறு, எஸ்.ராஜம், சென்னை, 1952.

7. மலேசிய, சிங்கப்பூரத் தமிழ் இலக்கியம், 2005, மாநாட்டுக் கட்டுரைகள், மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம், மித்ர ஆர்ட்ஸ், சென்னை, 2007.

8. லக்ஷ்மி, எம்.எஸ்., சிங்கப்பூர்த் தமிழ் இலக்கியம் ஆழமும் அகலமும், மருதா

9. வானமாமலை, நா., தமிழர் வரலாறும் பண்பாடும (ஆராய்ச்சிக் கட்டுரைகள்), நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை, 1990.

10. வீரமணி, அ., சிங்கப்பூர் வளர்ச்சியில் தமிழ்மொழி, தமிழ்க் கலை அச்சகம், சென்னை, 1996.

# சிங்கப்பூர் மலேசியக் கவிதைகளில் செவ்வியல் பண்புகள்

திரு. வேணுகோபால்,
தலைவர், தமிழ்த்துறை
கல்வி அமைச்சு, சிங்கப்பூர்.

முனைவர் பொன் சசிகுமார்
பாடத்திட்ட அதிகாரி
கல்வி அமைச்சு, சிங்கப்பூர்.

## முன்னுரை

பழமைக்குப் பழைமையாய்ப் புதுமைக்குப் புதுமையாய் இலங்குவன செவ்வியல் இலக்கியங்கள். தொன்னூலாம் தொல்காப்பியத்தையும் சங்க இலக்கியங்களான பத்துப்பாட்டு எட்டுத்தொகையையும் திருக்குறளையும் இன்னும் சில நூல்களையும் செவ்வியல் இலக்கியங்களாகக் கொள்வர் சான்றோர். செவ்வியல் இலக்கியங்கள் பிற்கால இலக்கியங்களுக்கு வேராகவும் நீராகவும் இலங்குவதை உன்னிப் பார்ப்போர் ஐயமின்றி உணர்வர்.

'சங்கப் பனுவலைப் படித்தால் கிழம் போம் கீழ்மை போம்' என மூதறிஞர் வ.சுப.மாணிக்கனார் அதன் பெருமையை வியந்தேத்துவார். 'எல்லாப் பொருளும் இதன்பாலுள இதன்பால் இல்லாத எப்பொருளும் இல்லை' எனத் திருவள்ளுவமாலை திருக்குறளின் பெருமை சுட்டும். வாழ்வியலுக்கும் மொழிக்கும் இலக்கணம் கூறும் சிறப்புப் பெற்றது தொல்காப்பியம். இத்தகு இலக்கண இலக்கியங்கள் பிற இலக்கியங்களுக்கும், இலக்கியம் எழுத முனைவாருக்கும் கலங்கரை விளக்கமாக விளங்குகின்றன என்பது வெள்ளிடைமலை.

புலம்பெயர்ந்த தமிழர்கள் உடலால் இடம்பெயர்ந்து வாழ்ந்தாலும் தங்கள் பண்பாட்டையும் நாகரிகத்தையும் மொழியையும் புறந்தள்ளாது தலைமேற்கொண்டு பேணிக்காத்து வருகின்றனர். மொழியை விழியேபோல் போற்றிக் கொண்டாடுகின்றனர். சிங்கப்பூர், மலேசியா, மொரீசியஸ் போன்ற நாடுகளில் தமிழர்களிடையே தமிழ் புழக்கத்திலிருப்பதோடு பள்ளி, பல்கலைக்கழகங்களில் பயிலப்பட்டு வருவதையும் காணலாம். அனைத்திற்கும் மேலாகச் சிங்கப்பூரில் தமிழ் ஆட்சி மொழிகளுள் ஒன்றாக இருப்பது அதற்குச் சான்று பகரும்.

இலக்கியம் படைப்போர் முன்னோர் கூறிய பொருளேயன்றி அவர் மொழியையும் கையாண்டு தம் நூலைப் படைப்பர். நன்னூல் பாயிரம்,

'முன்னோர் மொழிப்பொருளே யன்றியவர் மொழியும்
பொன்னேபோல் போற்றுவம் என்பதற்கும் முன்னோரின்
வேறுநூல் செய்துமெனும் மேற்கோளி லென்பதற்கும்
கூறுபழஞ் சூத்திரத்தில் கோள்' (நன்னூல்–பாயிரம்–8)

என்று முன்னோர் மொழிப்பொருளைப் பொன்னே போல் போற்ற வேண்டும் என்று புகல்கிறது. அங்ஙனம் நன்னூலார் கூற்றுப்படி அங்கிங்கெனாதபடி எங்கும் பரவியிருக்கும் செவ்வியல் இலக்கியப் பாடுபொருளும் மொழியும் புலம்பெயர்ந்தோர் இலக்கியங்களில் பெற்றுள்ள தாக்கத்தை இக்கட்டுரையின்கண் காண்போம். அனைத்துக் கூறுகளையும் எடுத்துக் கூறுவதென்பது விரிப்பின்பெருகுமாதலான் சிங்கப்பூர், மலேசியா ஆகிய நாடுகளின் கவிதைகளில் உள்ள சிற்சில கூறுகளில் அமைந்துள்ள தாக்கத்தை இக்கட்டுரை எடுத்தியம்புகிறது.

### மக்கட்பேறு

மனிதன் அடைய வேண்டிய பேறுகளுள் இன்றியமையா ஒன்று மக்கட் பேறு. மன்னரே ஆயினும் மக்கட் பேறு பெறார் நற்பயன் பெறார். வாணாளை வீணாகக் கழித்ததாகவே அறியப்படுவர். அத்தகு மக்கட் பேற்றின் சிறப்பைத் தொல்காப்பியம், புறம், திருக்குறள் போன்ற செவ்வியல் இலக்கியங்கள் சிறப்புற மொழிகின்றன.

'காமம் சான்ற கடைக்கோட் காலை
ஏமம் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே' (கற்பு-190)

எனத் தொல்காப்பியமும்

'படைப்புப் பல படைத்துப் பலரொடு உண்ணும்
உடைப்பெருஞ் செல்வ ராயினும் இடைபடக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும்
நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்
மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக்குறை இல்லைதாம் வாழும் நாளே' (புறம்.188)

எனப் புறநானூறும்

'பெறுமவற்றுள் யாமறிவது இல்லை அறிவறிந்த
மக்கட்பேறு அல்ல பிற' (குறள் 61)

எனத் திருக்குறளும் மக்கட்பேற்றின் மாண்பு சுட்டுதல் காணலாம்.

சிங்கப்பூரில் சிறப்புற்றுத் திகழும் கவிஞர் முருகடியான் தமது குறுங்காவியமாகிய அழகோவியத்தில் "உலகில் கண்கவர் இயற்கை அழகுகள் பலவற்றைக் கூறி, அவையெல்லாம் கண்ணுக்கு மட்டுமே அழகுதரக் கூடியன. ஆனால், குழந்தையே அனைத்திற்கும் மேலான பேரழகு படைத்தது. இட்டும் தொட்டும் கண்டும் கேட்டும் இன்புறுத்தவல்லது" என்று குழவியின் பெருமை போற்றுவார். 'நீரும் நெருப்பும்' என்னும் தலைப்பில் குழலும் யாழும் குழைத்த மழலை மொழியை வியந்தேத்திக் குழந்தையை 'உலகம் வணங்கும் உயர் தெய்வம்' என்று குறிப்பிடுகின்றார்.

'மணிவாசகத்தை வென்றெடுக்கும்
மழலை வாசகம் தேனளிக்கும்
கனிவாய்க் கன்னியர் முத்தமதைக்
கடைவாய்ச் சொல்லால் தோற்கடிக்கும்'
மற்போர் வீரரின் மாவீரம்
மார்பில் உதைக்கும் மாவீரம்!
சொற்போர் நிகழ்த்தி வெல்வோரும்
சுருள்வார் குழந்தைவாய் மொழிக்கே
தத்தி நடப்பதில் ஓரின்பம்
தந்தை மொழியில்மற் றோரின்பம்
பொத்தி அனைத்திடப் புத்தின்பம்
புன்னகை தரும்பொன் னுலகின்பம்'

என்று மக்கட் பேற்றால் பெறும் அளவில்லா இன்பத்தை நயமுற நவில்வார். இக்கூற்றுகள் செவ்வியல் இலக்கியத்தின் மொழியையும் பொருளையும் பொன்னே போற்றி எடுத்தாண்டிருத்தல் தெளிவு.

நாடு

நாடு பற்றிப் புறநானூறு நன்மக்களைப் பெற்றுள்ள நாடே சிறந்த நாடு என்று புகழ்கிறது. காடாக இருந்தாலும் செய்யாக இருந்தாலும் மேடாக இருந்தாலும் பள்ளமாக இருந்தாலும் நல்லோரைப் பெற்றுள்ள நாடே நன்னாடு என்று புறம் கூறும்.

'நாடா கொன்றோ காடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா கொன்றோ
எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே' (புறம் . 187)

இக்கருத்தைச் சிங்கைக் கவிஞர் மு. தங்கராசன் அவர்கள் 'சூரியகாந்தி' என்னும் தம் நூலில் எடுத்தாண்டு முன்னோர் மொழி பொருளுக்குப் பெருமை சேர்க்கின்றார்.

'பொங்குமின்பக் கல்விநலம் பூரிக்கும் பொன்னாடு
எங்குமென்றும் இன்பங்களே இனிதோங்கும் திருநாடு

தங்குமெழில் சிங்கைநாடு தரணிபுகழ் ஓங்கும்நாடு
எங்கள்நாடு சிங்கப்பூர் ஏற்றமுடன் வாழ்கவே!

..............................................................

துப்புரவும் தூய்மையுமே தோய்ந்துவரும் நேர்மையதாய்
எப்புறமும் சிங்கப்பூரர் இருந்துவரும் ஏற்றமம்மா!'

என்று நேர்மையான சிங்கப்பூரர்களைக் கொண்ட நாடெனக் கவி பாடுகின்றார்.

கவிஞர் ந.விசயபாரதி அவர்களும் 'பூக்கள் உடையும் ஓசை' என்னும் தம் நூலில்

'எண்ணி எண்ணி வியக்கின்றேன் ஆசியாவின்
இதயமெனத் துடிக்கின்ற சிங்கப் பூரை
எண்ணத்தால் உயர்ந்தாரே உயர்வர் வாழ்வில்
என்பதனை மெய்ப்பித்த நாடு'

என்று உள்ளத்தாலும் தீங்கு உள்ளாது பண்போடு வாழும் நன்மக்களைப் பெற்ற நாடே நன்னாடென்பர்.

எல்லோரும் ஓரினம் எல்லோரும் ஒரு நிறை

உலக மக்கள் யாவரும் உறவினரே, எல்லார்க்கும் எல்லாம் சொந்த ஊரே என்னும் ஒப்பரிய தத்துவத்தைக் கூறிச் சென்றார் கணியன் பூங்குன்றனார்.

'யாதும் ஊரே யாவரும் கேளிர்
தீதும் நன்றும் பிறர்தர வாரா'

என்னும் இப்புறப்பாடல் வரிகள் பல பாடல்களுக்கு வித்தாயின.

சிங்கையின் மூத்த கவிஞர்களுள் ஒருவரான மு. தங்கராசன் அவர்கள் 'மண்ணுலக சொர்க்கபுரி' என்னும் தலைப்பில்

"பல இனங்கள் பலமதங்கள் பழகுமொழிப் பிரிவுகளும்
பலநிறங்கள் பண்பாடுகள் கலைகளென நாடதனில்
பலவிதங்கள் பற்பலவாய் வேற்றுமையில் ஒற்றுமையாய்
நல்லிணக்கம் நயந்துவரும் நன்னாடாம் பொன்னாடு"

என்று வேற்றுமையில் ஒற்றுமை காணும் தம் தேசத்தை எண்ணிப் பெருமிதம் கொள்கின்றார்.

பரந்த நிலத்தை ஆளும் அரசனாயினும் அன்றாட உணவிற்கே அலையும் வறியனாயினும் இருவரும் ஒன்றே என்று நக்கீரர் சமநிலை கூறுவார்.

'தெண்கடல் வளாகம் பொதுமை யின்றி
வெண்குடை நிழற்றிய ஒருமை யோர்க்கும்

நடுநாள் யாமத்தும் பகலும் துஞ்சான்
கடுமாப் பார்க்கும் கல்லா ஒருவர்க்கும்
உண்பது நாழி உடுப்பவை இரண்டே
பிறவும் எல்லாம் ஓர்ஒக் கும்மே' (புறம்.189)

என்னும் நக்கீரர் பாடல் பொதுவுடைமை பற்றி முரசறைவது கண்கூடு. இதன் தாக்கமாக இக்காலப் புலவர் பலரும் இக்கருத்தை வழிமொழிந்து பாடியுள்ளனர்.

வணக்கம் சிங்கப்பூர் என்ற நூலில் 'எல்லோரும் சமநிலையில்' என்னும் தலைப்பில் பாவலர் முத்துமாணிக்கம் நக்கீரர் பாடிய பொதுவுடைமைக் கருத்தை வழிமொழிந்து பாடுகிறார்.

'எல்லோரும் பொதுநிலையில் இயங்க வேண்டும்
இன மானம் குல மானம் காக்க வேண்டும்
கல்லாதார் என்ற நிலை போக வேண்டும்
கடமையுடன் தமதுடைமை காக்க வேண்டும்
இல்லாரோ இரப்பாரோ இல்லா தொன்றாய்
எல்லோரும் சமநிலையில் வாழ வேண்டும்'

என்னும் பாடல் புறம். கூறும் சமதர்மத்தால் முகிழ்த்தது என்பதைக் கற்பார் தெள்ளிதின் உணர்வர்.

நாட்டில் சட்டதிட்டம் சிறப்புற இருந்தால்தான் நாடு அமைதியுடன் திகழும். இன்றேல் கொல் குறும்பும், பாழ் செய்யும் உட்பகையும், இன்னபிற இழிசெயல்களும் நாட்டின் அமைதியைக் குலைக்கும். அரசன் காய்தல் உவத்திலின்றி முறை செய்து காப்பானாயின் அந்நாடு நன்னாடாகும். மன்னன் குற்றத்திற்கேற்ற தண்டனை விதிக்க வேண்டும் என்பதனை

'வழிபடுவோரை வல்லறி தீயே
பிறர்பழி கூறுவோர் மொழிதே றலையே
நீமெய் கண்ட தீமை காணின்
ஒப்ப நாடி அத்தக ஒறுத்தி' (புறம்.10)

என்னும் புறப்பாடல் உணர்த்தும். இதையே

'கொடியோர்த் தெறுதலுஞ் செவ்வியோர்க் களித்தலும்
ஒடியா முறையின் மடிவிலை யாகி
நல்லதன் நலனும் தீயதன் தீமையும்
இல்லை யென்போர்க் கின்னா கிலியர் (புறம் - 29)

என்னும் புறப்பாடலும் வலியுறுத்தும். இப்பாடல்களால் உள்ளங் கவரப்பட்ட சிங்கப்பூர்ப் பாவலர் முத்துமாணிக்கம் சிங்கப்பூரில் சட்டதிட்டம் செம்மையுற இருப்பதால் இங்குக் குற்றங்கள் இல்லையெனப் பெருமைபடப் பாடுகின்றார்.

'சிற்றேனும் பிறர்பொருளைக் கவர்வ தில்லை
சினங்கொண்டும் ஊர்வம்பு செய்வ தில்லை
மற்றவரைத் துன்புறுத்தி வாழ்வ தில்லை
மனம்மாறிப் பொய்களவு செய்வ தில்லை
நற்றாய்உன் சிங்கப்பூர் நாட்டுச் சட்டம்
நல்லவளே நீநாளும் வாழ்க வாழ்க'

என்று சிங்கப்பூரில் சட்டம் சிறப்புறச் செயல்படுவதைக் குறிப்பிடுகின்றார்.

### இல்லறம்

பொன், பொருள், பதவி போன்றவற்றால் பொருந்தி அமையும் வாழ்க்கை சிறந்ததன்று. உள்ளத்தால் ஒன்றிப் பொருந்தும் வாழ்க்கையே சிறந்தது என்பதைக் கலித்தொகை எடுத்துரைக்கும்.

'ஒன்றன் கூறாடை உடுப்பவரே யானாலும்
ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை'

என்னும் கலித்தொகை வரிகள் உள்ளம் ஒன்றிய அன்பின் சிறப்பை விளக்கி நிற்கின்றன. இப்பாடல் வரிகளை மெய்ம்மறந்து கற்று அவற்றைத் தம் உள்ளத்துள் பதித்துக் கொண்ட சிங்கப்பூர்க் கவிஞர் சி.ஆறுமுகம் அவர்கள் மணமக்களை வாழ்த்தும்போது அக்கருத்தை வெளிப்படுத்துகின்றார். இருமனம் ஒருமனமாகி உள்ளத்தால் ஒன்றுபட்டு வாழ்வதே வாழ்க்கை என்றும் அதனை ஏற்றுப் போற்றிப் புகழொடு வாழ்வீர் என்றும் பாடுகிறார்.

'இருமனம் இணையு மிந்த
இனியநன் னாளில் நீவிர்
ஒருமனம் கொண்டு வாழ
உறுதிகொள் வீர்களாக'

என்னும் பாடல் வரிகள் அதற்குச் சான்றாகின்றன.

### கல்வி

கவிஞர் சி.ஆறுமுகம் அவர்கள் தமது பிறிதொரு பாடலில் வெற்றி வாழ்க்கைக்குப் பாதை அமைத்துக் கொடுக்கிறார். கல்வியைத் துணையாகப் பற்றிக்கொள். அதுவே உன்னைக்கரைகொண்டு சேர்க்கும். பிற பொன், பொருளெல்லாம் கல்விபோல் சிறப்புடையனவல்ல என வழிப்படுத்துகிறார்.

'கல்வியொன்றே எப்பொழுதும் கூடயிருக்கும் – மற்று
காசுபொருள் என்பதெல்லாம் எத்தனைநாள் கைகொடுக்கும்
வெல்வதற்கு வேண்டுவது புத்திக் கூர்மையே அன்றி
வேறெதுவும் துணையாகும் என்பதெல்லாம் வெறுமையே'

என்று 'தாகம்' என்னும் தம் நூலில் 'வெற்றிநடையோடு' என்னும் தலைப்பில் கல்வியின் மேன்மையை நவில்வார். ஆரியப்படை கடந்த

பாண்டியன் நெடுஞ்செழியனின் புறப்பாடலைப் பன்முறை பயின்று உள்ளத்தில் நிறுத்தியதாலேதான் இப்பாடல் பிறந்தது என்பதும் அதன் தாக்கமே இப்பாடல் பிறப்புக்குக் காரணம் என்பதும் தெளிவு.

> 'உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்
> பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே
> பிறப்பு ஓரன்ன உடன்வயிற் றுள்ளும்
> சிறப்பின் பாலால் தாயும்மனம் திரியும்
> ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
> மூத்தோன் வருக என்னாது அவருள்
> அறிவுடையோன் ஆறு அரசும் செல்லும்
> வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்
> கீழ்ப்பால் ஒருவன் கற்பின்
> மேற்பால் ஒருவனும் அவன்கண் படுமே' (புறம்.183)

என்னும் பாடலின் தாக்கமே கவிஞர் சி.ஆறுமுகம் அவர்களின் கல்வி பற்றிய பாடலுக்குக் கருவாக அமைந்திருக்கிறது.

காதல்

கவிஞர் ஐ.உலகநாதன் தம் 'தமயந்தி' என்னும் நாடகத்தில் நளன், தமயந்தி காதலைக் குறிப்பிடும்பொழுது அவர்கள் கண்களால் ஒருவரையொருவர் கண்டபொழுதே காதல் அன்பெனும் மனக் கதவு திறந்தது என்று பாடுகிறார்.

> 'தாமரை போலிருக்கும் நளன் பார்வை- நீலம்
> தடவிய தமயந்தி மலர்விழியில்
> தீண்டிய அவ்வொரு நொடியினிலே – மனம்
> திறந்தது அன்பெனும் திறத்தினிலே'

என்னும் அவரது பாடல்

> 'கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்
> என்ன பயனும் இல' (குறள் 1100)

என்னும் குறளின் தாக்கமன்றோ?

காதலைப் பற்றிக் கவிஞர் முருகடியான் அவர்கள் அழகோவியம் என்னும் தம் குறுங்காப்பியத்தில் பெண்ணின் பார்வை ஆணைப் பீடிழக்கச் செய்யும் வல்லமை படைத்தது என்று குறிப்பிடுகின்றார். பாரதிதாசனும்

> 'கண்ணின் கடைப்பார்வை காதலியர் காட்டிவிட்டால்
> மண்ணில் குமரர்க்கு மாமலையும் ஓர்கடுகாம்'

என்று கூறியிருத்தல் ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது. இக்கருத்து, செவ்வியல் இலக்கியத்துள் பல இடத்தும் பயின்று வருதல் காணலாம். சான்றுக்கு ஒன்று மட்டும் ஈண்டுத் தரப்படுகிறது.

'சிறுவெள் அரவின் அவ்வரிக் குருளை
கான யானை அணங்கி யாங்கு
இளையள் முளைவாள் ளெயிற்றள்
வளையுடைக் கையள் எம்அணங்கி யோளே'
(குறுந். 119)

சிறிய பாம்புக் குட்டியானது வலிய யானையைத் தீண்டி வருத்தியது போல இளையன் தன்னை வருத்தியதாகத் தலைவன் குறிப்பிடுதல் ஒப்பு நோக்கத்தக்கது. தொல்காப்பியமும் கண்ணே காதல் பேச்சு நிகழ்த்தும் கருவி எனச் சுட்டுகிறது.

'நாட்டம் இரண்டும் அறிவுடம் படுத்தற்குக்
கூட்டி உரைக்கும் குறிப்புரை யாகும்'
(தொல். களவு. நூ.97)

**உழைப்பு**

உலகம் இனிதே இயங்குதற்குரிய காரணத்தைக் கூறும் கடலுள் மாய்ந்த பெருவழுதி, அமிழ்தமாயினும் தனியே உண்ணார் யாரோடும் வெறுப்புக் கொள்ளார்; சோர்வு கொள்ளார்; புகழ்க் காரியங்களையே செய்வார்; பழிபட எதனையும் செய்யார்; தமக்கென வாழாது பிறர்க்கெனவாழும் இயல்பினர் என இத்தகைய மக்களைப் பெற்றுள்ளதாலேயே இவ்வுலகம் இனிது இயங்குகிறது என்று குறிப்பிடுகின்றார்.

இக்கருத்துக்களுள் தம் உள்ளத்தைப் பறிகொடுத்த மன்னர் உலகத்து மன்னுதல் குறித்துத் தம் புகழ் நிறுவி மறைந்த சிங்கப்பூரின் போற்றற்குரிய கவிஞர். ந.பழனிவேலு அவர்கள் அவற்றைப் பொன்னேபோல் போற்றித் தம் கவிதையில் எடுத்தாண்டுள்ளார்.

'பல்வகை இனத்தார் நம் நாட்டில்
பண்புடன் கூடிக் கலந்தொன்றாய்ச்
சொல்லிலும் செயலிலும் திறன்காட்டும்
சோர்விலர் சிங்கப் பூரியரே
உழைப்பே நமது பெருஞ்செல்வம்
ஊக்கம் நமது அருஞ்செல்வம்
இழைப்பே என்பது அறியாமே
என்றும் இன்பம் பெறுவோமே'

என்னும் இப்பாடல் ஒற்றுமையையும் சுறுசுறுப்பையும் உழைப்பையும் வலியுறுத்துகிறது.

**கையறுநிலை**

இறந்தோரை எண்ணி வருந்திப் பாடும் பாடல் கையறுநிலைப் பாடலாகும். புறநானூற்றில் பல கையறுநிலைப் பாடல்கள் உள்ளன. அவை பிற்காலப் புலவர்களுக்குக் கையறுநிலைத் துறையில் பாடல் எழுத வழிகாட்டியாக விளங்கியுள்ளன.

'கழிந்தோர் தேயத்துக் கழிபடர் உறீஇ
ஒழிந்தோர் புலம்பிய கையறு நிலையும்
(தொல். புறம். 19. 26,27)

என்று தொல்காப்பியம் கையறுநிலையின் இலக்கணம் கூறும். பாரி மாய்ந்த பின்றை அவனை நினைத்து அவன் மகளிரும் கபிலரும் பாடியவையும், கோப்பெருஞ்சோழனைப் பிசிராந்தையார் பாடியதும் பொத்தியார் பாடியதும், அதியமானை ஔவையார் பாடியதும், மேலும் பல புலவர்கள் பாடியதும் எனப் பல கையறுநிலைப் பாடல்கள் புறநானூற்றில் இருக்கின்றன.

இக்கையறுநிலைப் பாடல்களைச் சிங்கப்பூர், மலேசியா போன்ற நாடுகளில் உள்ள கவிஞர்களும் முன்னோர்களை வழியொற்றிப் பாடியுள்ளனர். தமிழ் முரசைத் தோற்றுவித்த தமிழவேள் கோ.சாரங்கபாணி அவர்களின் பிரிவை ஆற்றாது அவர்தம் அரிய செயல்களை எண்ணி எண்ணிக் கலங்கிக் கையறுநிலைப் பாடலாகக் கவிஞர் எல்லோன் பாடுகிறார்.

'இனம் மொழி மேம்பாட்டிற்காய்
இடர்பல வேற்றும் காலம்
உணல்துயில் பேணா தோடி
உணர்வுகள்வெளிப்படுத்திக்
கனல்தெறி பேச்சால் எம்மைக்
கவர்ந்தநற் றலைவ! இக்கால்
மணங்கமழ் மாட்சி யாவும்
மறந்திடல் ஆமோ ஐயா!
நிலைபடத் தமிழர் வாழ்வில்
நெறிபடப் பட்டு ழன்றோன்
அலைபட அலைந்த காதை
ஆழியும் படுமோ வென்றே
கலைபடச் சாய்ந்தால் நெஞ்சம்
கனல்படும் யார்பொ றுப்பார்
தலைபடத் தலைப்பட் டோர்யார்?
தமிழ்மலைத் தமிழ வேளே!'

என்னும் அவருடைய கையறுநிலைப் பாடல் படிப்போரையும் கரைந்துருகச் செய்கிறது. தமிழறிஞர் முருகு சுப்பிரமணியத்தின் பிரிவால் வருந்திய ஞானதாசன் தம் வருத்தத்தைக் கையறுநிலைப் பாடலாக வடித்துத் தந்துள்ளார்.

'முருகவே தமிழன் மூச்சே!
முத்தமிழ் வித்தே நெஞ்சம்
உருகவே தமிழர் வாழ்வின்
உயிரெனத் திகழ்ந்த மேலோய்

தருவென நிழல்கொ டுத்த
தண்டமிழ்த் தேரே! கண்ணீர்
பெருகிடக் கவிக்கு லத்தைப்
பிரிந்துநீ சென்ற தேனோ!

என்று கற்பாரைக் கலுழ்ந்துருகச் செய்கிறார்.

இப்பாடல்கள் எல்லாம் நம் முன்னோர்கள் யாத்த கையறுநிலைப் பாடல்களின் தாக்கத்தால் முகிழ்த்தவை அன்றோ?

'தொடியுடைய தோள்மணந்தனன்
கடிகாவில் பூச்சூடினன்
தண்கமழும் சாந்துநீவினன்
செறறோரை வழிதபுத்தனன்
நட்டோரை உயர்பு கூறினன்
வலியர்என வழிமொழியலன்
மெலியரென மீக்கூறலன்
பிறரைத்தான் இரப்பறியலன்
இரந்தோர்க்கு மறுப்பறியலன்
வேந்துடை அவையத்து ஓங்குபுகழ் தோற்றினன் ....

(புறம். 239)

என்று நம்பி நெடுஞ்செழியனைப் பற்றி பேரெயின் முறுவலார் பாடிய பாடல் இதற்கு வழிகாட்டியாக இருப்பதை உணரலாம். ஒரு பாடல் இங்கு மட்டும் சான்றாக்கப்பட்டுள்ளது. இது போன்று பல கையறுநிலைப் பாடல்களின் தாக்கத்தைப் பிற்காலக் கையறுநிலைப் பாடல்களில் காணலாம்.

பாடலமைப்பு

செவ்வியல் இலக்கியங்களின் பாடலமைப்புகள் பல பிற்காலப் புலவர்களுக்குத் தாக்கத்தை உண்டாக்கியிருக்கின்றன. சிங்கைக் கவிஞர் முருகடியான் அவர்கள்

'தாயும் நீ தந்தை நீ
தமிழும் நீ சுவையும் நீ
பாயும் நீ துயிலும் நீ
பகுத்தறியும் அறிவும் நீ
ஓயும் நாளில்லாமல்
உழைக்குஞ்செங்கதிரும் நீ

என்று தம் 'நீரும் நெருப்பும்' என்னும் நூலில் சொல் தலைவா! சொல்! என்னும் தலைப்பில் பாடியுள்ளார். இவ்வமைப்பு முறை பரிபாடலின் தாக்கத்தால் அவருக்கு விளைந்ததாகும்.

இறைவன் உலகத்துப் பொருள்களிலெல்லாம் விரிந்து பரந்து இருப்பது மட்டுமன்றி அவற்றின் உள்ளுறு பண்பாகவும் இருக்கிறான் என்பதைப் பரிபாடல்,

'தீயினுள் தெறல் நீ பூவினுள் நாற்றம் நீ
கல்லினுள் மணியும் நீ சொல்லினுள் வாய்மை நீ
அறத்தினுள் அன்பு நீ மறத்தினுள் மைந்து நீ
வேதத்து மறை நீ பூதத்து முதலும் நீ
வெஞ்சுடர் ஒளியும் நீ திங்களுள் அளியும் நீ
அனைத்தும் நீ அனைத்தின் உட்பொருளும் நீ (பரி. 3.63-68)

என நயம்படப் பகரும். இப்பாடலமைப்பே கவிஞர் முருகடியானுக்குத் துணைநின்றது.

கற்பனை

கவித்துவம் மிக்க சிங்கைக் கவிஞர்களுள் ஒருவர் சிங்கை முகிலன். கவியாற்றல் மிக்க இவர் உருவகப் பாடல்கள், கதைகள் எழுதுவதில் வல்லவர். உரையாடல் உத்தி, கனவு காணும் உத்தி, மிருகங்களைப் பேச வைக்கும் உத்தி போன்ற பல கற்பனை வளமிக்க படைப்புகளை இவர் படைத்துள்ளார். இவரது கவிதைகளுள் ஒன்றான 'மனிதனும் மிருகமும்' என்னும் கவிதையில் மனிதனையும் மிருகங்களையும் பேச வைத்ததோடு, யார் சிறந்தவர் என வாதாடவும் வைத்துள்ளார். இக்கவிதையில் அவரது கற்பனை வளம் பெருக்கெடுத்து ஓடுவதைக் காணலாம்.

உதாரணமாக,

'ஆறறி வுள்ள வன்தான்
அவனியில் சிறந்தோன்! என்றேன்...
'சொல்லுவாய் மனிதா நீயே,
சுதந்திரம் பேசும் வாயால்!
உள்ளதை மாற்றி யிங்கே
உளறாதே என்று சிங்கம்
துள்ளினார்', குரங்கார் என்னைத்
துச்சமாய்ப் பார்த்து நின்றார்!
'நல்லவர் நாங்கள் என்றேன்,
நடிப்பதில் இருக்கு மென்றே
கரடியார் குரல் கொடுத்தார்...
தீர்ப்பு நான் சொல்வதென்றால்
'வேற்றுமை இல்லை' என்றேன்...
வீட்டுக்குள் கிடந்த நானோ
விழித்தபின் கனவென் றறிந்தேன்!

என்ற இப்பாடல் ஒரு வித்தியாசமான கற்பனை. 'யார் உயர்ந்தவர்' என வாதாடும் மனிதனும் மிருகங்களும், தந்திரம், கோபம், குழி பறிக்கும் குணம், வஞ்சம், விஷம், மாறும் குணம், தாழ்ந்த மனம் என மனிதனிடம் உள்ள பல குறைகளைச் சுட்டிக்காட்டுவதோடு

இறுதியில் இருவரிடமும் 'வேற்றுமை இல்லை' என மனிதனை ஒப்புக்கொள்ள வைக்கின்றன. இறுதியில் கனவென உணரும் கவிஞரின் கற்பனை வளம் சிறப்பானது.

கடுவன் ஒன்று வளமான வாழையின் பருத்த குலையிலுள்ள இனிய கனிகளையும் பழுத்துத் தொங்கும் சாரல் பலவின் சுளைகளையும் உண்கிறது. இயற்கையாகப் பாறையின் ஊடே பெருக்கெடுத்து ஓடும் தேன் கலந்த சுனைநீரைப் பருகுகிறது. தேன்கலந்த சுனைநீரைப் பருகிய மயக்கத்தால் வழக்கமாக ஏறும் சந்தனமரத்தின்மீது அதனால் ஏறமுடியவில்லை. வேறு வழியின்றி அம்மரத்தின் நிழலில் மலர்கள் வீழ்ந்து அமைத்திருக்கும் மணமிகு மலர்ப்படுக்கையில் துயின்று இன்பம் கொள்கின்றதாம். இங்ஙனம் அகநானூறு கடுவனது செயலை இயற்கையுடன் கற்பனை கலந்து படம்பிடித்துக் காட்டுவது என்னே உயரிய கற்பனை!

"கோழ்இலை வாழைக் கோள்முதிர் பெருங்குலை
ஊழுறு தீங்கனி உண்ணுநர்த் தடுத்த
சாரல் பலவின் சுளையொடு ஊழ்படுபு
பாறை நெடுஞ்சுனை விளைந்த தேறல்
அறியாது உண்ட கடுவன் அயலது
கறிவளர் சாந்தம் ஏறல் செல்லாது
நறுவீ அடுக்கத்து மகிழ்ந்து கண்படுக்கும்" (அகம் 2)

என்னும் அகப்பாடல் கவிஞர் சிங்கை முகிலனுக்கு வழிகாட்டியாக இருந்திருப்பதைக் கற்பார் தெள்ளிதின் உணரலாம்.

## முடிவுரை

கவிதை, உரைநடை, நாடகம், சிறுகதை, விடுகதை போன்ற அனைத்திற்கும் செவ்வியல் இலக்கியங்கள் நற்றாயாகவும் செவிலித்தாயாகவும் இருப்பதை அறியமுடிகிறது. தொல்காப்பியம் என்னும் ஒப்புயர்வற்ற நூல் சிற்றிலக்கியம் முதல் பேரிலக்கியம்வரை அனைத்திற்கும் வழியமைத்துச் சென்றுள்ளது. நூல், உரை, பிசி, முதுமொழி, மந்திரம் போன்ற அனைத்துக்கும் உரிய ஆணிவேரைத் தொல்காப்பியத்தில் காணலாம். இலக்கியங்களுள் அடிவரை உள்ளவற்றிற்கும் அடிவரை இல்லாதவற்றிற்கும் இலக்கணம் வகுத்துள்ளமையை அறியலாம். யாப்பு வகையைக் குறிப்பிடும்பொழுது

"பாட்டு உரைநூலே வாய்மொழி பிசியே
அங்கதம் முதுசொல்லோடு அவ்வேழ் நிலத்தும்"
(தொல். செய். 79)

என அடிவரையறை உள்ளவற்றை ஏழாகக் குறிப்பிட்டு அடிவரையறை இல்லாதனவற்றை ஆறு என்று குறிப்பிடுகின்றார்.

"எழுநிலத்து எழுந்த செய்யுள் தெரியின்
அடிவரை இல்லன ஆறென மொழிப"

(தொல். செய். 164)

அடிவரை இல்லாதன இன்னவை என்பதை

"அவைதாம்
நூலினான உரையி னான
நொடியோடு புணர்ந்த பிசியி னான
ஏது நுதலிய முதுமொழி யான
மறைமொழி கிளந்த மந்திரத் தான
கூற்றிடை வைத்த குறிப்பி னான" (தொல். செய். 165)

நூலாவது இலக்கணத்தையும் உரையாவது உரைநடையையும் பிசி என்பது விடுகதையையும் முதுமொழி என்பது பழமொழியையும் மந்திரம் என்பது மந்திர மொழிகளையும் குறிப்பு என்பது குறிப்பால் பொருள் உணர்த்துவனவற்றையும் குறிப்பன. நூலமைப்போடு மட்டுமன்றி உவமை, உருவகம், கற்பனை, சொல்லாட்சி, பாடுபொருள் போன்றவற்றிற்கும் செவ்வியல் இலக்கியங்கள் சாலை அமைத்து இலக்கியம் படைப்பார்க்கு வழிகாட்டிச் சென்றுள்ளன என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. செவ்வியல் இலக்கியங்களின் தாக்கம் இக்காலத்து இலக்கியங்களில் மட்டுமன்று வருங்காலத்து இலக்கியங்களிலும் இருந்தே தீரும் என்பது தெளிவு. செவ்வியல் இலக்கியங்களின் தாக்கமின்றி இலக்கியம் படைப்பதென்பது அரிதினும் அரிது.

# ஈழப்பெண் கவிஞர்களின் போர்க்குரல்: சங்க ஏற்பும் மீறலும்

முனைவர் வேல்முருகன்
இணைப்பேராசிரியர்
தமிழ்த்துறை
திருவையாறு.

ஈழத்தமிழ் இலக்கியத்தின் அறாத்தொடர்ச்சியாகவும் அதன் இன்னோர்கட்ட வளர்ச்சியாகவும் எண்பதுகளிலிருந்து புலம்பெயர் தமிழ் இலக்கியம் திகழ்கின்றது. மேற்கு ஐரோப்பிய நாடுகளான இங்கிலாந்து, பிரான்ஸ், ஜெர்மனி, சுவிஸ், நார்வே, இத்தாலி, டென்மார்க், நெதர்லாந்து போன்றவற்றிலும் வட அமெரிக்காவிலுள்ள கனடாவிலும் ஆஸ்திரேலியாவிலும் சுமார் எட்டு இலட்சத்திற்கும் மேற்பட்ட ஈழத்தமிழர்கள் புலம்பெயர்ந்து வாழ்ந்து வருகின்றனர். அவர்களின் வாழ்வு பல கலாச்சாரச் சூழலுக்குள் பண்பாட்டு மாற்றத்தை ஏற்படுத்தி வருகின்றது. இவ்வகையில் புலம்பெயர் இடத்திலிருந்து புலம்பெயர்ந்தோர், படைப்பிலக்கிய முயற்சிகளாக - கவிதை, சிறுகதை, நாவல் போன்றவற்றையும் கலை இலக்கிய முயற்சிகளாக - நடனம், நாட்டியம், சஞ்சிகைகள் – நூல்கள் வெளியிடுதல், ஒலி – ஒளி செயற்பாடுகளை நிகழ்த்துதல் முதலியவற்றையும் தமிழர்தம் அடையாளத்தைத் தக்கவைக்கும் கலாச்சாரச் செயற்பாடுகளாக விழாக்கள், பெயர்சூட்டல், வழிபாடுகள் முதலியனவற்றையும் செய்து காட்டி வருகின்றனர்.

1960களிலிருந்தே இலங்கையிலிருந்து ஈழத்தமிழர்களின் புலம்பெயர்வு ஆரம்பமாகிறது. அக்காலத்தில் மலேசியா, அமெரிக்கா, இலண்டன் போன்ற நாடுகளுக்கு என்று தொழில் நிமித்தமாக - ஆங்கிலக்கல்வி கற்கும் பொருட்டு அதிகம் புலம்பெயர்ந்தனர். ஆனால் எண்பதுகளுக்குப் பின்னர்ப் பெருமளவாகப் புலம்பெயர்ந்த தமிழர்களால் படைக்கப்படும் இலக்கியங்களே 'புலம்பெயர் இலக்கியம்' என்ற சொற்றொடருக்கு அர்த்தத்தை ஏற்படுத்தியதாகும். இன்னும் நுட்பமாகச் சொல்ல வேண்டுமானால் 1983 யூலைக் கலவரங்களின் பின்னர் இலங்கையிலிருந்து வெளியேறிய ஈழத்தமிழர்களின் புலப்பெயர்வே இங்கு முக்கியமானதாகும்.

புலம்பெயர்வு என்பது ஒரே அரசியல் பூகோள எல்லையை விட்டுப் பெயர்ந்து சமூக, அரசியல், பண்பாட்டுச் சூழ்நிலைகளால்

வேறுபட்ட பிரதேசத்தில் வாழ நேரிடுகிறவர்களைக் குறிக்கின்றது. இவ்வாறு அரசியல் சமூகப் பண்பாட்டு அம்சங்களில் பெரிதும் வேறுபட்ட நாடுகளில் புலம்பெயர்ந்து வாழ்பவர்களால் படைக்கப்படும் இலக்கியங்களையே இங்கு, 'புலம்பெயர் இலக்கியம்' அல்லது 'புலம்பெயர்ந்தோர் இலக்கியம்' என்ற சொற்றொடர் கொண்டு அழைக்கின்றோம்.

இதுவரை வெளிவந்துள்ள புலம்பெயர் படைப்புகளுள் கவிதைத் தொகுப்புகளே அதிகமானவை. புலம்பெயர்ந்த காலத்தில் 80களின் இறுதிவரை தாயக நினைவினையும் அவலத்தையும் பாடிக்கொண்டிருந்த கவிஞர்கள், தற்போது தாம் புலம்பெயர்ந்து வாழ்ந்து கொண்டிருக்கும் நாட்டின் சூழலைப்புரிந்து கொண்டு அந்நாட்டின் வாழ்வியலனுபவங்களையும் பாடத் தொடங்கியுள்ளனர்.

நார்வேயிலிருந்து சுவடுகள் பதிப்பகத்தால் வெளியிடப்பட்ட 'துருவச் சுவடுகள்' என்ற கவிதைத் தொகுப்பே புலம்பெயர்ந்தோர் மத்தியிலிருந்து வெளிவந்த முதலாவது கவிதைத் தொகுப்பாகக் கணிக்கப்படுகிறது. புலம்பெயர்ந்தோர் மத்தியிலிருந்து வெளிவந்த 'மறையாத மறுபாதி' என்ற கவிதைத் தொகுப்பு மிகுந்த கவனத்திற்குரிய பெண் கவிஞர்களின் கவிதைகளைத் தாங்கி வந்த தொகுப்பாகும். இதேபோல் பெண்களின் கவிதைகளை மட்டும் தாங்கி வெளிவந்த மற்றொரு தொகுப்பு 'சொல்லாத சேதிகள்'(1986) என்பதாகும். இத்தொகுப்பு யாழ்ப்பாணப் பெண்கள் ஆய்வு வட்டத்தால் வெளியிடப்பட்டது. ஊடறுவும் விடியல் பதிப்பகமும் இணைந்து 'பெயரிடாத நட்சத்திரங்கள்' என்ற பெயரில் ஈழவிடுதலைப் போராளிக் கவிஞர்களின் கவிதைகளைத் தொகுத்து 2011இல் வெளியிட்டுள்ளது.

இத்தகு ஈழப்பெண் கவிஞர்களின் கவிதைத் தொகுப்பினூடே இழையோடும் போர்க்குரல், தமிழ்ச் சங்க இலக்கிய - இலக்கண மரபு ஏற்பாகவும், மறுதலிக்கும் மீறலாகவும் அமைந்திருப்பதை அவதானிக்கலாம்.

சங்க காலத்தில் நிலவிய போர்ச்சூழலை – போர்முறையை - செவ்வியல் நூல்களான தொல்காப்பியம், புறநானூறு, பதிற்றுப்பத்து, ஆற்றுப்படை நூல்கள் பல, மதுரைக்காஞ்சி போன்றவை உணர்த்துகின்றன. போரால் நாடு அடைந்த சீர்கேட்டையும், மக்களின் துயரத்தையும் எடுத்துக்கூறும் செய்யுட்கள் இந்நூல்களில் பல உள. தமிழ்ச் சமூகத்தவர்களான, குறிப்பாக மூவேந்தர்களுக்கிடையேயும் சிற்றரசர்களுக்கிடையேயும் குறுநில மன்னர்களுக்கிடையேயும் நடைபெற்ற போர்ப்பதிவுகளாக இந்நூலில் பல பாடல்கள் உள்ளன. அந்நூல்கள் அக்காலத் தமிழ்நாட்டு அரசியல் நிலையில் காணப்பட்ட 'உள்நாட்டுப் போர்கள்' என்ற குறைபாடு புலப்படும். இதே உள்நாட்டுப் போர்தான் இலங்கையில் தமிழர்களுக்கும் சிங்களவர்களுக்கும் இடையே அறுபதுகளில் தொடங்கி, எண்பதுகளில் உச்சகட்டத்தை

அடைந்தது. இதன் காரணமாக இலங்கையிலிருந்து புலம்பெயர்ந்து அகதிகளாகத் தமிழர்கள் உலகின் பல்வேறு நாடுகளுக்குச் சென்றனர். அவ்வாறு சென்ற ஈழத்தின் புலம்பெயர் தமிழர்கள் தங்களின் பூர்வீகத்திலிருந்து கொண்டு, தங்களின் சொல்லொண்ணாத் துயரங்களை வாய்மொழியாகவோ, எழுத்து மொழியாகவோ எடுத்துக் கூறுதற்கு வழியில்லாமல் தவித்த உணர்வுகளைப் புலம்பெயர்ந்த இடத்திலிருந்து எழுதினர். அவ்வகையில் எழுதிய ஈழத் தமிழர்களின் ஆண் - பெண் மனக் குமுறலாகத் தாயக நினைவினையும் அவலத்தையும் பார்க்க முடிகிறது.

ஈழப்பெண்கவிஞர்களின் போர்க்குரல்: இலத்தின் அமெரிக்கர் – ஆப்பிரிக்கப் பெண் போராளிகளின் கவிதைத் தொகுதிகள் உலக மொழிகளில் நிறைய வெளியாகி இருக்கின்றன. மிகச்சிறு வட்டங்களில் - குறுகிய சுற்றில் மட்டுமே இதுவரை இருந்துவந்த ஈழ விடுதலைப் பெண் போராளிகளின் கவிதைகள் முதன்முதலாக ஒரே தொகுப்பாக, 'பெயரிடாத நட்சத்திரங்கள்' எனும் பெயரில் வெளிவந்திருக்கின்றன. இதனைத் தொடர்ந்து, அ. மங்கை தொகுத்த ஈழப்பெண் கவிஞர்களின் கவிதைகள் தொகுப்பாக, 'பெயல் மணக்கும் பொழுது' என்ற தலைப்பில் மாற்று வெளியீடாக 2007இல் வெளிவந்துள்ளது. இவற்றிற்கெல்லாம் முன்பாக வெளிவந்த, 'மறையாத மறுபாதி', 'சொல்லாத சேதி' என்பன ஈழப்பெண் கவிஞர்களின் கவிதைத் தொகுப்புகளாக வெளிவந்துள்ளன. இக்கவிதைகளில் பெரும்பாலானவற்றில் தாயக நினைவினையும் அவலத்தையும், பெண்களுக்கெதிரான ஆணிய அடக்குமுறையையும், புலம்பெயர்ச் சூழலின் புதிய அனுபவத்தையும், அரசியல் விமர்சனத்தையும் காண முடிகிறது.

குறிப்பாக, 'பெயரிடாத நட்சத்திரங்கள்' கவிதைத் தொகுப்பைப் பற்றிக் குறிப்பிடுகையில், இத்தொகுப்பு, 'பெண் போராளிகளின் கவிதைகள்' என்றும் 'போர்ப்பாடல்கள்' என்றும் 'ஈழத் தமிழச்சிகளின் வீர வாழ்க்கை' என்றும் குரல் கொடுத்துள்ளனர். இன்னும் சற்று விரித்துச் சொல்ல வேண்டுமெனில், 'போர்ப் பகைப் புலத்தில் இருந்த பெண் கவிஞர்களின் வரிகளாக உயிரின் வாசத்தோடும் உணர்வு கொப்பளிக்கும் வார்த்தைகளோடும் வந்திருக்கிறது, பெயரிடாத நட்சத்திரங்களின் கவிதைகள். பெண் படைப்புகளுக்கு இருக்கக் கூடிய தனித்துவத்தோடு எளிய மாந்தர்களும் புரிந்துகொள்ளக்கூடிய எளிமையான வார்த்தைகளோடு தாய்மையுணர்வு முதல் தாயக நேசிப்பு வரையான கவிதைகளைக் கொண்டிருக்கிறது', 'பெயரிடாத நட்சத்திரங்கள்' என்று இக்கவிதைத் தொகுப்பின் மைய நோக்கினைக் குறிப்பிட்டுக் கூறலாம்.

மறையாத மறுபாதி', 'சொல்லாத சேதி' போன்ற பெண் படைப்பாளிகளின் தொகுப்புகள் வரிசையில் போர்க்காலப்

படைப்புகளில் பெண்களின் குரல்களாக வந்திருக்கும் 'பெயரிடாத நட்சத்திரங்கள்' ஈழத்து இலக்கியப் போக்கில் கவனத்திற்கொள்ள வேண்டிய தொகுப்பாகும். காரணம், இந்நூலின் முன்னுரையில், 'பெண்களுக்காக வரையறுக்கப்பட்ட பல கலாச்சாரத் தடைகளை மீறிப் போர்க்களம் காணல், தலைமைத்துவப் பண்புகளை வளர்த்துக் கொள்ளல், உளவு பார்த்தல், பல்வேறுபட்ட நவீன இயந்திரங்களை இயக்குதல், அவற்றைப் பழுது பார்த்தல், சிக்கலான விடயங்களைத் தீர ஆராய்தல், முடிவுகளை எடுத்தல், இரவுக் காவல்களிலும் பணிகளிலும் ஈடுபடுதல், எல்லைக்காவல் - தீவிர உடற்பயிற்சி - இரகசியங்களைப் பேணுதல், வரைபட வாசிப்பில் தேர்ச்சி எனப் பல புதிய பரிமாணங்களை எட்டியிருக்கிறார்கள்' என்று இக்காலத்தில் இருந்த பெண்களின் புதிய எழுச்சியைப் போர்க்காலத்தின் பதிலாகக் குறிப்பிடுகின்றனர், தொகுப்பாளர்கள்.

ஊடறுவும் விடியல் பதிப்பகமும் இணைந்து வெளியிட்டுள்ள இத்தொகுப்பில் 26 கவிஞர்களின் 70 கவிதைகள் உள்ளன.

பெண் படைப்புகளின் வரிசையிலே போர்க்காலப் படைப்புகளுக்கு வலிமைசேர்க்கக்கூடிய தொகுப்பாக இது அமைகிறது. இத்தொகுப்பில் வந்துள்ள கவிதைகள் போர்க்காலத்தில் மக்கள் எதிர்கொள்ளக்கூடிய அவலங்களையும் அந்த அவலங்களைத் தீர்ப்பதற்குப் புறப்பட்டவர்களின் உணர்வுகளையும் பேசுவனவாக உள்ளன. போராடுபவர்களின் பக்கம் நின்றுகொண்டு அதற்கான நியாயப்பாடுகளைப் பேசுகின்றன. ஒட்டுமொத்தமாக இத்தொகுப்பில் உள்ளடங்கியுள்ள கவிதைகளைப் பின்வருமாறு வகைப்படுத்தலாம்.

1. போரினால் மக்கள் படும் அவலங்களைப் பேசுதல்.
2. பெண் அடக்குமுறை சமூகத்தின் போலியை எதிர்த்தல்.
3. விடுதலை வேட்கையைப் பாடுதல்.
4. வீடு, உறவு இளமைக்காலம் ஆகியவற்றை மீட்டுப் பார்த்தல்.
5. உலகு பற்றிய பார்வை.

இந்தப் போர் மக்களை எவ்வாறெல்லாம் அலைக்கழிக்கிறது என்பதனைப் பல பெண்கவிஞர்கள் பாடியுள்ளனர். காலங்காலமாக வாழ்ந்த பூர்வீகத் தேசத்தைவிட்டு ஏதிலிகளாக அலைந்துலைந்து வாழவேண்டிய நிலையினையும், போரால் இழந்துவிட்ட உயிர்கள் பற்றியும் பலவிதத்திலும் போரின் சுரங்கள் மக்களின் மீது தொடர்ந்து கொண்டிருக்கும் அவல நிலையினையும் பாடுகின்றனர்.

'அம்மா கிருஷாந்தி!
வலிகாமத்தில் உன்
வாழ்வு பறிக்கப்பட்டிருக்கிறது

உயிர்வாழும் உரிமை மறுக்கப்பட்டிருக்கிறது.
நினைவிருக்கிறதாம்மா
கொஞ்ச நாட்களுக்கு முன்
கிணற்றுக்குள் தவறி விழுந்த ஆசிரியையை
இராணுவம் காப்பாற்றியதாம்
இப்போது அதே இராணுவம்தான்
உரும்பிராயில் ரஞ்சனியை
கோண்டாவிலில் ராஜினியை
கைத்தடியில் உன்னை
காடைத்தனம் புரிந்து
புதைத்திருக்கிறது. (ஆதிலட்சுமி ப.56,57)

என்ற வரிகள் கிருஷாந்தி வன்புணர்வு செய்யப்பட்டு, கொல்லப்பட்ட சம்பவத்தை நினைவூட்டுகின்றன. மக்களை ஒடுக்குவதற்குப் பாலியல் ரீதியான அடக்குமுறை ஓர் ஆயுதமாக அடக்கப்படுபவர்களால் மேற்கொள்ளப்படுகிறது. இது மக்களுக்கு மிகுந்த அச்சத்தையும் இயலாமையையும் ஏற்படுத்துகிறது.

ஒரு சாதாரணக் குடிமகன் என்ன நினைத்திருப்பான். தானும் தன் வீடும் தன் பிள்ளையும் தோட்டமும் என்று ஒரு குடிலில் வாழ்ந்து, மனிதர்கள் சாவின் எல்லை வரை விரட்டப்படுகிறார்கள். இது இன்னொரு கவிஞரியிடம்,

‘எவருக்கென்ன துரோகம் செய்தேன்,
ஏனிந்த அவலம் எனைச் சூழ்ந்தது?
உயிர் வாழ்வதன்றி வேறொன்றறியா
எம் உறவுகள்
மண்ணோடு போக
உளம் புண்ணாகி உடல் சோர்ந்து
வீதியிறங்கி
வியர்வைத் துவாரங்களில் இரத்தம் கசியக்
கதறியழுது அலையும் வாழ்வு
ஏன் எனக்கு வந்தது?
என்னைப் போலவே
இன்னும் சிலரின் ஆன்மாவும்
இப்படிக் கதறக் கூடும்
நான் உரத்துக் கத்துவேன்
புதைக்கச் சொன்னவர் எவரோ
அவரின் நிம்மதியழியும் வரைக்கும்
நான் கத்துவேன்
ஆதிக்கக் கோட்டைகள்
உதிரும் வரையில்
எனது குரல் உயரும்’ (மலைமகள் ப.92-94)

இவ்வாறான துன்பங்கள் தொடர்வதற்குத்தான் காரணங்கள் என்ன? அந்தத் துன்பத்தை, வலிமை பெற்றவர்கள் கூட்டாக எளியவர்கள் மீது திணிக்கிறார்கள் என்பதனையும் இந்தக் கவிஞைகள் பாடுகின்றனர். மக்களின் துன்பம் தொடர்வதற்குப் படிப்படியாக மாறிக்கொண்டிருந்த அரசியல் நிலைப்பாடுகள்தாம் காரணம் என்கிறார்கள்.

ஆட்சியாளர்களுடன் கைகுலுக்கிக் கொண்டு வந்த வல்லரசுகள் மக்களைக் கொன்று குவிக்க உதவியமையைக் கவிதையொன்று சுட்டிக்காட்டுகிறது.

'அன்று
உரிமைப் பசிக்கு
உதவி கோரி நின்றோம்
உலகநாடுகள் முன்.
தமிழன்
வயிற்றுப் பசியை
வாதாட்டத்திற்கு வைத்தது
வல்லரசு.

அனைத்து நாடுகளும்
அண்ணாந்து பார்த்து நிற்க
உயரத்தில் விழுந்தன
உணவுப் பொட்டலங்கள்
ஒரு தலைப்பட்சமாய் உள்ளே வந்த வல்லரசால்
அரிசிப் பொதிகள் விழுந்த
அதே குச்சொழுங்கைகளில்
குப்பெனப் பீறிட்டது குருதியாறு' (கஸ்தூரி ப.74,75)

என்று வரலாற்றில் நடந்த ஓர் அவலத்தை மிகத் தத்ரூபமாகக் கண்முன் நிறுத்துகிறார் கவிஞர்.

இவை தவிர மலையக மக்களின் பிரச்சினைகளுடன் அவர்களின் உழைப்புச் சுரண்டப்படுதல் பற்றிய கவிதையும் இத்தொகுப்பில் உள்ளமை கவனிக்கத்தக்கது. எங்கள் சொந்தச் சகோதரர்கள் எவ்வாறு சுரண்டப்படுகின்றனர்?

சுரண்டல் தராசுகளில்
கொழுந்துக் கூடைகளை
கொழுவிவிட்டு
தேனீருக்காக ஏங்கும்
இத் தேயிலைச் செடிகள்
அக்கினியாய் அணிவகுத்து
அவலங்களை ஏரிப்பதெந்நாள்?' (கஸ்தூரி ப.78)

என்று கொழுந்துக் கூடைகள் பற்றி எழுதுகிறார்.

இன்னொரு கவிதை புலம்பெயர்ந்து சென்ற ஈழமகன் ஒருவனைப் பற்றிய சித்திரத்தை அழகாகத் தருகிறது. புலம்பெயர்ந்து செல்லும்முன் ஓர் ஆண்மகன் வீட்டில் இருந்த நிலை, புலம்பெயர்ந்தவர்கள் அங்கு எதிர்கொள்கின்ற வாழ்க்கை முரண்கள், என்று பல விடயங்களைப் பாடுகிறார்.

வீட்டில் சாப்பிட்ட தட்டைக் கழுவாதவன் ஓட்டலில் தட்டுக் கழுவிச் சம்பாதித்துத் தன் உறவுகளுக்கும் தாயகத்திற்கும் உதவுவதையும் சுட்டிக்காட்டுகிறார். போர், மனிதர்களை எவ்வாறெல்லாம் மாற்றி விடுகிறது என்பதற்கு இக்கவிதை நல்ல உதாரணம்.

கழிப்பறைக்கு நீர் சுமக்கவும் மறுத்த
தம்பியின் வாழ்வு
குளிர் பனிக்குள்
கழிப்பறைத் தூய்மையிலே கரைந்தது.
திண்ட கோப்பைக்கூடக்
கழுவத் தெரியாத பிள்ளை
ரெஸ்ரோண்டில்
அதைக் கழுவிப் பிழைத்தே
காசு அனுப்பியது.
இடப்பெயர்வு, இன அழிப்பு
சீதனம், அவல வாழ்வு
யாவும் துரத்தியதால்
உலக திசையெங்கும் பரந்த
பிள்ளைகளின் பிள்ளைகள்
தமிழ் தெரிந்தும் தெரியாமலும்
ஊர் உறவுகள் அறியாமலும்
வாழ்கின்ற வாழ்வறிந்து
தவிக்கிறது தாய் மண்' (அம்புலி ப.28,29)

என்று இன்னும் பல சம்பவங்களையும் குறிப்பிடுகிறார். உறவைப் பிரிந்துபோன ஏக்கம், தனிமைவாழ்வு, மொழிக்கலப்பு ஆகியனவும் பேசப்படுகின்றன.

'தூரவிருந்து குரலை உயர்த்தி
கரத்தையிணைத்துத்
துணையிருக்கும் உறவுகள்'
கரங்களால் ஒன்றுபட்டிருங்கள்
குரல்களால் இணைந்திருங்கள்
மனங்களால் அருகிருங்கள்
தமிழீழத் தாயகம் எங்களனைவருக்கும்
சொந்தமானது, உரிமையானது
அதுவே அழகானது!' (ப.30.31)

எனவும் புலம்பெயர்ந்துபோன ஈழத்தமிழ் மக்களை நன்றியுடன் நினைக்கின்ற கவிதையாகவும் இது அமைந்திருக்கின்றது.

விடுதலை வேட்கையை வெளிப்படுத்தும் கவிதைகள் என்ற வகையில் பார்ப்போமானால் போராளிகளின் விடுதலையுணர்வு, அவர்களின் தியாகம் அவர்களிடம் இருக்கக்கூடிய நம்பிக்கை, எதையும் ஏற்றுக்கொள்ளக்கூடிய தற்துணிவு என்பன இக்கவிதையில் பேசப்படுகின்றன.

ஓராயிரம் விழிகளின் உறக்கத்திற்காகத் தங்கள் காவல் முக்கியம் என்று அம்புலி எழுதுவார். இரவு, பகல், வெயில், மழை என்றும் பாராமல் அவர்களின் காத்திருப்பும் கவலிருப்பும் குறிப்பிடப் படுகிறது. கொள்ளி வைக்க இருந்த பிள்ளையும் போய்விட்டதே என்று கலங்கும் தந்தைக்குத் தாயினூடாகப் பதிலுரைக்கும்போது இறந்த பின்னர் அடக்கம்செய்யும் மயானத்திற்காகவும்தான் நான் காவலிருக்கிறேன் ('அப்புறமாய் வருகிறேன்' – ரூபி மார்க்கிரட் ப.108,109) என்று பாடுகிறார்.

'ஓர் அழகிய காலையை
உனக்குக்
காட்ட முடியாத
வசந்த காலத்தில்
விளையாட முடியாத
பாலைவன நாட்களையே
உனக்குப் பரிசளிக்கிறேன்' (அம்புலி ப.25)

என்று ஒரு தாயின் உணர்வுநிலையில் இருந்து கொண்டு குழந்தைக்குச் சொல்லும் வரிகளாக அவை அமைந்து விடுகின்றன.

இதேபோன்று வானதியின் எழுதாத கவிதை விடுதலை உணர்வையும் அதனைத் தொடர்ந்து முன்னெடுத்துச் செல்லவேண்டும் என்ற எதிர்பார்ப்பினையும் ஊட்டுகின்ற கவிதையாக அது அமைந்திருக்கிறது.

'சீறும் துப்பாக்கியின் பின்னால்
என் உடல்
சின்னாபின்னப்பட்டுப் போகலாம்
ஆனால் என்
உணர்வுகள் சிதையாது
உங்களைச் சிந்திக்க வைக்கும் அது
அப்போது
எழுதாத என் கவிதையை
எழுதுங்களேன்' (வானதி ப.64)

என்று எழுதுகிறார்.

இதனை நாதினி என்ற இன்னொரு கவிஞை எழுதாதுபோன உன் கவிதையை எழுதுவதற்காக உயிரைக் கோலாக்கி உதிரத்தை மையமாக்கி அணிவகுத்து நிற்பவர்களைச் சுட்டிக்காட்டுகிறார்.

இவர்களிடம் உலகு பற்றிய பார்வையும் உள்ளமை மற்றொரு சிறப்பம்சமாகும். குறிப்பாக, மூன்றாம் உலக நாடுகளில் ஒன்றான ருவாண்டாவில் நடந்த இனவழிப்பை இலங்கையில் நடந்த இனவழிப்புடன் ஒப்பிட்டுப்பாடுகின்றனர்.

'மொழிவேறு என்றாலும்
எங்களுக்கும் உங்களுக்கும்
மூச்சு ஒன்றுதானே
அகதி முகாம் வாசலிலே
அம்மாவைத் தேடு என்று
ஐ. நா. கூறியதாமே
யாரைப் பார்த்தாலும்
அம்மாவாய்த் தெரிகிறதா?
சின்ன வயதில் உங்கள் தோள்களிலே
சிலுவையை ஏற்றி வைத்தது யார்?' (ஆதிலட்சுமி ப. 55)

தாயகம், வீடு, உறவு பற்றிய உணர்வுநிலைகள் மிக அழகாக வந்துள்ளன. 'அன்பான அம்மா' என்ற பாரதியின் கவிதையில் சிறுவயது நினைவுகள் வீடு மற்றும் கிராமத்து நினைவுகள் வருவதனைக் காணலாம்.

இளமை நினைவுகள், பள்ளிக்கூட வாழ்க்கை அதன்பின்னர்ப் பல நண்பர்களைத் தாம் இழந்துவிட்டமை, கால் இழந்து விட்ட நிலையிலே அசையமுடியாது மரத்துப்போனது போல் இருக்கின்ற நிலை எனக் கவிதையின் போக்குப் பற்றி மேலும் குறிப்பிடலாம். அம்மா பற்றிய கவிதைகளும், அம்மா பற்றிய படிமமும் பல கவிஞைகளின் கவிதைகளில் அற்புதமாக வந்துள்ளமை கவனத்திற் கொள்ளத்தக்கவை. தாயின் அன்பும் அவளின் அரவணைப்பும் துன்பங்களைத் தாங்கிக்கொண்டு அவள் தங்களை வளர்த்து ஆளாக்கியமையும் இக்கவிதைகளில் பாடப்படுகின்றன. மேலும் தமது உணர்வுகளைத் தாயை முன்னிறுத்திப் பாடும் கவிதைகள் அதிகமாக உள்ளமையும் கவனிக்கத்தக்கது. தந்தையிடம் கூறவேண்டியதைத் தாயிடம் கூறுதல், அவளை விட்டுப் பிரிந்து வந்த சோகத்தைக் கூறுதல் என்பன இங்கு முக்கியமானவை.

'அன்பான அம்மாவே
நான் உன்னை
அளவு கடந்து நேசிக்கிறேன்
அதனினும் பார்க்க
நான் ஓடி விளையாடிய

என் வீட்டு முற்றத்தை
நான் கால் பதித்த
ஒற்றையடிப் பாதைகளை
செம்பாட்டு மண்படிந்த என்
தெருக்களை
சணல் பூத்துக் குலுங்கும் என் தேசத்தை
தோட்ட வெளிகளை
இப்படி இப்படியாய்
எத்தனையோ' (பாரதி ப.116,117)

நிறைவாக, ஈழப்போர்க்காலப் படைப்புகளில் பெண்களின் குரல்களாகப் பதிவாகியிருக்கும் 'பெயரிடாத நட்சத்திரங்கள்' எனும் கவிதைத் தொகுப்பு, இதற்கு முன்னைய – பின்னைய ஈழப்பெண் கவிஞைகளின் கவிதைத் தொகுப்புகளிலும், ஈழத்து இலக்கியப் போக்கிலும் கவனத்திற் கொள்ள வேண்டிய தொகுப்பாகும். காரணம், 'பெண்களுக்காக வரையறுக்கப்பட்ட பல கலாச்சாரத் தடைகளை மீறிப் போர்க்களம் காணல், தலைமைத்துவப் பண்புகளை வளர்த்துக் கொள்ளல், உளவு பார்த்தல், பல்வேறுபட்ட நவீன இயந்திரங்களை இயக்குதல், அவற்றைப் பழுது பார்த்தல், சிக்கலான விடயங்களைத் தீர ஆராய்தல், முடிவுகளை எடுத்தல், இரவுக் காவல்களிலும் பணிகளிலும் ஈடுபடுதல், எல்லைக்காவல் - தீவிர உடற்பயிற்சி - இரகசியங்களைப் பேணுதல், வரைபடவாசிப்பில் தேர்ச்சி எனப் பல புதிய பரிமாணங்களை எட்டியிருக்கிறார்கள்' என்று இக்காலத்தில் இருந்த பெண்களின் புதிய எழுச்சியைப் போர்க்காலத்தின் பதிலாகக் குறிப்பிடும் நோக்குடைத்து, இத்தொகுப்பு.

'பெண் போராளிகளின் கவிதைகள்' என்றும் 'போர்ப்பாடல்கள்' என்றும் 'ஈழத் தமிழச்சிகளின் வீர வாழ்க்கை' என்றும் அவதானிக்கும் இக்கவிதைத் தொகுப்பு, 'போர்ப்பகைப் புலத்தில் இருந்த பெண் கவிஞைகளின் வரிகளாக உயிரின் வாசத்தோடும் உணர்வு கொப்பளிக்கும் வார்த்தைகளோடும்' வந்திருக்கிறது. பெண் படைப்புகளுக்கு இருக்கக் கூடிய தாய்மையுணர்வு முதல் தாயக நேசிப்பு வரையான கவிதைகளைக் கொண்டிருக்கிறது.

சங்க காலத்துப் போர்ப்பாடல்களை உள்ளடக்கிய தொகுப்பாக விளங்குவது, புறநானூறு (பிறவும் உள). இந்நூல் உள்நாட்டுப் போர்ப்பாடல்களைக் கொண்டது. இப்போர்ப்பாடல்கள் 'ஓரினத்தைச் சேர்ந்த மூவேந்தர்களுக்குள்ளும் – சிற்றரசர்களுக்குள்ளும் – குடிகளுக்குள்ளும் தான்' என்னும் உள்ளுணர்வின் உந்துதலால் நிகழ்ந்த மண்ணுரிமைப் போர் எனலாம். இதன் வெளிப்பாடுதான், 'குழவி இறப்பினும், ஊன்தடி பிறப்பினும், ஆள் அன்று என்று வாளின் தப்பார்' (புறம்.74) – என்ற போர்க்கொள்கை உருவாக்கப்பட்டது

மேலும், கெடுக சிந்தை கடிது இவள் துணிவே் ஒரு மகன் அல்லது இல்லோள், செருமுகம் நோக்கிச் செல்க, என விடுமே! மூதின் மகளிராதல் தகுமே' (புறம்.279) - எனப் பெண்ணுக்கு மறமாண்பு கற்பிக்கப்பட்டது.

மொழியாலும் இனத்தாலும் வேறுபட்ட இனத்தவர்களான தமிழர் – சிங்களவர், இருவேறினத்தவரிடையே நடைபெற்ற போர்க்குரலாகப் ஈழப்பெண்போராளிகள் வடித்த கவிதைத் தொகுப்பினில் இழையோடு வதாகத் தாயக நேசிப்பினூடே தாய்மண், தாய்மொழி, வாழ்வாதார அரசுரிமை, கலாச்சார உரிமை போன்றவற்றை மீண்டும் பெறவேண்டும் என்ற ஏக்கமும் இவையெல்லாவற்றையும் புகலிடத்தினில் மறைத்து, புகலிடச் சூழலுக்கேற்ப வாழும் நிலையினை எண்ணிய மனப்புழுக்கமும் போர்க்காலத்தினில் பாதுகாப்பு என்ற போர்வையில் தங்களது உடலைப் பங்கப்படுத்திய ஈரமில்லாப் பிறநாட்டு இராணுவத்தினரின் வன் புணர்வினைப் பெண்மொழியில் வெளிப்படுத்துவதும் ஊடாடுகின்றன.

## துணை நூல்கள்


பெயரிடாத நட்சத்திரங்கள், ஊடறு விடியல் வெளியீடு, விடியல் பதிப்பகம், கோயம்புத்தூர் – 15, ஜூலை, 2011.

மங்கை, அ. (தொ.ஆ)., பெயல் மணக்கும் பொழுது(ஈழப் பெண் கவிஞர்கள் கவிதைகள்), மாற்று வெளியீடு, சென்னை–94, மே, 2007.

தமிழவன், (தொ.ஆ)., ஈழத்தின் புதிய தமிழ்க் கவிதைகள், காவ்யா வெளியீடு, சென்னை – 24, 2005.

வேலுப்பிள்ளை, ஆ., தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், குமரன் புத்தக இல்லம், சென்னை – 26, மீளச்சு-2010.

Kathiyaalkal.blogspot.in

www.globaltamilnews.net

www.ta.wikipedia.org

www.penniyam.org

www.vallinam.com

# அமெரிக்கப் பெண்படைப்பாளி காஞ்சனா தாமோதரனின் படைப்புகளில் செவ்வியல் பண்புகள்

முனைவர் கோ. விசயராகவன்
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை 600 113

யாதும் ஊரே யாவரும் கேளிர் என்ற புறநானூற்றுப் பாடலின் தொடர்களுக்கேற்பத் தமிழர்கள் உலகம் முழுவதிலும் பரந்துபட்டு வாழ்ந்து வருகின்றனர். தமிழர்களின் இப்புலம்பெயர்வினை வ.ஐ.ச. ஜெயபாலனின் கவிதை பின்வருமாறு பதிவு செய்கிறது.

யாழ் நகரில் என்பையன்
கொழும்பில் என் பெண்டாட்டி
வன்னியில் என்தந்தை
தள்ளாத வயதினிலே
தமிழ்நாட்டில் என்அம்மா
அள்ளம் பிராங்போட்டில்
ஒரு சகோதரியோ பிரான்ஸ் நாட்டில்
நானோ
வழிதவறி அலாக்கா வந்துவிட்ட ஒட்டகம்போல்
ஒஸ்ஸோவில்
என்ன நம் குடும்பங்கள்
காற்றில் விதிக்குரங்கு கிழித்தெறியும்
பஞ்சுத் தலையணையா?

இக்கவிதை வரிகள் புலம்பெயர்த் தமிழர்களின் வாழ்வியலைப் படம்பிடித்துக் காட்டுவதாக அமைகின்றன. புலம்பெயர்த் தமிழர்கள் தங்களின் இன்ப, துன்பங்களைத் தமது படைப்புகளில் புலம்பெயர்ந்த நாடுகளில் இருந்து வெளிப்படுத்தி வருகின்றனர். தமிழகத்திலிருந்து புலம்பெயர்ந்து அமெரிக்காவில் வாழும் காஞ்சனா தாமோதரனின் படைப்புகள் இவ்வாய்வுக் கட்டுரைக்கு ஆய்வுப் பொருளாக எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன.

## காஞ்சனா தாமோதரன்

காஞ்சனா தாமோதரன் நெல்லையில் பிறந்து வளர்ந்தவர். அவர் சென்னைத் தொழில் நுட்பவியல் பல்கலைக் கழகத்தில் பொறியியல் பட்டம் பெற்று அமெரிக்காவில் பன்னாட்டு நிறுவனங்களில் உயர் அதிகாரியாகப் பணியாற்றியவர். தன் கணவர், மகளுடன் வாஷிங்டனில் வசித்து வருகின்றார். முப்பது வருட அமெரிக்க வாழ்க்கைக்கு ஊடே தமிழ்ச் செவ்விலக்கியத்தைப் பயின்று தன் படைப்பிலக்கியங்களைப் படைத்து வருகின்றார். இவர் வரம் (சிறுகதை தொகுப்பு), இக்கரையிலே (நாவல்), மரகதத்தீவு (குறுநாவல்), பூமித் திண்ணிகள் (கட்டுரைத் தொகுப்பு) ஆகியவற்றைப் படைத்துள்ளார். குறிப்பாக இவ்வாய்வு காஞ்சனா தாமோதரனின் படைப்புகளான வரம் எனும் சிறுகதைத் தொகுப்பையும் மரகதத்தீவு எனும் குறுநாவலையும் எடுத்து, அவற்றிலுள்ள செவ்வியல் பண்புகளான உணவுப் பண்பாடு, இறைவழிபாடு, கற்புநெறி ஆகியவற்றை இனங்காணுவதை நோக்கமாகக் கொண்டுள்ளது.

## தமிழர் செவ்வியல் பண்புகள்

தமிழர் பண்பாடு நமக்கு மிகத் தொன்மையானதும் இன்றும் நீடிக்கக் கூடியதுமான ஒரு சிறந்த பண்பாடும், நாகரிகமும், சிறப்பும் உடையது. ஏழாயிரம், எட்டாயிர வருடப் பாரம்பரியத் தொன்மை உள்ளது. நம்முடைய ஆசாரங்கள், நம்பிக்கைகள், சமயச் சடங்குகள், இறைவழிபாடு இவை எல்லாமே நம்முடைய மண்ணின் வேர்கள். செவ்வியல் என்ற பதத்திற்குத் திருந்திய, மேன்மை அடைந்த, உயர்ந்த, நாகரிகமடைந்த என்று பொருள் கொள்ளப்படுகிறது.

## இறை வழிபாடு

தமிழ் இனம் நாகரிக மேன்மையடைந்த இனமாக இருந்து வருவதற்கு அவர்களின் கட்டுப்பதடான வாழ்க்கை முறையும் இறைவழிபாட்டுச் சிந்தனைகளும் மிக முக்கியச் சான்றாதாரங்களாக உள்ளன. தமிழர் வழிபாட்டில் சிறுதெய்வ வழிபாடு, பெருந்தெய்வ வழிபாடு என வகைப்படுத்தப்படுகின்றன. தெய்வம் உலாவரும் காட்சியினைக் கண்டு வணங்குவதற்காகச் சங்கப் பெண்கள் கூடியிருந்தனர் என்பதனை மதுரைக்காஞ்சிப் பாடல் கீழ்வருமாறு வருணிக்கின்றது.

**அணங்கு வீழ்வு அன்ன பூந்தொடி மகளிர்**
**மணம் கமழ் நாற்றம் தெருவுடன் கமழ**
**ஒண் குழை திகழும் ஒளி கெழு திருமுகம்**
**திண் காழ் ஏற்ற வியல் இரு விலோதம்**
**தெண் கடற் திரையின் அசைவளி புடைப்ப**
**நிரைநிலை மாடத்து அரமியம் தோறும்**
**மழைமாய் மதியின் தோன்றுபு மறைய**

(மதுரைக்காஞ்சி. 446-452)

தெருவில் தெய்வம் உலாவரும் காட்சி உண்டு என்பது மாடங்களின் மேலிருந்து விழாக்காணும் மகளிர் கைக்கூப்பி வணங்குதலால் பெறப்படும். பூண் அணிந்த மாதர் நல்லார் புழுகு முதலியவற்றின் மணம் தெருவெல்லாம் பார்க்க மேனிலத்திலே இருந்து தொழுகின்றனர். தெருக்களிலே இறைவன் முன்பு நீண்ட கொடித் தண்டுகளில் பெருங்கொடிகளைக் கட்டி ஏந்தி வருகின்றனர். காற்று எழுந்து வீசுவதனால் திரைச் சீலைகள் அசைந்தாடுகின்றன. இதனால் நிலா முற்றங்கள் தோறும் நின்று விழாக் காணும் மகளிர் மஞ்சில் புகுந்து செல்லும் சந்திரன் போல் ஒருகால் தோன்றி ஒருகால் மறைந்து காணப்படுகின்றனர்.

தமிழர்கள் தாங்கள் செல்லுமிடங்களுக்கெல்லாம் தங்களது தெய்வங்களையும் எடுத்துச்செல்வது வழக்கம். அவ்வகையில் அமெரிக்காவில் சிறுதெய்வங்களுக்கும் பெருந்தெய்வங்களுக்கும் கோயில்களைக் கட்டியுள்ளனர். அதில் முருகன், விநாயகர், சிவன், பெருமாள் கோயில்கள் குறிப்பிடத்தக்கன. சங்கப் பெண்களைப் போன்றே அமெரிக்காவில் புலம்பெயர்ந்து தமிழ்ப்பெண்களும் பூச்சூடி, பொட்டிட்டு, சீலையணிந்து தெய்வத்தை வணங்குவதையும், கலாச்சார வழிபாடும் ஆசிரியரின் படைப்பிலக்கியங்களில் சுட்டப்பட்டுள்ளன.

சிக்காகோ வெங்கடாசலபதி கோயில்
பூஜையில் பட்டுப்புடவைத் திருமதிகள் கூட்டம் (வ., ப. 59)

இவ்வரிகளின் மூலம் அமெரிக்காவில் வாழும் தமிழர்கள் கோயிலுக்குச் செல்வதை வழக்கமாகக் கொண்டுள்ளனர் என்பதை அறிய முடிகிறது. மேலும் கோயில்கள் அம்மக்களுக்குத் தம் இனத்தவரோடு சேர்ந்து பழகும் வாய்ப்பும், தங்கள் எண்ணங்களையும், கருத்துகளையும் பகிர்ந்துகொள்ளும் இடமாக அமைந்துள்ளன. இங்கு அவர்கள் ஒன்றுகூடித் தங்கள் வீட்டு விசேஷங்களுக்கும், திருவிழா போன்றவை நடத்தவும் முடிவெடுக்கும் இடமாகவும், மனச்சாந்தி பெறும் இடமாகவும் உள்ளது. புலம்பெயர்ந்தாலும் தங்கள் கலாச்சாரப் பழக்கவழக்கத்தை விட்டுக் கொடுக்காமல் அந்நாட்டினரோடு ஒற்றுமையுடன் வாழ்வதாகச் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

**உணவு பண்பாடு**

பழந்தமிழர் அவர்கள் வாழும் திணை நிலங்களுக்கேற்ப வகுக்கப்பட்டனர். குறிஞ்சி நிலங்களில் வாழ்ந்தோர் குறவர் குறத்தியர் எனவும், மருத நிலங்களில் வாழ்ந்தவர் உழவர் உழத்தியர் எனவும், நெய்தல் நிலங்களில் வாழ்ந்தவர் உழவர் பரத்தியர் எனவும், பாலை நிலங்களில் வாழ்ந்தவர் எயினர் எனவும் அழைக்கப்பட்டனர். அவர்கள் வாழ்ந்த நிலங்களின் அடிப்படையில் அவர்கள் உண்டு வந்த உணவும் நில அடிப்படையில் வேறுபட்ட வகைகளைக் கொண்டிருந்தன. தற்காலச் சமுதாயத்தின் உணவுப் பண்பாடு பல்வேறு மாற்றங்களுக்கு

உட்பட்டதாயிருக்கின்றது. இதற்குக் காரணமாக அமைந்தது தமிழர் உணவுமுறையில் நிகழ்ந்த பிற பண்பாட்டு மக்களின் தாக்கம் எனலாம்.

இன்று தமிழகத்திலிருந்தும் இலங்கையிலிருந்தும் புலம்பெயர்ந்து வாழும் தமிழர்களிடம் தாயத்தமிழகத்தின் உணவுமுறையும் புகலிட உணவுமுறையும் கலந்தே காணப்படுகின்றன. காஞ்சனா தாமோதரனின் மரகதத் தீவு அமெரிக்காவில் வாழும் புலம்பெயர் தமிழரின் உணவுப் பண்பாட்டைக் கீழ்வருமாறு வர்ணிக்கின்றது.

அரிசி சாதம் பன்னி கொழுப்பும், கொத்துமல்லிஇலை
கறுப்பு பருப்பு ஸுப், இனித்தவாழை வறுவல்,
பன்றி இறைச்சிப் பொரியல், பழச்சாறு ரொட்டித்
துண்டு மேசையில் பரிமாறப்படுகிறது (ம.தீ.ப. 99)

அமெரிக்காவில் பெரும்பாலும் பதப்படுத்தப்பட்ட உணவு வகைகளே இடம்பெறும். மீன், பன்றியிறைச்சி, மாட்டிறைச்சி போன்றவற்றை அதிகமாகப் பயன்படுத்துவார்கள். மது உணவில் கண்டிப்பாக இடம்பெற்றிருக்கும். ரொட்டித் துண்டு, பதப்படுத்தப்பட்ட பழங்கள், காய்களின் சாறுகள் போன்றவையும் பரிமாறப்படும். ஒவ்வொரு இடத்துக்கும் உணவுமுறை வேறுபட்டு இருக்கும். அவர்கள் மரத்தட்டு, கண்ணாடி கலசம், வெள்ளிக்கரண்டிகள், பீங்கான்தட்டு, குவளை போன்ற பீங்கான் பொருள்களை அதிகம் பயன்படுத்துகிறார்கள். அமெரிக்க உணவுமுறையோடு தமிழ் மக்கள் தமது உணவு முறைகளையும் பயன்படுத்தி வருகின்றனர்.

மருதநிலத்தை உணவுப் பண்பாட்டின் வளர்ப்புப் பண்ணை என்றழைக்கலாம். சங்கத் தமிழர்களின் உணவு முறையோடு ஒப்பிடுகையில் அமெரிக்கத் தமிழர்களின் உணவிலும் சங்ககால உணவு முறைகள் காணப்படுவது இதன் மூலம் அறியமுடிகிறது.

அவைப்பு மாண் அரிசி அமலை வெண் சோறு
கவைத்தாள் அலவன் கலவையோடு பெறுகுவிர்
(சிறுபாணாற்றுப்படை 194-195)

என்ற பாடல் மூலம் மருதநிலத்தார் வெண்சோறும் நண்டும் பீர்க்கங்காயும் கலந்த கலவையையும் உண்டனர் என்பது விளங்குகின்றது. மருதநிலத்துச் சிறுவர் காலையில் பழைய சோற்றினை உண்டனர். அவலை இடித்து உண்ட செய்தியினை,

கருங்கை வினைஞர் காதல்அம்சிறாஅர்
பழஞ் சோற்று அமலை முனைஇ வரம்பில்
புதுவை வேய்ந்த கவிகுடில் மூன்றில்
அவல் எறி உலக்கைப் பாடு விறந்து அயல
(பெரும்பாணாற்றுப்படை 223-226)

என்ற வரிகள் தெளிவுபடுத்துகின்றன. மருதநிலத்தார் நெற்சோற்றைப் பெட்டைக்கோழிப் பொரியலோடும் உண்டனர். பலாப்பழம், இளநீர், வாழைப்பழம், நுங்கு, வள்ளிக்கிழங்கு, சோறு முதலியவற்றையும் உண்டனர். சங்கத் தமிழரின் உணவுமுறையும் புலம்பெயர்ந்த அமெரிக்காவில் வாழும் தமிழர்களின் உணவுமுறையும் செவ்விலக்கியங்களில் பதிவாகியுள்ள உணவுமுறையோடு ஒத்துப்போவதைக் காணமுடிகிறது.

கற்புநெறி

கற்பெனப்படுவது ஆண் பெண் இருபாலாருக்கும் உரியது. கற்பு என்பது பெண்களுக்கு மிக முக்கியமானதாகக் கருதப்படுவது. ஒருவனுக்கு ஒருத்தி என்ற கற்பு நிலையில் இருபாலாரும் வாழவேண்டும். ஒருத்தி ஒருவனை மட்டுமே மணக்கலாம். ஒருத்தி ஒருமுறை மட்டும் மணம் புரியலாம். இதைக் கலித்தொகை,

அருள்நெறி ஆயர் மகளிர்க்கு
இருமணம் கூடுதல் இல்லியல்பின்றே

காஞ்சனா தாமோதரன் தமது மரகதத்தீவு நாவலில் புலம்பெயர்ந்த தமிழ்ப் பெண்களின் கற்புப்பண்பைக் கீழ்க்காணுமாறு காட்டியுள்ளார்.

உன்னைப் பார்ப்பது அதுதான் கடைசிமுறை என்று
தெரிந்திருந்தால் நிதானமாய்நின்று கண்முன்
கலந்திருப்பேனே உன்னை முத்தமிடுவது
அதுதான் கடைசிமுறை என்று தெரிந்திருந்தால்
உன் நெற்றியில் கன்னத்தில் என்று முத்தங்கள்
இழைத்துக்கொண்டே இருந்திருப்பேன்.
உன்னுடனான என் வாழ்நாளின் கடைசி நாள்
அதுவென்று தெரிந்திருந்தால் உன்னை
வீட்டிலேயே சிறை வைத்திருப்பேனே! என் அன்பே!
(ம.தி.ப. 36)

கோதை அமெரிக்க வாசியான மணியை மணந்து அமெரிக்காவில் வாழ்ந்துவரும் பெண். இவள் கணவன் வேலை நிமித்தமாக வெளியூர் சென்று இருக்கும்போது நியூயார்க் நகரக் கட்டடத்தில் விமானம் மோதி ஏற்பட்ட விபத்தில் இறந்து போனான். இதனால் அவள் பிரமை பிடித்தவள் போல் இருந்தாள். வீட்டைவிட்டு வெளியே வராமல் படுக்கை அறைக்குள்ளேயே சுருண்டு போனாள். ஒரு மாதம் கழித்து வந்து தனது கணவனின் நினைவை ஏற்படுத்தும் அவனின் பொருட்களை எல்லாம் ஒரு பெட்டியில் போட்டுப் பக்கத்து வீட்டுக்காரர்களிடம் கொடுத்து அனாதை ஆசிரமத்துக்குக் கொடுத்துவிடச் சொன்னாள். அப்பா, அம்மாவை அவர்கள் வீட்டுக்குப் போகச் சொல்லி விட்டு நிவாரண மையத்தில் உதவிகள் செய்தாள். பின் அபலை நிறுவனத்தில் ஓர் அழகிய பெண் நாயைத் தத்து

எடுத்துவந்தாள். மறுமணம் செய்து கொள்ள விரும்பாமல் பப்பியுடன் அமெரிக்காவின் கிராமங்களைச் சுற்றிப் பார்க்க நடைப்பயணம் கிளம்பினாள்.

ஸமாந்த்தா பெருமூச்சுடன் தொடர்ந்தாள்

> "ஒவ்வொரு நாள் தூங்குவதற்கு முன்னாலே கடவுள்கிட்டே வேண்டுவேன். கோதை வாசல்மணி அடிக்கக்கூடாதான்னு. ஆனா கடவுள் வேற வேலையா இருந்துட்டார். ஒரு நாள் வாசல்மணி அடிச்சது. வெளியே ராணுவ உடையிலே இரண்டு பேர் அவனோட தனிப்பட்ட சாமான்களை எங்கிட்ட குடுத்திட்டு சம்பிரதாயமான ஆறுதல் வார்த்தைகள் சொல்லிட்டுப் போய்ட்டாங்க. எல்லா அர்த்தமும் ஒரு நிமிஷத்திலே வடிஞ்சுப் போச்சு" சாவின் அதிர்ச்சி, தான் நினைத்த கட்டுக்கோப்பான குடும்பம் இனிச் சாத்தியம் ஆகாது என்னும் புரிதல் கடைசியிலே என்ன தெரியுமா கோதை? அவன் எங்கே போனான்னுற தேடுற ஒவ்வொரு சமயமும் குனிஞ்சு வயித்தைப் பார்ப்பேன். கொஞ்சம் அமைதி வரும்" (ம.தீ.ப. 73)

கோதை தனது சுற்றுப்பயணத்தில் இறுதியாக வால்ட்டர் குடும்பத்தைச் சந்திக்கிறாள். வால்ட்டரின் மகள் ஸமாந்தாவை காண்கிறாள். ஸமாந்தாவின் கணவன் அமைதிக் காலத்தில் பல்கலைக்கழகப் படிப்புக்கான உதவிப் பணத்துக்காக இராணுவத்தில் சேர்ந்தவன் போர் வந்ததால் போர் முனைக்குச் சென்றான். ஸமாந்தா இரண்டுமாதக் கர்ப்பிணியாக இருக்கும்போது போர்முனையில் இறந்துபோனான் அவள் கணவன். ஸமாந்தா இப்போது வாஷிங்டன்னில் போர் சம்பந்தப்பட்ட அலுவலகத்தில் சம்பளம் இல்லாத சேவையாய்ப் பணியாற்றுகிறாள். போரில் கணவன் அல்லது மனைவியை இழந்தவர்களுக்குத் தேவைப்படும் உதவிகளை திரட்டித் தருபவள். சில வாரங்களில் பிரசவத் தேதி என்பதால் தன் தந்தை வீட்டிற்கு வருகிறாள்.

செப்டம்பர் 11 சிஸேரியன். அறுவை பிரசவ அறையில் அவள் பெண்குழந்தை உதிர்த்தது. அவள் கோதை கையைப் பிடித்து நன்றி என்றாள். அவள் கையை இதமாய் இறுக்கிப் பிடித்தபின் கோதையினுள் இனம்புரியாத நெகிழ்வு - இது தாய்மை என்பதை உணர்ந்தாள்.

இவ்வாறாக இரு கதைப்பாத்திரங்கள் மூலம் ஆசிரியர் பெண்களின் கற்பு நிலை. அவர்களின் சேவை மனப்பான்மைகளையும், மறுமணம் செய்யும் வாய்ப்பு இருந்தும் அதை நினைக்காமல் மற்றவர்களுக்காக வாழும் மனப்பாங்கு உள்ளவர்களாகவும், தமிழ்ப்

பண்பாட்டைப் பேணி பாதுகாக்கும் விதத்திலும் படைத்துக் காட்டியுள்ளார்.

## முடிவுரை

காஞ்சனா தாமோதரனின் படைப்புகளில் தமிழர் உணவுப் பண்பாடு, இறைவழிபாடு, கற்புநெறி ஆகியவற்றில் தமிழர் செவ்வியல் பண்புகள் அமெரிக்கா போன்ற மேலை நாடுகளில் பேணி பாதுகாக்கப்பட்டு வருவதைக் காணமுடிகிறது. புலம்பெயர்ந்த தமிழர்கள் தங்களின் மண்ணின் வேரான செவ்வியல் பண்பாடுகளையும் புலம்பெயர் நாடுகளுக்குக் கொண்டுசெல்வதையும் செவ்வியல் தாக்கத்தையும் இதன்மூலம் அறியமுடிகிறது.

### துணை நூல்கள்


1. காஞ்சனா தாமோதரன், வரம் (சிறுகதைத் தொகுப்பு), கவிதா பப்ளிகேஷன்ஸ், சென்னை 600 017.
2. ” இக்கரையிலே (நாவல்)
3. ” மரகதத் தீவு (குறுநாவல்), உயர்மைப் பதிப்பகம், வெளியீடு, சென்னை.
4. ” பூமித்தின்னிகள் (கட்டுரைத் தொகுப்பு), உயர்மைப் பதிப்பகம், வெளியீடு, சென்னை.

# அயலகத் தமிழ்க்கவிதைகளில் புலம்பெயர்ப் பண்புகளும் செவ்வியல் கூறுகளும்

முனைவர் கு. சிதம்பரம்
உதவிப் பேராசிரியர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி,சென்னை - 600 113

மக்கள் தாங்கள் பிறந்து வளர்ந்த நாட்டைவிட்டுப் பல்வேறு காரணங்களுக்காகப் புகலிடம் தேடிப் புலம்பெயர்ந்து செல்கின்றனர். அவ்வாறு புலம்பெயர்ந்து செல்லும் மக்கள் புதிய மொழி, பண்பாடு, இயற்கைச் சூழல் ஆகியவற்றிற்குத் தங்களை தகவமைத்துக்கொண்டு வாழ முற்படுகின்றனர். அப்புகலிடத்திலிருந்து தாங்கள் பிறந்து வளர்ந்த தாய்மண் வாசத்தோடும் புலம்பெயர்ந்த மண் வாசத்தோடும் படைப்புகளைப் படைத்து வருகின்றனர். அப்படைப்பு இலக்கியங்கள் புலம்பெயர் இலக்கியம், புலம்பல் இலக்கியம், அகதி இலக்கியம், புகலிட இலக்கியம், பேரழிவு இலக்கியம் என்று குறிப்பிடப்படுகின்றன. 'இப்புலம்பெயர் இலக்கிய வகைமை நான்கு பண்புகளைக் கொண்டுள்ளது.

1. முழு அளவில் அந்நியமயப்படுத்தப்பட்ட தன்மை
2. தாங்கள் புறப்பட்டு வந்த தாயகத்தைத் தொடர்ந்து அன்பு செய்யும் தன்மை
3. தாங்கள் சொந்தத் தாயகத்தையும் வாழும் தேசத்தினையும் இரட்டை அடையாளங்களாகக் கருதும் தன்மை
4. தங்களின் புலம்பெயர்வுக்குக் காரணமான மற்றும் புலம்பெயர்வின் பொழுது நிகழ்ந்த வலிகளை வேதனைகளைத் தொடர்ந்து மனதில் கொண்டிருப்பதனை வெளிப்படுத்துவதாகக் காணப்படும் தன்மை,'[1]

மேற்கூறிய புலம்பெயர்ப்பண்புகளோடும், தங்களின் பண்பாடு, கலை, இலக்கியம், செவ்விலக்கியம் ஆகியவற்றின் தாக்கங்களோடும் தங்களின் படைப்புகளை வெளிப்படுத்தி வருகின்றனர். அவ்வாறு வெளிவருகின்ற இலக்கியங்களில் ஒன்றான கவிதை இலக்கியத்தின் புலம்பெயர் பண்புகளையும் மற்றும் தமிழ்ச் செவ்விலக்கியங்களின் தாக்கத்தையும் ஆராய்ந்து கூறுவதை நோக்கமாகக் கொண்டுள்ளது இவ்வாய்வுக் கட்டுரை. இக்கட்டுரைக்கு தரவுகளாகத் அமெரிக்காவின் ரிச்மண்ட் தமிழ்ச் சங்கம் வெளியிட்டு வரும் தமிழ்த்துளி என்ற காலாண்டிதழில் தமிழகத்திலிருந்து

புலம்பெயர்ந்த கவிஞர் கவிநயா அவர்கள் எழுதிய கோடை வெயிலின் சுகம் எனும் கவிதை, இலங்கையிலிருந்து சுவிஸ் நாட்டிற்குப் புலம்பெயர்ந்த சுதா அவர்களால் எழுதப்பட்டு வார்ப்பு இணையத்தளத்தில் வெளிவந்த மழைநாள் நினைவுகள் எனும் கவிதை, ஈழத்துக் கவிஞர் சு.வில்வரத்னத்தின் நிலவின் எதிரொலி எனும் தலைப்பில் அமைந்த கவிதை ஆகியவை எடுத்துக்கொள்ளப் பட்டுள்ளன.

## அயலகக் கவிதைகளில் புலம்பெயர்ப் பண்புகள்

புலம்பெயர்க் கவிதைகளில் அந்நியப்படுத்தப்பட்ட தன்மையும், தாய்மண்ணை நேசிக்கும் தன்மையும், தாய்நாட்டு அடையாளத்தையும் புகலிட அடையாளத்தையும், தாய்மண்ணில் எதிர்கொண்ட சமூகச் சிக்கல்களையும் புலம்பெயர்ந்த தமிழர்கள் தங்களின் கவிதை இலக்கியத்தின் வாயிலாகவும் வெளிப்படுத்தி வருவதைக் காணமுடிகின்றது.

கோடைவெயிலின் சுகம் எனும் தலைப்பில் வெளிவந்த அமெரிக்காவின் வர்ஜீனிய மகாணத்தில் வசித்துவரும் கவிஞர் தமது நினைவலைகளையும் தங்கள் தாய்நாட்டிலிருந்து அந்நியப படுத்தப்பட்ட தன்மையினையும் தாய்நாட்டில் தாங்கள் அனுபவித்த இயற்கைச் சூழலையும் நினைத்து ஏங்குவதாக அமைந்துள்ளது.

**கோடைவெயிலின் சுகம்**

கோடைகாலமும் ஒரு சுகம்
கோடை வெயில் குளு குளு நீரில்
குளிப்பது ஒரு சுகம்
கொளுத்தும் சாரல் மழையில்
நனைவது ஒரு சுகம்
கத்திரி வெயிலில் ஏ.சி.கடைகளில்
ஒதுங்குவது ஒரு சுகம்
எரிக்கும் வெயிலில் அலைகள் ஓரம்
அலைதல் ஒரு சுகம்
மஞ்சள் வெயிலில் மர நிழல் தேடி
அமர்தல் ஒரு சுகம்
தென்றல் வந்து தலை கோதுகையில்
கண்கள் சொருகும் - அடடா அது சுகம்

ஐரோப்பிய, அமெரிக்க நாடுகள் குளிர்ப் பிரதேச நாடுகள் என்பதால் அங்கு நிலவும் தட்பவெப்பம் சற்று மாறுபட்டதாக அமைவதால் தாய்த்தமிழகத்தின் கோடையின் சுகம் என்பது தனித் தன்மை வாய்ந்ததாக அமைகின்றது. தமிழகத்தின் கோடைகாலம் என்பது புலம்பெயர்ந்த தமிழர்களுக்கு மட்டுமன்று ஐரோப்பிய நாட்டுவாசிகளுக்கும் பிடித்தமான ஒன்றாக உள்ளது. இங்குக்

கோடைவெயில் அம்மக்களின் சருமத்திற்கு அருமருந்தாகவும் உள்ளது. அதற்குக் காரணம் தமிழ்நாட்டின் கோடைவெயிலின் தன்மைதான். தாய்த்தமிழ் நாட்டு வெயிலினை

கோடைவெயில்
கத்திரிவெயில்
எரிக்கும்வெயில்
மஞ்சள் வெயில்
பச்சை வெயில்

என வகைப்படுத்திப் பட்டியலிட்டுள்ளார் கவிஞர். ஒவ்வொரு வகையான வெயிலுக்கும் ஒரு மருத்துவக்குணம் உண்டு. குறிப்பாக வெயிலிலிருந்து பெறப்படும் வைட்டமின் டி, சரும நோய்களுக்கு மருந்தாக இருப்பதால் ஐரோப்பிய நாட்டு வாசிகளுக்கும் புலம்பெயர்ந்த தமிழர்களுக்கும் தமிழகத்தின் வெயில் பிடித்தமான ஒன்றாக உள்ளது.

மேலும், தமிழகத்தில் தாங்கள் வாழ்ந்த காலத்தில் உண்டு மகிழ்ந்த உணவினை நினைத்து ஏங்குவதையும் இக்கவிதை வரிகள் காட்டுகின்றன.

பச்சை வெயிலில் பானைத் தண்ணீர்
தணியா வெயிலில் தர்பூசணியை
சுவைப்பது ஒரு சுகம்
எரிக்கும் வெயிலில் இளநீர் வெட்டி
அருந்துதல் ஒரு சுகம்
மட்டைக் கரண்டியால் வழு வழு தேங்காய்
ருசிப்பது ஒரு சுகம்......

பானைத் தண்ணீர், தர்பூசணி,இளநீர் வழுக்கைத் தேங்காய் போன்ற இயற்கை உணவு வகைகள் வெப்பப் பிரதேசங்களில் மட்டுமே கிடைக்கக்கூடிய ஒன்றாக உள்ளதால் புலம்பெயர்ந்த தமிழர்கள் தங்களின் கோடைகால உணவினை நினைத்து ஏங்குவது இயல்பான ஒன்றாகவே உள்ளது.

இலங்கையிலிருந்து புலம்பெயர்ந்து சுவிஸ் நாட்டில் வாழ்ந்துவரும் சுதா அவர்களின் ஒரு மழைநாள் நினைவுகள் எனும் தலைப்பில் அமைந்த கவிதையில் இலங்கையில் பெய்யும் மழையினையும் சுவிஸ் நாட்டில் பெய்யும் மழையினையும் ஒப்பிட்டுத் தமது தாய் மண்ணின் இயற்கைச் சூழலை எண்ணி ஏங்குவதாக அமைந்துள்ளது. மேலும், ஐரோப்பாவில் மழைக்குளிர் அவ்வளவு ஒன்றும் சுகமானது இல்லை என்கிறார் கவிஞர்.

**மழைநாள் நினைவுகள்**

மாடியின் யன்னலினூடு விழிகள்
இருள்கவிந்த பகலொன்றில்

மழைத்துளிகள் இல்லை
மழைக்கீறல்களில் மனம் விறைக்கிறது.
எப்போதும்போல
வானவில் காணாது மழை பெய்தபடி
மனம் அதில் நனைந்தபோதும்
உடல் மறுக்கும்.
ஐரோப்பிய மழைக்குளிர்
அப்படியொன்றும் இதமானதல்ல

தாய்நாட்டு மழையின் சுகத்தினைக் கீழ்வருமாறு வர்ணிக்கின்றார் கவிஞர்.

மேகக்கூட்டங்களை இருள் கவ்வும்
மனம் நிசப்த அமைதியில்
புதிய உணர்வு கோலமிடும்
குளிர்கவ்வி காற்றுவீசும்
சருகுகளுக்குச் செட்டைமுளைக்கும்
முகில்கள் உரசி முழக்கமிடும்
மின்னல் தெறிப்பில்
முகங்கள் விழிக்கும்
மழைத்துளிகள் பூமியை முத்தமிடும்
ஆனந்தமழையில் சிறுவர் நனைவர்

தாய்நாட்டின் வறுமையையும் போர்க்கொடுமையையும் படம்பிடித்துக் காட்டுவதாக கீழ்க்கண்ட வரிகள் அமைந்துள்ளன.

தாழ்வாரங்களும் பீலிகளும்
தற்காலிகச் சவர்களாய்
கூரை ஒழுகி ஏழையை நனைக்கும்
நனைந்த விறகை அடுப்பு மறுக்கும்
கூலி வயிறுகள் பசியில் புகையும்
ஆலமரங்களும் அரசமரங்களும்
அங்கங்கே குடைகளாகும்.....
பதுங்கு குழிகளை மழைநீர் நிரப்பும்
பயத்தில் விழிகள் பிதுங்கி முழிக்கும்

மேற்கண்ட இரு கவிதைகளில் இருந்து அயலகத் தமிழர்களின் தாய்நாட்டின் ஏக்கம், தாய்நாட்டில் இருந்தபோது தாங்கள் அனுபவித்துவந்த சுகதுக்கங்களையும் காட்டுவதாக அமைகின்றது.

**புலம்பெயர் இலக்கியத்தில் செவ்வியல் கூறுகள்**

தமிழ்த் தொன்மக் கதைகள், புராணங்கள் செவ்விலக்கியங்கள் ஆகியவற்றில் உள்ள கதைமாந்தர்களையும், புலவர்களையும், மன்னர்களையும் குறியீடுகளாகவும், உவமையாகவும் உருவக

மாகவும் பயன்படுத்துவது அயலகக் கவிதைகளில் இயல்பான ஒன்றாக உள்ளது.

இலங்கைத் தமிழர்களின் புலம்பெயர்வு காட்சியினையும் நிலையையும் சங்க இலக்கியக் கதைமாந்தர்களோடும், மன்னர்களோடும் கவிஞர்களோடும் உவமைப்படுத்தியும் உருவகப்படுத்தியும் கவிதை புனையப்பட்டுள்ளது. ஈழத்துக் கவிஞர் சு.வில்வரத்துனத்தின் நிலவின் எதிரொலி எனும் தலைப்பில் அமைந்த கவிதையின் வரிகள் கவனத்திற்குரியது.

நிலவின் எதிரொலி

பறம்புமலை
பாரி மறைந்து
பரிதியும் மறைந்த இருளில்
அகதிகளாயினர்
அங்கவையும் சங்கவையும்
வென்றெறி முரசம் வீழ்ந்த கையோடு
குன்றிலே
தோய்ந்த முழுநிலவின் சோகம்
படர்கின்ற ஒற்றையடிப் பாதையினூடே
பாரி மகளிர் நடந்தனர்
மலையின் இறங்கிப் பெயர்ந்து
தானும் தளர்நடை நடந்து நிலவும்
தள்ளாத வயதின் கபிலர் துணைபோல
நடந்து இளைத்துத் தேய்ந்து
நடை விழுந்து போனது
வெண்ணிலவும்தான்
கபிலரும்தான்
பாரிமகளிரும்தான்
பறம்புமலை வாழ்வும்தான்
வாழ்விழைத்த மகளிரை
ஔவையிடம்
பவ்வியமாகக் கையளித்துவிட்டுக்
கபிலர் மறைந்தார்
பயணம் தொடர்ந்தது
கூழ் குடித்த சேரியெல்லாம் ஔவையோடு
கூடவே நடந்தனர் பாரி மகளிர்
நின்று நிதானித்து
நிலவும் நடந்தது
அதியமான் கொடுத்த நெல்லிக் கனியீந்த
ஆயுட்காலம் முடிவிற்கு வந்ததோ
ஔவை அவசரப்பட்டுவிட்டாள்
தன்னைப்போல் தமிழ் செய்த மகளிரைப்
பறம்புமலை வாழ்வை அழித்தவர்க்கே
தாரைவார்த்துக்கொடுத்தாள்

காலம் தாழ்த்திய திரைப்பொருளாக.
கூழோ கஞ்சியோ வார்த்தவர்
குடியில் கொடுத்திருந்தாலும்
பாரியின் ஆன்மா பரவசப்பட்டிருக்கும்
பாவம் அற்றைத் திங்கள் அவ்வெண்ணிலவின்
பறம்பு மலைக்குன்றும்
வென்றெறி முரசும்
அந்தப்புரத்து அடிமைகளாகிவிட்ட
அங்கவையும் சங்கவையும்
இரங்கி அழுதலையெல்லாம்
இற்றைத் திங்கள் இவ்வெண்ணிலவிலும்
எதிரொலிக்கின்றனவே.

பறம்புமலைப் பாரி மூவேந்தர்களால் கொல்லப்பட்டபின்பு அங்கவையும் சங்கவையும் அனாதிகளாக்கப்பட்டனர். அதேபோல் இலங்கையில் பலநாட்டு ஆதரவுடன் சிங்கள இராணுவம் இலங்கை தமிழினத்தின் தலைவர்களைக் கொன்று குவித்தது. இதனால் பல்லாயிரம் பெண்கள் விதவைகளாக்கப்பட்டு அகதிகளாக்கப்பட்டனர். மேலும்,

பறம்புமலை
பாரி மறைந்து
பரிதியும் மறைந்த இருளில்
அகதிகளாயினர்
அங்கவையும் சங்கவையும்

என்ற வரிகளில் பறம்புமலைப் பாரியை வேந்தர் படையினர் படையெடுத்துக் கொன்றபோது சூரியன் மறையும் நேரம். இக்கவிதையில் பரிதியும் மறைந்த இருளில் என்ற வரி தமிழகத்தின் அன்றைய ஆட்சிப் பீடத்தில் இருந்த தலைவன் இலங்கைத் தமிழர்களைக் கைவிட்ட நிலையில் அப்பெண்கள் அகதிகளாயினர் என்ற மறைப் பொருளும் இவ்வரிகளில் அடங்கியுள்ளதைக் காணமுடிகின்றது.

அப்படி அகதிகளான பெண்கள் தங்கள் வாழ்ந்துவந்த குன்றைவிட்டு வேறுஇடத்திற்கு வேற்று நாட்டிற்குப் புலம்பெயர்ந்து செல்கின்றனர். அவ்வாறு புலம்பெயர்ந்து செல்லும் பெண்களுக்கு அங்கவைக்கும் சங்கவைக்கும் துணையாக கபிலர் இருந்ததைப் போல முழுநிலவு இலங்கைத் தமிழ்ப் பெண்களுக்கு வழித் துணையாக இருப்பதாகக் கவிஞர் உருவகப்படுத்தியுள்ளார்.

வென்றெறி முரசம் வீழ்ந்த கையோடு
குன்றிலே
தோய்ந்த முழுநிலவின் சோகம்
படர்கின்ற ஒற்றையடிப் பாதையினூடே
பாரி மகளிர் நடந்தனர்
மலையின் இறங்கிப் பெயர்ந்து

தானும் தளர்நடை நடந்து நிலவும்
தள்ளாத வயதின் கபிலர் துணைபோல

வாழ்விழந்த பாரியின் மகளிரை வேந்தர்களின் வழித்தோன்றல் களுக்கே திருமணம் முடித்து வைத்துபோல அகதிகளான தமிழ்ப்பெண்கள் தமக்குத் துரோகம் இழைத்த தமிழகத்திற்கும் அகதிகளாகப் புலம்பெயரும் நிலையுள்ளதைக் கீழ்வரும் வரிகள் நமக்குத் தெளிவுபடுத்துகின்றன்.

.......வாழ்விழைத்த மகளிரை
ஔவையிடம்
பவ்வியமாகக் கையளித்துவிட்டுக்
கபிலர் மறைந்தார்
பயணம் தொடர்ந்தது
கூழ் குடித்த சேரியெல்லாம் ஔவையோடு
கூடவே நடந்தனர் பாரி மகளிர்
நின்று நிதானித்து
நிலவும் நடந்தது......
கூழோ கஞ்சியோ வார்த்தவர்
குடியில் கொடுத்திருந்தாலும்
பாரியின் ஆன்மா பரவசப்பட்டிருக்கும்

மேலும் ஔவையார் அவசரப்பட்டுத் தமிழினத்தைக்கொன்று குவிக்க உறுதுணையாக இருந்தவர்களுக்கே அளித்துவிட்டாள் என்கிறது கீழ்க்காணும்வரிகள். மேலும் காலம் தாழ்த்திய திறைப்பொருளாக என்ற வரிகள் அன்றைய தமிழக ஆட்சியாளர்கள் இலங்கைத் தமிழர்களைக் காக்கக் காலம் தாழ்த்தியமையையும் அப்படி காலம் தாழ்த்தியவர்களுக்கே அவ்வையார் கொடுத்து விட்டாள் என்பதைக் உருவகப்படுத்துவதாக உள்ளன இக்கவிதை அடிகள்.

அதியமான் கொடுத்த நெல்லிக் கனியீந்த
ஆயுட்காலம் முடிவிற்கு வந்ததோ
ஔவை அவசரப்பட்டுவிட்டாள்
தன்னைப்போல் தமிழ் செய்த மகளிரைப்
பறம்புமலை வாழ்வை அழித்தவர்க்கே
தாரைவார்த்துக்கொடுத்தாள்
காலம் தாழ்த்திய திறைப்பொருளாக.

இலங்கையில் போர்முடிவுக்கு வந்தபிறகு, ஈழத் தமிழ் மக்கள் போரின்போது நிகழ்ந்த அந்தக் கொடூரமான நிகழ்வுகளும் காட்சிகளும் அழுகுரல்களும் இற்றைத் திங்கள் இவ்வெண்ணிலவில் எதிரொலிக்கின்றனவே என்கிறார் கவிஞர்.

பாவம் அற்றைத் திங்கள் அவ்வெண்ணிலவின்
பறம்பு மலைக்குன்றும்

வென்றெறி முரசும்
அந்தப்புரத்து அடிமைகளாகிவிட்ட
அங்கவையும் சங்கவையும்
இரங்கி அழுதலையெல்லாம்
இற்றைத் திங்கள் இவ்வெண்ணிலவிலும்
எதிரொலிக்கின்றனவே.

பாரி மகளிர் பாடிய கையறுநிலைப் பாடலை அடியொட்டி இலங்கைக் கவிஞர் படியமையும் சங்க இலக்கியத்தின் பாடல் அடிகளைப் பயன்படுத்தி இக்கால இலங்கைப் போர் நிகழ்ச்சிக்கு ஒப்பிட்டிருக்கும் தன்மையும் கவனத்திற்குரியன.

பாரி மகளிர் பாடிய பாடல்:

அற்றைத் திங்கள் அவ்வெண் நிலவின்
எந்தையும் உடையோம்; எம் குன்றும் பிறர் கொளார்
இன்றைத் திங்கள் இவ் வெண் நிலவின்
வென்று எறி முரசின் வேந்தர் எம்
குன்றும் கொண்டார்; யாம் எந்தையும் இலமே !

செவ்வியல் காலத்தில் பாரி மகளிருக்கு ஏற்பட்ட அதே கொடுமைதான் இன்று இலங்கைத் தமிழ் மகளிருக்கும் ஏற்பட்டுள்ளது என்கிறார் கவிஞர். அற்றைத் திங்கள் அவ்வெண்ணிலவில் அப்பெண்கள் தங்கள் தலைவன், பூ, பொட்டு, பிள்ளைகள், வீடு, வாசல், என அனைத்தையும் பெற்றிருந்தனர். இற்றைத் திங்கள் இவ்வெண்ணிலவில் அனைத்தையும் இழந்து அகதிகளாக நிற்கின்றனர், பல்வேறு நாடுகளில் என்பது நாகரிகக் காலத்தின் கொடுமை.

## முடிவுரை

அயலகப் படைப்பிலக்கியங்களில் ஒன்றான கவிதை இலக்கியத்தில் கவிஞர்கள் தங்களின் புலம்பெயர்ப் பண்புகளையும், தாய்நாட்டிலிருந்து புலம்பெயர்ந்தபோது ஏற்பட்ட சுகதுக்கங்களையும் புகலிடத்தில் ஏற்படுகின்ற சமூக, பண்பாட்டுச் சிக்கல்களையும் பட்டறிவையும் தங்கள் படைப்பின் மூலம் வெளிப்படுத்தித் தங்களை ஏதாவது ஒரு விதத்தில் அடையாளப்படுத்திக்கொள்ளும் முயற்சியாகவும் உள்ளது. மேலும் தங்களின் செவ்வியல் பண்புகளையும் புலம்பெயர் மண்ணில் பதிக்கும் விதமாகவும் பேணிப்பாதுகாக்கும் விதத்திலும் புலம்பெயர்த் தமிழர்களின் முயற்சி அமைந்துள்ளது மிகவும் குறிப்பிடத்தக்க ஒன்றாக உள்ளது.

# புலம்பெயர்ந்தோர் கவிதைகளில் செவ்வியல் இலக்கியத் தாக்கம்

**தூ. சேதுபாண்டியன்**
கல்வியியல் ஒருங்கிணைப்பாளர்,
தமிழ்த்துறை,
தொலைநிலைக்கல்வி இயக்ககம்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை– 625021

தமிழில் புலம்பெயர்ந்தோர் இலக்கியம் என்பது இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தோன்றிய ஓர் இலக்கியப் போக்காகும். புலம்பெயர்ந்தோர் என்ற கருத்தாக்கம் மிகப் பழமையானது என்பர். Diaspora என்ற சொல்லிற்கு இணையான தமிழ்ச் சொல்லாகவே புலம்பெயர்ந்தோர் என்ற சொல் இன்று பயன்படுத்தப்படுகிறது. கி.மு. 538 ஆம் ஆண்டிலேயே யூதர்கள் தங்கள் சொந்த மண்ணிலிருந்து விரட்டியடிக்கப் பட்டபோது இந்தப் பெயரால்தான் அழைக்கப்பட்டனர். "தம் விருப்பத்திற்கு மாறாகத் தாம் பிறந்த மண்ணில் வாழ்வதற்கான உத்தரவாதம் எதுவுமில்லாத நிலையில் பிறிதொரு நாட்டில் வாழப் புகுந்தவர்களைப் புலம்பெயர்ந்தோர்" என்று அழைப்பர்.

தமிழிலக்கியச்சூழலில் தமிழ்நாட்டிலிருந்து புலம்பெயர்ந்து சென்றவர்கள்தாம் இன்று இலங்கை, மலேசியா, சிங்கப்பூர், மொரீசியஸ் போன்ற பல நாடுகளில் உள்ள தமிழர்கள். இவர்கள் படைக்கும் கவிதைகள் எல்லாம் புலம்பெயர்ந்தோர் கவிதைகள் எனக் கொள்ளத்தக்கவையா? இல்லை இலங்கையிலிருந்து வெளியே சென்றோர் படைத்த கவிதைகள் மட்டும்தாம் புலம்பெயர்ந்தோர் கவிதைகளா?

புலம்பெயர்ந்தோர் கவிதைகளை அடையாளம் கண்ட பின்னர் அடுத்த வினா செவ்வியல் இலக்கியத் தாக்கம் என்ற தொடர் உணர்த்தும் பொருண்மையினை விளங்கிக்கொள்ள வேண்டியுள்ளது. செம்மொழித் தமிழாய்வு மைய நிறுவனம் கூறியுள்ள 41 நூல்களையும் செவ்வியல் இலக்கியம் என்று கொள்வதா? இல்லை பத்துப்பாட்டு எட்டுத்தொகை என்றழைக்கப்படும் சங்க இலக்கியங்களை மட்டும் செவ்வியல் இலக்கியம் என்று கொள்வதா? இவ் ஐயங்களை எல்லாம் உள்ளடக்கியதாகவே இந்தக் கட்டுரை உருவாகியுள்ளது. தமிழ் இலக்கிய வரலாற்றின் தோற்றம் சங்க இலக்கியங்களிலிருந்தே தொடங்குகிறது. தமிழ் இலக்கிய வரலாற்றை அறிந்த எந்த ஒரு

படைப்பாளியின் படைப்பிலும் சங்க இலக்கியங்களின் தாக்கம் இல்லாமல் இருக்க முடியாது.

இந்தக்கட்டுரையில் ஈழத்துப் புலம்பெயர்ந்தோர் கவிதைகளும் மலேசியக் கவிஞர் சீனி நைனா முகம்மது அவர்களின் கவிதைகளும் மட்டுமே தரவுகளாகக் கொள்ளப்படுகின்றன. ஈழத்துக்கவிஞர்களின் கவிதைகளைத் தேர்ந்தெடுப்பதில் எந்த ஒரு வரைமுறையும் பின்பற்றப்படவில்லை. அடிப்படையில் இது விளக்கமுறையில் அமைந்த ஒரு கட்டுரையேயாகும்.

மலேசியத் தமிழ்க் கவிதைகளில் செவ்வியல் இலக்கியத் தாக்கம் என்பது பெரும்பாலும் பாடுபொருளில் ஏற்பட்ட தாக்கமாகவே அமைந்துள்ளது. சீனி நைனா முகம்மது அவர்களின் கவிதைகளின் தொகுப்பாக வெளிவந்துள்ள 'தேன் கூடு' என்ற நூலில் உள்ள கவிதைகளும் அவர் நடத்தும் உங்கள் குரல் இதழ்களில் வெளிவந்த கவிதைகளுமே தரவாகக் கொள்ளப்பட்டுள்ளன. இவருடைய 'தேன்கூடு' நூலில் இடம்பெற்றுள்ள கவிதைகள் இயற்கை, மொழி, இலக்கியம், கலை, பெண்மை தாய்மை, நாடு, இனம், சமுதாயம், வாழ்த்து, பாராட்டு, இரங்கல் போன்ற பதினொரு தலைப்புக்களில் இடம்பெற்றுள்ளன.

இவருடைய கவிதைகளில் உள்ள பாடுபொருள் என்பது காதல், தமிழின் பெருமை, தமிழினப்பெருமை என்றே அமைந்துள்ளது. இவற்றைப் பாடும்போது ஆங்காங்கே பழந்தமிழ் இலக்கியங்கள் கூறும் கருத்துக்களையே கவிஞர் தம் மொழியில் பாடிச்சென்றிருப்பதைக் காணமுடிகிறது. மேலெழுந்த வாரியாகப் பார்த்தால் இவர் பாடியுள்ள காதல் கவிதைகளில் நீ, நான் என்ற மூவிடப்பெயர்கள் இடம்பெற்றுள்ளனவே தவிரத் தலைவன் தலைவி பெயர்கள் சுட்டப்பெறவில்லை. இது சங்க அகப்பாடல்களின் 'சுட்டி ஒருவர் பெயர் கொளப் பெறாஅர்' என்ற மரபின் தாக்கமாகவே அமைகிறது எனலாம்.

இக்கவிஞரின் கவிதைகளில் பல இடங்களில் திருக்குறளின் தாக்கம் காணப்படுகிறது. திருவள்ளுவரின் கருத்தை மட்டுமல்லாது அவருடைய தொடர்களையும் அப்படியே எடுத்தாள்வதைக் காணமுடிகிறது. இளைஞர்களுக்கு அறிவுரை கூறும் 'நீ உயர..' என்ற கவிதையில்,

"வெள்ளத்தின் அளவே தாமரை உயரும்
வெறுங்குள மானால் அழியும் - புது
வெள்ளத்தில் மீண்டும் தழையும்
உள்ளத்தில் உயர்ந்தால் உயர்ந்திடும் வாழ்க்கை
உன்வசமாகிடும் உலகம் - இதை
உணரத் திருக்குறள் உதவும்.(நீ உயர, தேன்கூடு ப.188)

என்று வள்ளுவரின் கருத்தையும், தொடர்களையும் எடுத்தாள்கிறார்.

தம்முடன் பணிபுரிந்த தோழி ஒருத்தியின் திருமணத்தின்போது பாடிய வாழ்த்துப்பாவில் பெண் என்பதற்கு வள்ளுவர் கூறிய கருத்தைச் சுட்டிக்காட்டி வள்ளுவரைப் பயிலுமாறு வாழ்த்துவதைப் பின்வரும் கவிதையில் காணலாம்.

"பாரின் நலங்கருதிப் பைந்தமிழில் வள்ளுவனார்
பாடிவைத்த நற்குறளைப் பையப் பயின்றிடுவாய்
....................................................
தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்ணென்று சொன்னகுறள்
ஒன்றே அதன்பயனை உன்னறிவுக் கெட்டவைக்கும்
இன்றே குறள்பயில்வாய் இல்லத் தொளிநிறைப்பாய்"

(ஏற்றமுடன் வாழ்க, தேன்கூடு, ப.202)

கவிஞர் தமது நாட்டில் அரசுத் தேர்வில் தமிழிலக்கியத்தை ஒரு பாடமாகத் தேர்ந்து எடுக்கும் மாணவர்களுக்காக எம். ஐ. இ. டி. சார்பில் 5000 நூல் தொகுப்புக்கள் இலவசமாக வழங்கிய அரசியல் தலைவர் டத்தோ ஸ்ரீ சாமிவேலு அவர்களை வாழ்த்திப் பாடும்போதும் முல்லைக்குத் தேர் கொடுத்த பழந்தமிழ் வள்ளல் பாரியோடு அவரை ஒப்பிடுவதைக் காணமுடிகிறது. கவிதை பின்வருமாறு அமைகிறது.

தழைக்குமொரு கொடிமுல்லை தவிக்காமல் படர்வதற்கே
தன்தேரை வழங்கியதால் பாரி வள்ளல்.......

(சாமி வள்ளல், தேன்கூடு ப.210)

தமிழின் சிறப்பைப் பாடும்போது, எல்லாம் தமிழிலே உள்ளது என்ற பொருளில் கருத்துரைக்கும் கவிஞர் கணியன் பூங்குன்றனாரின் புறநானூற்றுப் பாடல் வரிகளை அப்படியே எடுத்தாள்வதைக் காணமுடிகிறது. அடுத்த பாடலில் திருக்குறளின் அமைப்பையும் சிறப்பையும் பேசுகிறார். அடுத்த அடியில் சிலப்பதிகாரத்தைப்பற்றியும் குறிப்பிடுவதைக் காணலாம்.

'யாதும் ஊரே யாவரும் கேளிர்'
என்றோ சொன்னது தமிழிலே - இங்குத்
தீதும் நன்றும் யாரால் என்று
தெளிந்து சொன்னது தமிழிலே

வாழும் நெறியை ஏழு சீரில்
வழங்கும் குறள்கள் தமிழிலே - இடர்
சூழும் போதும் சுடரும் கற்பைப்
பாடும் சிலம்பு தமிழிலே

(எல்லாம் தமிழிலே! தேன்கூடு ப.34)

மாணவர்களுக்குச் சங்கப்பாடல்களின் உரிப்பொருளையும் முதற் பொருளையும் மனனம் செய்தற்பொருட்டு எழுதிய கவிதை ஒன்று பின்வருமாறு அமைந்துள்ளது.

"கூடல் குறிஞ்சி கொடும்பிரிவு வெம்பாலை
ஊடல் மருதத்தின் ஊடேதான் - நாடி
இருத்தலுக்கு முல்லை இரங்கலுக்கு நெய்தல்
பொருத்தி உரிப்பொருளைப் போற்று"

(திணையும் உரிப்பொருளும், தேன்கூடு ப.72)

ஈழத்துப் புலம்பெயர்ந்தோர் கவிதைகள் அவற்றின் தோற்றப் பின்னணியுடன் படிக்கும்போதே அவற்றைச் சரியாகப் புரிந்துகொள்ளும் வகையில் அமைந்துள்ளன.1950களில் நடைபெற்ற இலங்கைப் பொதுத் தேர்தலில் வெற்றி பெற்ற ஐக்கிய தேசியக் கட்சித் தலைவர் சர். ஜோன் கொத்தலாவலை தாம் பிரதமர் ஆனவுடன் தமது அரசு சிங்களத்திற்கும் தமிழுக்கும் உத்தியோக மொழிகளாகச் சமபங்கு வழங்கும் என்றார். அப்போதைய எதிர்க்கட்சியான சிறிலங்கா சுதந்திரக்கட்சி சிங்களம் மட்டுமே ஆட்சிமொழியாக இருத்தல் வேண்டும் என்று எதிர்த்ததால் பிரதமர் கொத்தலாவலை அரசின் மொழிக்கொள்கையைத் திடீரென்று மாற்றிக்கொண்டு சிங்களம் மட்டுமே இலங்கையின் உத்தியோக மொழியாக இருக்கும் என்று உத்தரவிட்டார். இதனால் தமிழர்கள் அரசின் மொழிக்கொள்கையை எதிர்த்துப் போராட வேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டனர். இதனால் தமிழர்களுக்கெதிரான வன்செயல்கள் நிகழ்ந்தன. தமிழர்கள் படுகொலை செய்யப்பட்டனர். இந்நிகழ்வினைத் தம் கவிதையில் கவிஞர் மகாகவி பதிவு செய்துள்ளார்.

"முறையிலா வழிகளில் முரடர்எம் முடிவையே
முயலநாம் மூடியோர் மூலையில் துயில்வதோ?
பறையெலாம் அதிர்கநம் பலமெலாம் திரள்கவே
பாதிநா டெங்களுக் காகஎன் றெழுகவே
அறமெலாம் ஒருகரைப் படினவர் வெல்லுதல்
அணுபிளந் தெறியினும் ஆவதொன் றல்லவே"

1957-இல் சிங்களம் மட்டுமே ஆட்சிமொழி என்ற கொள்கை அமலாக்கப்பட்டுப் போக்குவரத்து வாகனங்களின் தகடுகளில் ஸ்ரீ என்ற சிங்கள எழுத்தை எழுத அரசு ஆணையிட்டது. செல்வநாயகம் தலைமையில் இயங்கிய தமிழரசுக்கட்சி இதனை எதிர்த்துப் போராடியது. ஸ்ரீ என்ற சிங்கள எழுத்தைத் தமிழர்கள் மை பூசி அழித்தனர். கவிஞர் காசி ஆனந்தன் மட்டக்களப்புப் போலீஸ் நிலையத்தில் நுழைந்து அங்கிருந்த பெயர்ப்பலகையில் எழுதப்பட்டிருந்த சிங்கள எழுத்தின்மீது கருப்பு மை பூசி அழித்தார். இதனால் காவல்துறையினரின் கொடுமையான தாக்குதலுக்குள்ளாகிச் சிறையில் அடைக்கப்பட்டார். இதனால் அவர் தம் கவிதைகளில் தமிழர்களுக்கெனத் 'தனிநாடு', 'தனியீழம்' வேண்டும் என்ற கோரிக்கையை முழங்கினார்.

"தடித்த சிங்களத்தின் தறுக்கனே மூடா
தமிழன்யான் உனைக்கண்டு தலை தாழ்த்தவோடா?
தந்தை இராவணன் ஆண்ட பொன்னாடு
தமிழீழ நாடென்றன் தாய்நாடு கண்டாய்!
இந்தமண் மீட்பதே என்முதல் வேலை!

வெறியாடும் சிங்களப் படைவீரா இதுகேள்!
விடுதலை வீரரைத் தொடுதலை நிறுத்து
பொறிகக்கும் விழியோடு புலிகள்யாம் நின்றோம்
பொன்னீழம் உயிரென்றோம் போராடுகின்றோம்!"

- . காசிஆனந்தன்.

கவிஞர் மகாகவியின் கவிதையிலும் கவிஞர் காசியானந்தன் கவிதையிலும் சங்ககாலப் புறநானூற்றில் காணப்படும் வஞ்சினக்காஞ்சிப் பாடல்களின் சாயல் வெளிப்படுவதைக் காணமுடிகிறது.

ஈழத்துப் புலம்பெயர்ந்த தமிழர்களின் சிதைவுகளை இழப்பின் வலியுடன் பேசும் கவிஞர் சிவசேகரத்தின் கவிதை பின்வருமாறு அமைகிறது.

"நாராய் நாராய் செங்கால் நாராய்
பழம்படு பனையின் கிழங்கு
பிளந்து
பயன்மிகு அறிந்த
பனைசெறி நாட்டார்
வழிபல சென்றே பலதிசைப் பரந்தார்
வருகுவ தெந்நாள்
அறிவையோ நாராய்" - சி. சிவசேகரம்

இக்கவிதையில் சத்திமுற்றப் புலவர் பாடிய பழம்பாடல் ஒன்றன் தாக்கத்தைக் காணமுடிகிறது. கருத்து வெளிப்பாட்டு முறையிலும் தொடர் அமைப்பிலும் அப்பாடல் படிப்போரின் காதுகளில் ஒலிக்கும் வகையில் இக்கவிதை அமைந்துள்ளது.

கவிஞர் முருகையன் தமது படைப்பில் ஓர் உத்தியைக் கையாள்கிறார். அவர் திருவள்ளுவரை வழியில் கண்டு வீட்டுக்கு அழைத்துச்சென்று ஈழத் தமிழ்ச் சூழல் பற்றி உரையாடல் நடத்துவது போலவும் அப்பொழுது திருவள்ளுவர் 'தற்கொடை' என்னும் தலைப்பில் பத்துக் குறட்பாக்களைக் கொண்ட புதிய அதிகாரம் படைத்திருப்பதாகவும் அதனைக் கவிஞரிடம் கொடுப்பதாகவும் கவிதை படைத்துள்ளார். 'தற்கொடை' என்றால் தன்னுயிரை மக்களுக்காக ஈதல் ஆகும் என்று வள்ளுவர் விளக்கியதாகவும் குறிப்பிட்டுள்ளார்.

திருவள்ளுவரின் பெயரில் தான் எழுதிய தற்கொடை என்ற அதிகாரத்தில் உள்ள குறட்பாக்கள் சில பின்வருமாறு அமைந்துள்ளன:

கற்கண்டு இனிது பழங்கள் இனிது என்பார்கள்
தற்கொடையின் தன்மைதெரி யார்.

நஞ்சைக் கழுத்தில் நகையாய் அணிவோரின்
நெஞ்சம் நிரம்ப நெருப்பு

வெங்கொடுமைச் சாவும் விளையாட்டுக் கூடமாம்
பொங்குசினம் கொண்ட புலிக்கு

கவிஞர் முருகையன் கையாண்டுள்ள இந்தக் கருத்து வெளிப்பாட்டு உத்தி – குறள் வெண்பாவில் - கவிதைகளைப் படைத்திருக்கும் உத்தி திருவள்ளுவரின் திருக்குறளின் தாக்கத்தால் விளைந்தது என்பதைச் சொல்லவும் வேண்டுமோ?

கவிஞர் காசியானந்தனின் ஈழ நாடு குறித்த தமிழனின் கனவைப் பாடுகின்ற

"துஞ்சு மேதி சுறாக்களைச் சீற
சுறாக்க ளோடி பலாக்கனி கீற
இஞ்சி வேலியின் மஞ்சளிற் போய்விழும்
ஈழ மண்டல நாடெங்கள் நாடே" (தமிழனின் கனவு)

என்ற பாடலில் "கழனி மாஅத் துகுந்த தீம்பழம் பழன வாளை கதூஉம்" என்று தொடங்கும் சங்கக் குறுந்தொகைப் பாடலில் காணலாகும் இயற்கை வருணனையின் சாயல் வெளிப்படுவதைக் காணமுடிகிறது.

புலம்பெயர்ந்த ஈழத்துக் கவிஞர்களில் ஆண்களுக்குச் சமமாகப் பெண்களும் தங்கள் கவிதைகளைப் படைத்துள்ளனர். அக்கவிதைகளில் பெண்ணியக் கருத்துக்களும் இடம்பெற்றுள்ளன.

பெண்ணியம் பேசும் அவர்களின் கவிதைகளிலும் திருக்குறளின் தாக்கத்தைக் காணமுடிகிறது.

"எனக்கு
முகமில்லை
இதயம் இல்லை
ஆத்மாவும் இல்லை
அவர்களின் பார்வையில்
இரண்டு மார்புகள்
நீண்ட கூந்தல்
சிறிய இடை
பருத்த தொடை
இவைகளே உள்ளன

சமையல் செய்தல்
படுக்கையை விரித்தல்
குழந்தை பெறுதல்
பணிந்து நடத்தல்"

இவையே எனது கடமைகள் ஆகும்.

"கற்புப் பற்றியும்
மழை பெய்யெனப் பெய்வது பற்றியும்
கதைக்கும்......
அவர்கள் எனது உடலையே
நோக்குவர்
கணவன் தொடக்கம்
கடைக்காரன் வரைக்கும்
இதுவே வழக்கம்" (அவர்கள் பார்வையில் - அ.சங்கரி)

"கவிஞர் வில்வரத்தினத்தின் கவிதைகளில் சங்ககாலக் கவிதைத் தொடக்கம் பாரதி காலம் வரையிலான நீண்ட தமிழ்க்கவிதைப் பாரம்பரியத்தின் பாதிப்பு மிகுதியாக வெளிப்படுகிறது" என்ற செ.யோகராசாவின் கருத்து இங்குக் குறிப்பிடத்தக்கது. வில்வரத்தினத்தின் ஒரு கவிதை பின்வருமாறு அமைகிறது.

"பறம்புமலை
பாரி மறைந்து
பரிதியும் மறைந்த இருளில்
அகதிகளாயினர்
அங்கவையும் சங்கவையும்
வென்றெறி முழவம் வீழ்ந்த கையோடு
குன்றிலே
தோய்ந்த முகநிலவின் சோகம்
படர்கின்ற ஒற்றையடிப் பாதையினூடே
பாரிமகளிர் நடந்தனர்
மலையின் இறங்கிப் பெயர்ந்து
தானும் தளர் நடை நடந்தது நிலவும்
தள்ளாத வயதின் கபிலர் துணைபோல
நடந்து இளைத்துத் தேய்ந்து
நரை விழுந்து போனது
வெண்ணிலவும் தான்
கபிலரும் தான்
பாரிமகளிரும் தான்
பறம்பு மலை வாழ்வும்தான்
..............................
பாவம்,

அற்றைத் திங்கள் அவ்வெண்ணிலவின்
பறம்பு மலைக்குன்றும்
வென்றெறி முரசும்
அந்தப்புரத்து அடிமைகளாகிவிட்ட
அங்கவையும் சங்கவையும்
இரங்கி அழுதவையெல்லாம்
இற்றைத் திங்கள் இவ்வெண்ணிலவிலும்
எதிரொலிக்கின்றனவே."

இந்தக் கவிதை பாரிமகளிர் பாடிய புறநானூற்றுப் பாடலின் தாக்கத்தைப் பாடுபொருளிலும் பாடல் அடிகளிலும் வெளிப்பாட்டு உத்தியிலும் பெற்றுத் திகழ்கின்றது என்பது உள்ளங்கை நெல்லிக்கனி போன்று தெளிவாகிறதன்றோ?

ஈழத்துப் புலம்பெயர்ந்தோர் கவிதைகள் பாடுபொருளாலும் வெளிப்பாட்டு உத்தியாலும் யாப்பமைப்பாலும் மலேசியக் கவிதைகளிலிருந்து முற்றிலும் வேறுபட்டனவாக விளங்குகின்றன. ஈழத்துக் கவிதைகளில் புலம்பெயர்ந்தோரின் உள்ளத் துயரம் வெளிப்படுகிறது. மலேசியக் கவிதைகளில் தமிழின் பழைய இலக்கியக் கருத்துக்களைப் பரப்புதல் என்ற ஒரு நோக்கிலேயே பழந்தமிழ் இலக்கிய அடிகளும் பாடுபொருளும் எடுத்தாளப்பட்டுள்ளன. ஈழத்துக் கவிதைகளில் காணப்படும் செவ்வியல் இலக்கியத் தாக்கம் என்பது இயல்பாகப் பாடுபொருளுடனும் சூழலோடும் இயைந்து செல்வதைக் காணமுடிகிறது.

# அயலகத் தமிழ்ப் படைப்பிலக்கியங்களில் சங்க இலக்கிய வகைமைகளின் தாக்கம்

பேரா. வீ. ரேணுகா தேவி
தலைவர், மொழியியல் துறை
புலத்தலைவர், மொழியியல்
மற்றும் தகவல் தொடர்பியல் புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை - 21

அயலகத் தமிழர்களின் புலம்பெயர்வை இரு வகையாகக் கொள்ளலாம். காலனியக்காலம் வரை நடைபெற்ற புலம்பெயர்வு, இருபதாம் நூற்றாண்டுக்குப் பின் நடந்த புலம்பெயர்வு. இருவகைப் பெயர்வுகளுக்கும் அடிப்படை பொருள்வயப் பிரிதலே. முதல் வகையான புலம்பெயர்வு இலங்கை, மொரீஷியஸ், பர்மா போன்ற கீழைத்தேய நாடுகளில் இரப்பர்த் தோட்டங்களிலும், தேயிலைத் தோட்டங்களிலும் வேலை செய்து பொருள் ஈட்டுவதற்கான புலம்பெயர்வாக அமைந்தது. இரண்டாம்வகைப் புலம்பெயர்வு தொழில்நுட்பத் துறையில் வல்லுநர்களாக மேலை நாடுகளுக்குச் சென்று பொருள் ஈட்டுவதற்கான புலம்பெயர்வாக அமைந்தது.

புலம்பெயர்ந்த மக்கள் கவிதைகள், கட்டுரைகள், சிறுகதைகள், புதினங்கள், சிற்றிலக்கியங்கள் என ஏராளமான இலக்கியங்களைப் படைத்தளித்திருக்கின்றனர். புலம்பெயர்ந்த தமிழர்கள் தோட்டத் தொழிலாளர்களானாலும் சரி, தொழில்நுட்ப வல்லுநர்களானாலும் சரி அவர்கள் வாழ்வியல் சிக்கல்கள் மிகுந்ததாகவே அமைந்துள்ளது. அதுவே அவர்களது படைப்பிலக்கியங்களின் பாடுபொருளாக அமைந்துள்ளது.

கவிஞர்களின் கவிதைத் தொகுப்புகளை ஆழ்ந்து படித்தால் அவர்கள் கையாண்ட பாடுபொருள்களாகச் சில வாய்பாடுகளுக்குள் அடக்கிவிடமுடிகிறது. சிங்கப்பூர்ப் பின்னணி, தமிழின் பெருமை, தமிழர் திருநாள், தமிழர் கொண்டாடும் விழாக்கள், தமிழ்ச் சமுதாயத்தில் குறைபாடுகள், தமிழக மற்றும் மலேசியத் தலைவர்கள் என்னும் வாய்பாட்டிலே கவிதைகள் அமைந்திருப்பதை யாரும் மறுக்க முடியாது என இலக்குமி மீனாட்சிசுந்தரம் (1995:216) கூறியிருப்பது இங்கு உற்று நோக்கத்தக்கதாகும்.

அயலகத் தமிழர்களின் படைப்பிலக்கியங்களில் செவ்வியல் இலக்கியங்களான சங்க இலக்கியங்களின் தாக்கம் மிகக் குறைவே. காரணம் தோட்டத்தொழிலாளர்களாகப் புலம்பெயர்ந்தவர்கள் கல்வியறிவு அதிகம் இல்லாதவர்கள். அவர்களுக்குச் செவ்வியல் இலக்கியங்களைப் படிப்பதற்கான வாய்ப்புகள் குறைவு. தம் அன்றாடத் தேவைகளுக்கான பொருளை ஈட்டுவதற்கும், தம் மக்களை வாழ்விப்பதற்கும் அல்லாடிக் கொண்டிருந்த அம் மக்களும் இலக்கியங்களை யாத்தனர். அவற்றில் செவ்வியல் இலக்கியங்களின் தாக்கம் என்பதை வலிந்துதான் தேட வேண்டும்.

தொழில்நுட்ப வல்லுநர்களாக புலம்பெயர்ந்தவர்களுக்குக் கல்வியறிவு உண்டு. ஆனாலும் அவர்கள் செவ்வியல் இலக்கியங்களைப் படித்தவர்களா என்பது கேள்விக்குறியே. அவர்களும் தம் படைப்பிலக்கியங்கள் வாயிலாகத் தமிழுக்குப் பெரும் தொண்டாற்றியுள்ளார்கள். எனினும் அவ்விலக்கியங்களின் பாடுபொருளும் அவர்களுடைய வாழ்வியல் சிந்தனைகளே.

இவை அனைத்தையும் தாண்டித் தலைவன், தலைவியைப் பொருள் தேடிச் செல்வதன் பொருட்டுப் பிரிவதைப் போன்று புலம்பெயர்ந்தோரின் வாழ்க்கையிலும் நிகழ்ந்திருக்கலாம். புலம்பெயர்தலின் அடிநாதமாக இருப்பது பொருள்வயப் பிரிதலே. எனவே சங்க அகப் பாடல்களைப் போலத் தலைவன் தலைவியைப் பிரிந்த காரணத்தினால் எழுதப்பட்ட காதல் பாடல்கள் சில இருக்கலாம். அவற்றில் சங்க இலக்கியங்களின் தாக்கத்தைத் தேடவும் செய்யலாம்.

தமிழ் இலக்கியத் தோற்ற, வளர்ச்சி வரலாற்றை நோக்குகையில் புதிதாகத் தோன்றும் இலக்கிய வகைகளுக்குக் கருத்து நிலையிலும், யாப்பு நிலையிலும், உத்தி நிலையிலும் சங்க இலக்கியங்களில் காணப்படும் கூறுகள் அடிப்படையாக இருக்கின்றன.

சிற்றிலக்கியங்களின் காலம் பத்தொன்பதாம் நூற்றாண்டு. அது பக்தி இலக்கியங்கள் தோன்றிய காலம் எனக் கூறப்பட்டாலும் கூட அச்சிற்றிலக்கிய வகைமைகளின் தோற்றதிற்கு மூலமாக அமைந்தவை சங்க இலக்கியங்களில் சிறு சிறு பாடல்களில் சொல்லப்பட்டவையே ஆகும். சிறு சிறு கருத்துக்கள், செய்திகள் பிற்காலத்தில் பெரும்பாடல்களில் தனி இலக்கியங்களாக தூது, பரணி, ஆற்றுப்படை, பிள்ளைத்தமிழ், மடல், அந்தாதி எனப் பல்வேறு வகைமைகளாகத் தோற்றம் பெற்றன.

சங்க இலக்கியங்களில் கூறப்படும் புறப்பொருள் கோட்பாடுகளில் ஒன்று பாடாண்திணை ஆகும். இஃது கைக்கிளை எனும் அகத்திணையின் புறம் ஆகும். பாடப்படும் ஆண்மகனுடைய ஒழுகலாறுகளைக் கூறுவது இத்திணையாகும். இது எட்டு வகையினை உடையது, அவை கடவுள் வாழ்த்து வகை, வாழ்த்தியல்

வகை, மங்கல வகை, செவியறிவுறுத்தல், ஆற்றுப்படை வகை; பரிசில்துறை வகை, கைக்கிளை வகை, வசை வகை என்று கூறுவார் இளம்பூரணர்.

இந்தப் பாடாண்திணை, நேரடிப் போர் நிகழ்ச்சிகள் சாராத பல்வேறு பாடுபொருள்களை உள்ளடக்கிய ஒரு திணையாகும். அதனால்தான், இத்திணைக்குப் பூ அடிப்படையில் பெயர் கொடுக்கவில்லையோ என்று எண்ணத் தோன்றுகிறது. உலகில் இயற்கையாக உள்ள மக்களை, இயல்பாகப் பாடுவது இயல்மொழி ஆகும். இது 'செந்துறைப் பாடாண்பாட்டு' என்றும் கூறப்படும். பதிற்றுப்பத்துப் பாடல்கள் யாவும் இத்துறையைச் சார்ந்தனவே.

காமப் பகுதியைக் கடவுளோடு சேர்த்துப் பாடுவது உண்டு. அது கடவுளரைத்தெய்வப் பெண்டிர் விரும்புவதாகப் பாடுவதும், மானிடப் பெண்டிர் விரும்புவதாகப் பாடுவதும், கடவுள் மானிடப் பெண்டிரை விரும்புவதாகப் பாடுவதும் ஆகியவை பாடாண் திணையுள் அடங்கும்.

குழவிப் பருவத்தைப் பாடுவதாலும் அதாவது பிள்ளைப் பருவத்தினைப் பாடுவதும் பாடாண் பாட்டாம். இவ்வகையே பின்நாளில் "பிள்ளைத்தமிழ்" எனும் சிற்றிலக்கியமாய் வளர்ந்தது என்பர்.

'ஊரின் இடத்தே நிகழும் காமப்பகுதி' பேதை முதல் பேரிளம் பெண் ஈறாக வருவதாம். இதுவும் பாடாண் ஆகும். இதுவே பின்நாளில் 'உலாச்' செய்யுளாக வளர்ந்தது.

அயலக மண்ணில் குறிப்பாகச் சிங்கப்பூரில் தோன்றிய சிற்றிலக்கியங்களைப் பலவாறு வகைப்படுத்தலாம். பிள்ளைத்தமிழ், மாலை, அந்தாதி, அம்மானை, பதிகம் போன்ற வகைகளும் சிற்றிலக்கியக் கூறுகள் அடங்கிய கவிதைகளும் இவண் ஓரளவு தோன்றியுள்ளன. மேலும் இந்நாட்டில் தோன்றிய சிற்றிலக்கியங்களைப் பாடுபொருள் அடிப்படையிலும், பாடிய புலவர் என்ற அடிப்படையிலும் வகைப்படுத்தவியலும். மலேசியப் பாடுபொருளை அடிப்படையாய்க் கொண்டு பாடப்பட்ட சிற்றிலக்கியம் என்ற வகைப்பாட்டினுள் பத்துமலையான் பிள்ளைத்தமிழ், கோலாலம்பூர் மகாமாரியம்மன் பிள்ளைத்தமிழ் ஆகியவற்றைச் சான்றாகக் கூறலாம். சில சிற்றிலக்கிய வகைகளுள் கருப்பொருள் மலேசியாவைப் பற்றியதாக அமையும் ஆயின் பாடிய புலவர் தமிழகத்தைச் சேர்ந்தவராயிருப்பர். கோலாலம்பூர் மகாமாரியம்மன் பிள்ளைத்தமிழ் இத்தகையதே.

மற்றுஞ்சில சிற்றிலக்கிய வகைகளுள் கருப்பொருள் தமிழகத்திற்கு உரியதாக இருக்கும். ஆயின் பாடிய புலவர் மலேசியக்கவிஞராக இருப்பார். இவ்வகைப் பாட்டினுள் மறைமலையடிகள் பிள்ளைத்தமிழ், பாவாணர் பிள்ளைத்தமிழ் ஆகியவற்றை அடக்கலாம்.

இற்றைநாள் வரை சிங்கப்பூர் மண்ணில் 5 பிள்ளைத்தமிழ் நூல்களும், 2 அந்தாதி நூல்களும், 3 பதிகங்களும், 2 மாலை நூல்களும் தோன்றியுள்ளன என்பது இலக்குமி மீனாட்சி சுந்தரத்தின் கருத்தாகும்.(1991:59)

## தண்ணீர்மலைத் தண்டாயுதபாணி பிள்ளைத்தமிழ்

இந்நூலின் ஆசிரியர் சிவானந்தன் என்பவர். மிகப்புகழ் பெற்ற மருத்துவர். தம்பிப்பிள்ளை என்பவரின் வேண்டுகோளுக்கிணங்க இந்நூல் பாடப்பட்டது. இந்நூலாசிரியர் மலாக்கா அருணாச்சலஞ் செட்டியாரின் மாணவர்.

பிள்ளைத்தமிழ் இலக்கிய வகையின் இலக்கணங்கள் சிறப்புறப் பொருந்துமாறு பாடப்பட்டது இப்பிள்ளைத்தமிழ். பிள்ளைத்தமிழ் பாடும் புலவர்கள் காப்புப்பருவத்தில் தம்முடைய விருப்பத்திற்கிணங்கக் கடவுளரை வேண்டிப் பாடுவர். எனவே காப்புப்பருவ மரபு பிள்ளைத்தமிழுக்குப் பிள்ளைத்தமிழ் மாறுபடும். பன்னிருபாட்டியல் என்னும் நூல் காப்புப்பருவத்தில் இடம்பெறத்தக்க கடவுளர் இன்னின்னார் எனத் தொகுத்துரைத்துள்ளது. இந்நூற்படி பதினாறு கடவுளரையும் பத்துப்பாடல்களுக்குள் பாடுவது அருமையுடைய செயலாகும். ஆதலின் இவருள் எவரேனும் பதின்மரைப் பாடுவது என்பது புலவர்களின் நடைமுறை மரபாக அமைந்துள்ளது. சில புலவர்கள் சிறு தெய்வங்களாகக் கருதப்படுபவற்றையும் காப்பு வேண்டிப் பாடுவதுண்டு.

> "திருமால் அரனே திசைமுகன் கரிமுகன்
> பொருவேல் முருகன் பரிதி வடுகன்
> எழுவகை மங்கையர் இந்திரன் சாத்தன்
> நிதியவன் நீலி பதினொரு மூவர்
> திருமகள் நாமகள் திகழ்மதி என்ப
> மருவிய காப்பினுள் வருங்கட வுளரே"[5]

என வரும் பன்னிருபாட்டியல் நூற்பாவுக்கிணங்க இந்நூலின் காப்புப்பருவம் அமைகிறது.

### மரபு மாற்றம்

பிள்ளைத்தமிழ் பாடும் புலவர்கள் முத்தப்பருவத்தில், உலகில் கிடைக்கும் முத்துக்களைக்காட்டிலும் பாட்டுடைத்தலைவனின் வாய்முத்தமே சிறந்தது எனப் பாடுவர். இது பிள்ளைத்தமிழ் இலக்கிய மரபு. ஆனால் இந்நூலில் பிற முத்துக்களைப் பற்றிக் குறிப்பிடாமல் முத்தம் தருமாறு வேண்டுகிறார்.

பிள்ளைத்தமிழ் இலக்கிய வகையில், சிறுமியர் இழைத்து விளையாடும் சிற்றிலைப் பாட்டுடைத்தலைவன் அழிக்கக்கூடாது எனப்

புலவர் வேண்டிப்பாடுவது மரபாகும். எனவே பிள்ளைத்தமிழ் நூல்களில் 'சிற்றில்' சிதையேலே' என்னும் வரி இடம்பெறும். ஆனால் இந்நூலில் புலவர் மரபை மாற்றிச் 'சிற்றில் சிதைத்தருளே' எனப் பாடியுள்ளார். 'புதியன புகுத்துதல்' என்னும் மரபுப்படி சிற்றிலைச் சிதைத்தருளுமாறு பாடியிருக்கலாம். இறைவனுடைய பேரின்ப வீட்டை நோக்க இவ்வுலகவாழ்வு சிறுமையானது என்னும் கருத்தின் அடிப்படையில், சிற்றில் என்பது சிறுமியர் இழைத்து விளையாடும் மணல்வீட்டை மட்டும் குறிக்காமல், ஆணவம், மாயை, கன்மம் என்னும் மும்மலங்களைக் கொண்ட உயிர்கள் வாழும் இம்மை வாழ்வைக் குறித்தது. தத்துவ அடிப்படையில் 'பிறவித்துன்பத்தை ஒழிப்பாயாக' என்னும் கருத்துப்படி 'சிற்றில் சிதைத்தருளே' எனப் புலவர் பாடியிருக்க இடமுண்டு. (இலக்குமி மீனாட்சி சுந்தரம், 1991: 59-69)

### மறைமலை அடிகள் பிள்ளைத்தமிழ்

தனித்தமிழ்ப் பற்றாளர் மறைமலையடிகளுடைய நூற்றாண்டு விழாவையொட்டி நடத்தப்பட்ட படைப்பிலக்கியப் போட்டியில் முதற்பரிசு பெற்ற பெருமைக்குரியது 'மறைமலையடிகள் பிள்ளைத்தமிழ்' என்னும் நூல். பினாங்குக் கவிஞர் சி. அன்பானந்தத்தின் அரிய படைப்பு இந்நூல். இந்நூலின் நயமும் சிறப்புங் கருதிப் 'பிள்ளைத்தமிழ்ப் பாவலர்' என்ற சிறப்புப் பட்டம் இவருக்கு வழங்கப்பட்டதாக அறிய முடிகின்றது.

### நூலமைப்பு

பிள்ளைத்தமிழ் இலக்கணங்கள் பொருந்தியுள்ள இந்நூலில் பன்னிருசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தங்களே அதிகம் பயில்கின்றன. சந்த விருத்தங்களும் இடம்பெறுகின்றன. மறைமலையடிகளின் வாழ்க்கை முழுமையும் சிறப்புறச் சித்திரிக்கப்பட்டுள்ளது.

### ஓசையின்பம்

கவிஞர் அன்பானந்தம் சந்தமுறச் செந்தமிழ் பாடுவதில் சிறந்தவர். சந்தவிருத்தங்கள் இவரது நூலில் இடம்பெற்றுள்ளமையால் ஓசையின்பத்தைக் குறைவறத் துய்க்கமுடிகிறது. சான்றாகக் காப்புப்பருவத்தின் ஐந்தாம் பாடல் செவிக்குத் தேனென இனிப்பது.

**"வேதாசல நாதாவருள் தாதாவெனப் போற்றில்**
**வேலாயுத மேதானுடை கோலத்துறு கன்றை**
**வேதகாம நூலோர்பணி வேந்தேயெனப் பாடில்**
**வீணாய்மிடி வாராவகை வாழச்செயுங் குன்றை"**
(காப்புப்பருவம் - 5)

### புலமைத்திறம்

மறைமலையடிகள் தனித்தமிழ்ப்பற்றுடையவர். பிறமொழிக்கலப்புக்குப் பெரும் எதிரியாகவே விளங்கியவர். இதனை,

"நத்திடும் பிறர்மொழி நந்தமிழ் மொழியிலே
நண்டுபோ லோடிவந்து
நடமாட லானதால் நயத்தமிழ் தன்னினிமை
நன்குணரா மக்களுக்கு" (சப்பாணி - 8)

என அழகுறப் பாடுவர்.

**கோலாலம்பூர் மகாமாரியம்மன் பிள்ளைத்தமிழ்**

சிங்கப்பூரைப் பொறுத்தவரை எண்ணற்ற கோயில்கள் இருப்பினும் கோலாலம்பூர் மகாமாரியம்மன் கோயில் தனிச்சிறப்புடையது. வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தது. தமிழ் வளர்த்த மையமாகத் திகழ்ந்தது. தமிழர் வரலாற்றோடும், மலேசிய வரலோற்றாடும் இணைந்த சிறப்புடையது. ஆகவேதான் கோலாலம்பூர் மகாமாரியைப் பிள்ளைத்தமிழின் தலைவியாக்கி உள்ளார். சிங்கப்பூரில் எழுந்த பெண்பாற் பிள்ளைத்தமிழ் நூல் இஃதொன்றேயாம்.

**காப்புப்பருவப் புதுமை**

கோலாலம்பூர் மகாமாரியைக் காக்கவேண்டித் தமிழ் நாட்டுத் தெய்வங்களைப் பாடிய புலவர், அமெரிக்கநாட்டில் எழுந்தருளிய நியூயார்க் பிள்ளையாரையும் பாடுகிறார். மேலும் ஏசு, புத்தர், அல்லா ஆகிய கடவுளர்களையும் காப்புவேண்டிப் பாடுவார். ஆயின் சைவப் பிள்ளைத்தமிழ் நூலாசிரியர் பிறசமயக் கடவுளரைக் காப்பு வேண்டிப்பாடும் புதுமையை இந்நூலில் காண்கிறோம். இது கவிஞரின் பொதுமை பூக்கும் நெஞ்சத்தைக் காட்டுகிறது.

"வேறுபடை யால்மக்கள் வேறுபாடே அறியா
விதிசமைத்த ஒப்பில்லா நாட்டின்
வெல்லரிய சொல்லரிய நல்லநெறி தோலா
வேலம்பூர் மகாமாரி காக்கவே" (காப்பு-9)

இக் காப்புப்பருவத்திலே தமிழ்த்தாயை வாழ்த்தும் புதுமையும் காணக் கிடக்கின்றது.

**இயற்கை வளம்**

சிங்கப்பூர் இயற்கைவளம் மனத்தை மயக்கும் இயல்பினது. இதனைப் பல பாடல்களில் காட்டியிருப்பினும், இயற்கையின் வனப்பைச் சங்க இலக்கியத் தொடர் மூலம் எழிலுறப்பாடுவது நயமுடையது.

"வண்டலைக் கும்மெழில் மாமகள் இயற்கையாள்
மகிழ்ந்தே கூத்தாட
மண்பதை கைபுனைந் தியற்றாக் கவின்மகள்
மரகத ஒயிலாடக்
கொண்டலை வெல்கரு குயிலினம் பாடிடக்
கொட்டுக சப்பாணி" (சப்பாணி - 7)

மலேசியத் தமிழர்களின் சமுதாயப் பின்னணியை மலேசியப்படைப்புக்கள் சிறப்பாக வெளிப்படுத்தி உள்ளன. இவ்வகையில் இப்பிள்ளைத்தமிழ் நூலும் மலேசியத் தமிழர்களைப் பற்றிய செய்திகளை உள்ளது உள்ளபடியே உரைக்கின்றது.

மலேசியத் திருநாட்டில் ஆடவரும் பெண்டிரும் சரிநிகர் சமானமாக வாழும் நிலையைக் கவிஞர் போற்றுகிறார். இல்லற வாழ்விலும் சமரசமே மேலோங்கி நிற்கிறது. இதனை,

"காதற் செழுமட மாதர் மகிழ்வுடைக்
கருமைப் படை விழியார்
காவல் தனை உடை ஆவல் உரிமைசெய்
கருத்துச் சுதந்திரத்தால்
ஓதற் குலவளம் உரிமை ஆடவர்
உண்மைக் குறிநோக்கில்
ஒருமன மாகியே திருமணம் கண்டிடும்
உவப்புக் காளாகி" (தாலப்பருவம் -8)

என்று பாடுகிறார் கவிஞர்.

மலேசியாவில் தமிழ் வளர்க்கும் அமைப்புக்கள் மற்றும் பத்திரிகைகள் ஆகியவற்றின் பணியையும் கவிஞர் சுட்டியுள்ளார்.

"நற்றமிழ்ச் சங்கமும் நயக்கவி மன்றமும்
நறவெழுத் தாளர்நிலையமும்
நாடுறு பல்கலைக் கழகமுள மொழிகளில்
நம்தமிழ் அங்கமும்சேர்" (ஊசல் -7)

கவிஞருடைய இந்நூலில் சில மலாய்ச்சொற்கள் கையாளப்பட்டுள்ளன. தமிழ்நாட்டவராயினும் ஆசிரியருக்கு மலாய்மொழிப்பயிற்சி உண்டு என்பதைக் காணமுடிகின்றது.

## பத்துமலையான் பிள்ளைத்தமிழ்

பத்துமலையில் கோயில் கொண்டிருக்கும் முருகப் பெருமானைப் பாட்டுடைத்தலைவராக்கிப் பிள்ளைத்தமிழ் பாடியுள்ளார் கவிஞர் டி.வி.ஆர்.பி. இராகவன். பிள்ளைத்தமிழுக்கே உரிய இப்பிள்ளைத்தமிழ் இலக்கிய வகையுள் முருகன் மீது பாடப்பட்ட நூல்களே மிகுதி. தமிழ்க்கடவுளாம் குமரக்கடவுளைக் கொஞ்சுதமிழால் பாடி மகிழ்ந்தனர் புலவர்கள். ஆதலால் இவ்விலக்கியவகை பெருகிற்று. மலேசியாவிலும் கவிதை மரபில் தோய்ந்த புலவர்கள் இவ்விலக்கிய வகையைப் படைத்தனர். ஆசிரிய விருத்தத்தில் பாடப்பட்டுள்ள இந்நூல் ஒவ்வொரு பாடலுக்கும் பாடலின் முதலடியே தலைப்பாகக் கொடுக்கப்பட்டுள்ளது. சந்தச் சிறப்பை இப்பிள்ளைத்தமிழில் நிரம்பக் காண முடிகிறது. இரட்டைக்கிளவிகளைக் கையாண்டு ஓசையின்பம் சேர்த்துள்ளார் கவிஞர்.

பாவாணர் பிள்ளைத்தமிழ்

மொழியியல் ஆய்வில் ஒப்பற்றவர் பாவாணர்! 'மொழி ஞாயிறு' எனப் போற்றப்படும் புகழாளர்! தமிழ்ச் சொற்கள் பல வடமொழியினின்று உருவானவை என்ற அறியாமையில் ஆழ்ந்துகிடந்த தமிழருக்குத் தமிழ்மொழிச் சொற்களே அவை எனத் தக்க சான்றுகளோடு அறிவுகொளுத்திய மூதறிஞர் அவர். அன்னாரிடம் அளப்பரும் பற்றுக்கொண்ட 'செந்தமிழ்ச்சித்தர்' பெ.கோ.மலையரசன் பாவாணர் பிள்ளைத்தமிழ் எனும் பிள்ளைத்தமிழ் இலக்கியத்தைப் படைத்துள்ளார்.

இந்நூலில் அமைந்துள்ள ஒவ்வொரு பாடலும்- ஒவ்வொரு சொல்லும் தமிழினவுணர்வையும் தமிழ்மொழியுணர்வையும் தாங்கி வருகின்றன. படையல் என்னும் பகுதி கவிஞரின் உயர்நோக்கைச் சிறப்புறக் காட்டுகிறது.

"நெருப்பாற்றில் மூழ்கிடினும்
நினைவாற்றில் மனமுருகி
நெஞ்சொடிந்தும் இனம்தழைக்கத் தொண்டு!
பொருப்பாற்றல் கொண்டுமனம்
புகழாற்றில் வீரயினம்
புதுமையுறும் வழிமுறைகள் கண்டு!
உருப்பாற்றல் அழிவுறினும்
உயிராற்றல் மடிவுறினும்
உயிர்த்தமிழின் பீடெல்லாம் விண்டு,
விருப்பாற்றும் இனம்-மொழியின்
விடுதலையர்க் கிந்நூலே
விருந்தோம்பும் படையல்பூச் செண்டு"

காப்புப்பருவப் புதுமை

தமிழரின் வழிபாட்டு நெறி இயற்கையை வழிபடுவதே என்ற அடிப்படையில் காப்புப்பருவத்தில் தேவநேயப் பாவாணராகிய குழந்தையைக் காக்குமாறு கதிர், நிலா, கடல், நிலன், விசும்பு, தண்ணீர், நெருப்பு, தென்றல், மரம் ஆகிய இயற்கைப் பொருட்களை வேண்டுகிறார். மேலும் காப்புப்பருவத்திலே சான்றோர், மக்கள் ஆகியோர் குழந்தையைக் காக்குமாறு வேண்டிப் பாடுவது முற்றிலும் புதுமை. ஏராளமான தமிழ்ப்புலவர்கள் வாழ்ந்திருப்பினும் சில புலவர்களை மட்டுமே காக்குமாறு வேண்டுகிறார்.

"வள்ளுவமும் வாழ்சிலம்பும் மாப்பரணி மேகலையும்
மண்ணகம்வாழ் தமிழ்ப் பெயரால் ஆன்றீர்
தெள்ளுதமிழ் நக்கீரர்! திகழ்மருத இளநாக!
செழுந்தமிழ்ப் பெருவழுதிச் சான்றீர்!

புல்லுதமிழ் பூங்குன்றல் பொன்முல்லை மாசாத்தி
புகழவ்வை நப்பசலை தோன்றீர்"

எனத் தன்னுள்ளங்கவர் புலவர்பெருமக்களிடம் காப்பு வேண்டுவர்.

பாடல் எண்ணிக்கையில் புதுமை

பிள்ளைத்தமிழில் பத்துப்பருவங்களுக்குப் பத்துப்பாடல்கள் வீதம் நூறு பாடல்கள் பாடுவதே மரபு. ஆனால் இப்பிள்ளைத்தமிழில் காப்புப்பருவம், முத்தப்பருவம், சிறுதேர்ப்பருவம் ஆகிய மூன்று பருவங்களும் பன்னிரண்டு பாடல்கள் வீதம் பாடப்பட்டுள்ளன. தான் சொல்ல வேண்டிய கருத்துக்கள் அனைத்தையும் சொல்லிவிட வேண்டும் என்ற வேட்கையில் எண்ணிகை மீறினார் போலும்! இலக்கணங்களுக்கு இயையச் 'செய்யப்பட்ட' செய்யுளைத்தான் காணமுடியும். ஆகவே எண்ணிக்கை மிகுதி கவிஞரின் ஆற்றலையே காட்டுகிறது.

தமிழ்மொழிப்பற்று

பாவாணரின் மாணவராம் பாவலர் மலையரசன் கொண்ட தமிழ்ப்பற்றுக்கு இப்பிள்ளைத்தமிழே சான்றாகும்.

பிறமொழிக்கலப்பு

தமிழை வாழ்விக்க வேண்டுமாயின் பிறமொழியைத் தமிழில் கலக்கும் பேதைமையை விட வேண்டும். பிறமொழிக்கலப்பு தமிழில் பெருகுமாயின் அது தமிழுக்கே கேடு பயக்கும் என உணர்த்தியவர் பாவாணர். இப்பாவாணரைக் கவிஞர் 'தனித்தமிழில் மீமிசையின் வானே' எனப் போற்றிப் பரவுகின்றார்.

**இருவகை உத்தி:**

பாவலர் மலையரசன் உடன்பாடு, எதிர்மறை என இருவகை உத்தியின் மூலம் தமிழ்ப்பற்றை வெளியிடுவர். தமிழ்மொழிப்புகழ்ச்சி தமிழ்ச்சான்றோர்ப்புகழ்ச்சி (முத்தப்பருவம் 7,8). இவ்வுத்திகள் கவிஞர் மலையரசனின் தமிழ்ப்பற்றைத் தெள்ளிதின் உணர்த்துகின்றன.

**பத்துமலைத் திருமுகன் திருவந்தாதி**

கவிஞர் டி.வி.ஆர்.பி. இராகவன் பிள்ளை அவாவின் வெளிப்பாடே பத்துமலைத் திருமுருகன் திருவந்தாதி. சிற்றிலக்கியங்களில் இவ்வருட்திறனைப் போற்றுவதனை நோக்கமாகக் கொண்டு இவ்வந்தாதி நூலையும், பிள்ளைத்தமிழையும் பாடியுள்ளார் கவிஞர். இவ்வந்தாதியில் சமுதாயச்சிந்தனைகள், புராணக்கருத்துக்கள், இறையியல்புகள், கவிநயம் ஆகியவற்றை எடுத்துரைக்கிறார்.

**வேலவன் வெண்பா நூறு**

சிற்றிலக்கியங்கள் பாடப்படும் பொருண்மை காரணமாகவும், பாவகை காரணமாகவும், பாடலெண்ணிக்கை காரணமாகவும் பெயர்பெறும். இவ்வடிப்படையில் 'வேலவன் வெண்பா நூறு' என்ற சிற்றிலக்கியப் பாவகை அடிப்படையில் 'வெண்பா' என்னும் இலக்கிய வகையாகவும், எண்ணிக்கை அடிப்படையில் உருவான ஓர் இலக்கியவகையாகவும் கருதத்தக்கது. இந்நூலாசிரியர் ஐ. இளவழகு. இவர் பாவாணர் ஐ.உலகநாதனின் இளவல். கவிபுனைவதில் வல்லவர். மலேசியத் தமிழிலக்கியத்தின் அனைத்துத்துறைகளிலும் அரும்பணிபுரிந்து வருபவர். (1991:126)

இந்நூல் முருகனின் சிறப்பு, அருந்திறம், புராணக்கருத்துக்கள், தத்துவச்சிந்தனைகள் ஆகியவற்றைக் கொண்டுவிளங்கும் பக்திச் சிற்றிலக்கியமாகும்.

இவ்வாறாக, சங்க இலக்கியங்களில் ஊற்றுக்கால்களாகப் பாடல்களின் இடை இடையே தோன்றிய சிற்றிலக்கிய வகைமைகள் வளர்ச்சி பெற்று அயலகத் தமிழர்களின் படைப்பிலக்கியங்களிலும் வளர்ச்சி பெற்றுள்ளமை உற்று நோக்கத்தக்கது.

**துணைநூல்கள்**

1. இலக்குமி மீனாட்சி சுந்தரம், 1991, இலக்கிய அரும்புகள், ஜெயபக்தி பதிப்பகம், கோலாலம்பூர்.
2. இலக்குமி மீனாட்சி சுந்தரம், 1995, சிங்கப்பூர்த் தமிழிலக்கியம் ஒரு கண்ணோட்டம், எட்டாவது உலகத் தமிழ்மாநாடு விழாமலர், பக். 214-216, தஞ்சாவூர்.

| எண் | சிற்றிலக்கியங்கள் | ஆசிரியர் |
|---|---|---|
| 1. | மரத்தாண்டவர் வருகைப் பதிகமும் காவடிச் சிந்தும் | வே. இராமநாதன் செட்டியார் |
| 2. | பத்துமலை சக்தி வடிவேலர் பேரில் காவடி அலங்கார ஆசிரிய விருத்தம் | எஸ். குணபதி |
| 3. | வண்ணை அந்தாதி | எஸ்.என். சதாசிவ பண்டிதர் |
| 4. | வண்ணை நகர் ஊஞ்சல் | |
| 5. | சிங்கை அந்தாதி | |
| 6. | சிறம்பான் ஸ்ரீ தண்டாயுதபாணி திருவருட்கோவை | சுப்பிரமணியம் அய்யாத்துரை |
| 7. | பத்துமலை கந்தசாமி பேரில் | எம்.வி.செல்லையா |

கீர்த்தனைகளும் பதிகங்களும்

8. பத்துமலை சக்தி வடிவேலர் பேரில் காவடி அலங்கார ஆசிரிய விருத்தம் — எஸ். ஞானபதி
9. தைப்பூச அலங்காரம் என்னும் வழிநடைச் சிந்து
10. அருள்நெறி வெண்பா — நாச்சிகுளத்தார்
11. இன்பரசக் கீர்த்தனைகள்
12. செந்துறை வெண்பா
13. செந்நெறிப் பாமாலை
14. திருநெறி ஐநூறு
15. சிங்கைநகர் சுப்பிரமணிய சுவாமி விருத்தம் — கே. மாரிமுத்தன்
16. கீர்த்தனத்திரட்டு — முகம்மது அப்துல் காதிர்
17. சீறாத்திருத்தம் — முகம்மது சுல்தான் மரைக்காயர்
18. பதாநந்த மாலை
19. அறிவியல் வெண்பா — முகம்மது யூசப் பாவலர்
20. சிங்கை முருகேசர் பேரில் பதிகம் — க. வேலுப்பிள்ளை
21. பினாங்கு தண்ணீரமலைத் தண்டாயுதபாணிபிள்ளைத்தமிழ் — சிவானந்தன்
22. மறைமலையடிகள் பிள்ளைத்தமிழ் — சி. அன்பானந்தம்
23. கோலாலும்பூர் மகாமாரியம்மன் பிள்ளைத்தமிழ் — வா. மு.சேதுராமன்
24. பதுமலை முருகன் பிள்ளைத்தமிழ் — டி.வி.ஆர்.பி. ராகவன் பிள்ளை
25. பாணர் பிள்ளைத்தமிழ் — பெ.கோ. மலையரசன்
26. பத்துமலைத்திருமுருகன் திருவந்தாதி — டி.வி.ஆர்.பி. ராகவன் பிள்ளை
27. வேலவன் வெண்பா நூறு — ஐ. இளவழகு

# ஈழப்பெண் கவிஞர்களின் கவிதைகளில் பெண்குரல்

முனைவர் ரெ.மல்லிகா(எ)அரங்கமல்லிகா
இணைப்பேராசிரியர்,
எத்திராஜ்மகளிர் கல்லூரி,சென்னை.8

ஈழத்துப் படைப்புகள் நாற்பதுகளில் தொடங்குகின்றன. பாரதிதாசனின் தாக்கத்திற்குப் பிறகு, கவிதைகளில் ஓர் எழுச்சி ஏற்படுத்தியது மகாகவி, நீலவாணன், இ.முருகையன், சில்லையூர் செல்வராசு எனப் பட்டியல் நீள்கிறது. ஈழத்து நவீனக் கவிதையுலகின் புதியபோக்கு ஒன்றும், மொழி உணர்ச்சிக் கவிதைகளின் வரவும் இக்காலப்பகுதியில் இடம்பெறுகின்றன. ஈழத்தின் அனைத்துப் பிரதேசங்களும் நவீனக் கவிதை உலகினுள் நுழைவது இத்தகைய கவிதைப்போக்கினூடே எனலாம். (உ.ம்) சச்சிதானந்தம் (யாழ்ப்பாணம்), இராஜபாரதி, ஆரையூர் அமரன், எருவில் மூர்த்தி, ஜீவாஜீவரத்தினம், நீலவாணன் இவர்கள் மட்டக்களப்பு, சக்திபாலையா (மலயகம்), வன்னியூர்க்கவிராயர் (வன்னி), தாமரைத்திவான் (திருகோணமலை) இத்தகைய கவிஞர் குழாத்தினருள் விதந்துரைக்கப்படுவர் கவிஞர் காசிஆனந்தனாவார். இது ஐம்பதுகளிலும் தொடர்கிறது. அறுபது எழுபதுகளில் மார்க்சிய அணுகுமுறையோடு கூடிய கவிதைகள், பிறகு புதியபோக்குகளைக் குறிப்பாகப் படிமம், குறியீடுகள் உள்ளடக்கிய கவிதைகள் வெளிவருகின்றன. (உ.ம்) தருமுசிவராம் படிமக் கவிஞராக அடையாளப்படுத்தப்பட்டவர். இவரைத் தொடர்ந்து நுக்மான் குறிப்பிடத்தக்கவர். (எ.கா)

"கார்கள் எல்லாம் போன பிறகு
ஹோட்டல் கதவுகள் மூடியபிறகு
விளக்குகள் எல்லாம் அணைந்த பிறகு
அவர்கள் வருவர் .... சப்பி எஞ்சிய இறைச்சிச் சவ்வுகள்
கைதுடைத்த கடுதாசித் துண்டுகள்
கோழி முட்டைகள்
நண்டு கோதுகள்
காய்கறி அரிந்த கழிவுகள் நூடுல்ஸ்...
குப்பைத் தொட்டியில் குவிந்து கிடக்கும்
அவர்கள் வருகையிலே

நின்று சுவைத்த
பூனைகள் நாய்கள்
பொறாமையோடு விலகிச்செல்லும்
தொலைவில்
அவர்கள் முகத்தைப் பார்த்தவாறே
உட்கார்ந்திருக்கும்
ஒவ்வொரு நாளும் ஒவ்வொருவரும்...
(தி.ஞானசேகரன், ஞானம், ஈழத்து நவீன இலக்கியச் சிறப்பிதழ் பக்.14 15,செப்டம்பர், 2008)

எழுபதுகளிலிருந்து எண்பது வரையில் சு.வில்வரத்தினம், வ.ஐ.ச.செயபாலன், அ.யேசுராசா ஆகியோர் குறிப்பிடத்தக்கவர். எண்பது தொண்ணூறுகளில் ஈழத்து நவீனக் கவிதையின் உள்ளடக்கம் போர்ச்சூழலை மையமிட்டதாக அமைகிறது.

இன ஒடுக்குமுறைக்கெதிராக எதிர்ப்புக்குரல் எழுப்பியோருள் ஒருசாரார் மனிதாபிமான நோக்குடையவராக விளங்கினர். மற்றொருசாரார் தமிழ்த் தேசியநோக்குடையவராகக் காணப்பட்டனர். இவர்களுள் ஒரு சாரார் தமிழீழத்திற்கான விடுதலை இயக்கங்களைச் சார்ந்து உருவாகினர். இவ்வாறான இயக்கங்கள் சார்ந்த இக்காலக் கவிஞர்களுள் புதுவை இரத்தினதுரை, தமயந்திசெழியன், சூரியன், மு.பஷீர் முதலானோர் குறிப்பிடத்தக்கவர்கள். (ஞானம்,15)

எண்பதுகள் வரையில் ஆண்கள் இலக்கியத்தடத்தில் வெகுவாக வளர்ந்துவரப் பெண்நிலைவாதம் 75-85களில் உலகளாவிய பார்வையில் வெளிப்பட்டபோது தமிழ்ப் பெண்களின் முதற்கவிதைத் தொகுதியாக, 'சொல்லாத சேதிகளின்' என்ற கவிதைத் தொகுப்பைச் சுகந்தி சுப்பிரமணியம் கொண்டு வருகிறார். முக்கியமாக,

"எனக்கு
முகம் இல்லை
இதயம் இல்லை
ஆத்மாவும் இல்லை
அவர்களின் பார்வையில் இரண்டு மார்புகள்
நீண்ட கூந்தல்
சிறிய இடை
பருத்த தொடை
இவைகளே உள்ளன.
சுமையல் செய்தல்
படுக்கையை விரித்தல்
குழந்தை பெறுதல்
பணிந்து நடத்தல்
இவையே எனது கடமையாகும்.

கற்பு பற்றியும்
மழைபெய்யெனப் பெய்வது பற்றியும்
கதைக்கும் அவர்கள்
எப்போதும் எனது உடலையே நோக்குவர்.
கணவன் தொடக்கம் கடைக்காரன் வரைக்கும்
இதுவே வழக்கம்." (அ.சங்கரி,ஞானம்,பக்.18-19)

இத்தகைய வளர்ச்சியுடன் ஈழக்கவிதைகள் வெளிவந்தாலும் இன ஒடுக்குமுறையால் புலம்பெயர்ந்த தமிழர்கள் புலம்பெயர் இலக்கியத்திலும் புத்தடம் பதித்துள்ளனர். புலம்பெயர் இலக்கியம் குறிப்பாக, ஈழத்தமிழர் படைப்புகளையே குறிப்பிடுகின்றது. இப்படி இடம்பெயர்ந்தவர்கள் போராட்டங்களை எதிர்கொண்டவர்களாகவும், விடுதலையை நெருக்கமாக்கியவர்களாகவும் இருக்கிறார்கள். இன ஒடுக்கு முறையிலும் பெண்ணின் ஒடுக்குமுறைப் பதிவுகள் வீரியம் பெறுகின்றன. குறிப்பாக ரஞ்சனி, ஔவை, ஆழியாள்.... இன்னும் பலரைச் சொல்லலாம்.

பெண்களின் படைப்புகளிலே பெண்களுக்கெதிரான அனைத்து ஒடுக்குமுறைகளுக்கும் எதிராகக் குரல்கொடுக்கும் நிலையும் பெண்கள் மத்தியிலும் சமூகத்தின மத்தியிலுமிருக்கும் கோட்பாடுகளைக் கேள்விக்குட்படுத்தும் சந்தர்ப்பங்களும் பெண்களின் படைப்புகளிலே அவதானிக்க முடிகின்றது. ரஞ்சனி, மல்லிகா, நிருபா, மைத்ரேயி, ப்ரதீபா, ஆழியாள் ஆகியோரின் கவிதைகளிலே இதனைக் கண்டுகொள்ளலாம். பெண் கவிஞர்களின் 'மறையாத மறுபாதி' என்ற கவிதைத் தொகுதி இவ்வகையில் முக்கியமானது. இவைதவிர ஊடறு, பெண்கள் சந்திப்புமலர்கள் என்பவையும் கவனத்திற்குரியன. (சு.குனேசுவரன், அலைவும் உலைவும், புலம்பெயர் படைப்பிலக்கியம் குறித்த பார்வைகள், தினப்புனம் வெளியீடு, செப்டம்பர், 2009, ப.34)

உரத்துப்பேச((2000) கவிதைத் தொகுப்பினூடாக ஈழத்துப் பெண் கவிஞர்களில் ஒருவராகப் பெண் படைப்புலகில் கூர்மையாக எழுதிவருபவர் ஆழியாள். துவிதம் என்ற கவிதைத் தொகுதியையும் வெளியிட்டிருக்கிறார்.

"பெண் ஒடுக்குமுறையும், அதற்கெதிரான எழுச்சியும் பெண் தன் சுய அடையாளத்தை வெளிப்படுத்தலுமாக இதுவரை பயணித்து வந்த பெண்படைப்பாளிகளின் படைப்புகள் எவ்வளவு தூரம் முக்கியமோ அதே அளவு பெண் தனக்கான மொழியைக் கட்டமைக்கும் சிந்தனையும் அதற்கான செயற்பாடுகளும் தற்கால இலக்கிய உலகில் முக்கியமானவையாக அமைந்துள்ளன. (அலைவும் உலைவும், ப.90)

இது தவிர அன்னாரது எனக்குக் கவிதைமுகம், வினோதினியின் முகமூடி செய்பவள், தமிழ் நதியின் சூரியன்

தனித்தலையும் பகல், ஆகர்ஷியியாவின் நம்மைப் பற்றிய கவிதை, பீமாஜெகானின் ஒரு கடல் நீரூற்றி ஆகிய தொகுதிகளும் கடந்த வருடத்திலே வெளியாகின.

ஆணுக்கும் பெண்ணுக்குமான இடைவெளிகளை உறுதிப்படுத்தும் பண்பாட்டு விழுமியங்கள் பெண்களின் கவிதைகளின் விவாதமாகின்றன. சொல்லப்படாத உண்மைகளை வெளியில் சொல்லச் சொல்லிய கதையாடல்களை வினாவிற்குட்படுத்தும் பெண்கள் தன்னடையாளம், இரக்கத்தை எதிர்த்தல், கழிவிரக்கம் பேசுவதைத் தவிர்த்தல், சுயச்சார்பை நிர்மாணித்தல், போர்ச்சூழலை எதிர்கொள்ளல், பாலியல் வதைக்குட்படும் பெண் சிங்கள ஆணைப்பார்த்து உன் சகோதரிகள் எங்கள் சகோதரர்களின் கருவைச் சுமக்கும்காலம் வெகுதொலைவில் இல்லை என எதிர்க்குரல் கொடுத்தல் என இவர்களின் பார்வை விசாலப்பட்டிருக்கின்றதைக் கவிதைகளினூடாக அவதானிக்கலாம்.

"அற்றைத் திங்கள் அவ்வெண் நிலவின்,
எந்தையும் உடையேம்: எம்குன்றும் பிறர் கொள்ளார்:
இற்றைத் திங்கள் இவ்வெண் நிலவின்,
வென்று எறி முரசின் வேந்தரெம்
குன்றும் கொண்டார்: யாம் எந்தையும் இலமே." (புறம்:112)

என்ற பாடலில் பாரியின் ஆட்சி, அதிகாரம், கொடைப்பண்பு உள்ளிட்டவைகளைப் பெருமையோடு பார்த்துக் கொண்டிருந்த நேற்றைய நிலா இன்றைக்குப் பாரியின் குன்று தொலைந்து ஆட்சி அதிகாரமிழந்து அவருடைய மகளிர் தனிமைப்பட்டுத் தந்தையை இழந்த துயரைத் தன்னிரக்கமாகப் பாடிய சங்கப் புறப்பாடலினும் தமிழ் ஈழ விடுதலையில் போர்க்குரலைக் கலகக் குரலாக முன்னெடுக்கும் ஈழப் பெண் கவிஞர்களின் கவிதைகள் இனஅழிப்பை அடையாளப் படுத்துவதோடு, ஈழத்தமிழ் விடுதலை வேட்கையை முன்னெடுக்கின்றன என்பது குறிப்பிடத்தக்கது.

தொகுப்பாக, 1940களில் ஈழத்தமிழர் கவிதைகள் வெளிவருகின்றன. 1980களில் எழுந்த ஈழத்தமிழர் இன அழிப்பு பெண் கவிஞர்களை அடையாளப்படுத்துகின்றது.

தன்னுணர்ச்சிக் கவிதைகளை எழுதினாலும் பெண்கள் ஈழத்தமிழர் விடுதலைக் குரலாக ஒலிப்பது அவதானிக்கத் தக்கது.

சங்ககாலப் பெண் புலவர்களின் வீரியக்குரல் ஈழத்தமிழ்ப்பெண் கவிஞர்களின் குரலோடு ஒத்தும், வேறுபட்டும் இருப்பதை விரிவாக ஆய்வுக்குட்படுத்தலாம்.

# வெளிநாடுகளில் கண்டறியப்பட்ட செவ்வியல் இலக்கியகாலச் தொல்லியல் சான்றுகள்

முனைவர் வெ.வேதாசலம்
தொல்லியல் ஆய்வாளர், மதுரை

ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட பழந்தமிழ் இலக்கியங்கள் வெளிநாடுகளிலிருந்து வந்து தமிழ்நாட்டோடு வணிகம் செய்த வணிகர்கள் பற்றிய செய்திகளைத் தருகின்றன. குறிப்பாக மேற்கத்திய நாடுகளிலிருந்து வந்த யவனர் என்றழைக்கப்பட்ட உரோமானிய வணிகர்கள் பொன்னையும் (தங்கக்காசுகள்) மதுவையும் தமிழ்நாட்டிற்குக் கொண்டு வந்து கொடுத்து, மிளகு, மணிகள், முத்துக்கள் முதலியவற்றைத் தமிழகத்திலிருந்து பெற்றுச் சென்றுள்ளனர் என்பதற்கு ஆதாரமாகப் பழந்தமிழ் இலக்கியச் சான்றுகளோடு அண்மைக் காலத்தில் கண்டறியப்பட்ட ஏராளமான தொல்லியல் சான்றுகளும் உள்ளன. கிரேக்க, உரோமானியர் காசுகளோடு உரோமானியரது மண்பாண்டங்கள் அரிக்கமேடு, அழகன்குளம் போன்ற இடங்களில் செய்யப்பட்ட அகழாய்வில் கண்டறியப்பட்டுள்ளன. உரோமானியரது மதுசாடிகள் வசவசமுத்திரம், அரிக்கமேடு முதலிய இடங்களில் கிடைத்துள்ளன. இந்நிலையில் தமிழகத்திற்கு அப்பால் கடற்பயணம் மேற்கொண்டு மேற்கத்திய நாடுகளோடும் கிழக்காசிய நாடுகளுடனும் தமிழ்வணிகர்கள் வணிகம் செய்துள்ளனர் என்பதற்குப் பல தொல்லியல் சான்றுகள், வெளி நாடுகளில் நடைபெற்றுள்ள அகழாய்வுகளில் கண்டறியப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது. இதனை இக்கட்டுரை விரித்துரைக்கிறது.

## மேற்கு நாடுகள்

அரபிக்கடலில் பயணம் செய்து செங்கடல் வழியாகக் கிரேக்க, உரோமானிய நாடுகளோடு சில தமிழ் வணிகர்கள் வணிகம் செய்துள்ளனர். மேலும் சில தமிழ்வணிகர்கள் அரபிக்கடலில் பயணம் செய்து பாரசீக வளைகுடா வழியாக அரேபிய பாரசீக வளைகுடா நாடுகளுடன் வணிகம் செய்துள்ளனர். இதனை உறுதிப்படுத்துகின்ற வகையில் தமிழ் பிராமி எழுத்துக்களில் தமிழ் வணிகர் பெயர் பொறிக்கப்பட்ட மட்பாண்டங்கள் அப்பகுதிகளில் அமைந்த துறைமுகப் பட்டினங்களில் அண்மைக்காலத்தில் செய்யப்பட்ட அகழாய்வில் கண்டறியப்பட்டுள்ளன.

எகிப்து நாட்டில் செங்கடலை ஒட்டியுள்ள துறைமுகப் பட்டினங்களான குசேர்-அல்-காதீம் (Quseiral-Qadim) பெரனிகே

(Berenike) ஆகியவற்றில் தமிழ்வணிகர் பெயர் பொறித்த சங்ககால மட்கலன்கள் கிடைத்துள்ளன. இவற்றைத் தமிழ்வணிகர்கள் தாங்கள் பயணம் செய்யும்போது பயன்படுத்த எடுத்துச்சென்றிருக்க வேண்டுமெனத் தோன்றுகிறது. இதுவரை இத்துறைமுகப் பட்டினங்களில் செய்யப்பட்ட அகழாய்வுகளில் குசேர்-அல்-காதிம் துறைமுகப் பட்டினத்தில் பின்வரும் தமிழ்-பிராமி பொறிப்புள்ள மூன்று மட்பாண்டங்கள் கிடைத்துள்ளன[1]. இவற்றின் எழுத்தமைதியைக் கொண்டும் அகழாய்வுக்குழியின் மண்ணடுக்கைக் கொண்டும் இவற்றின் காலத்தைக் கி.பி.முதலாம் நூற்றாண்டு எனக் கணித்துள்ளனர்.

### குசேர்-அல்-காதிம்-மட்கலப்பொறிப்புகள்

1. சாதன் (சாத்தன்)
2. கணன் (கண்ணன்)
3. பனைஓறி (பனையோறி)

சாத்தன் என்ற சொல்லே சாதன் என்றும் கண்ணன் என்ற சொல்லே கணன் என்றும் எழுதப்பட்டுள்ளது. சாத்தன், கண்ணன் என்ற பெயர்கள் தமிழகத்து வணிகர் பெயர்களாக இருக்க வேண்டும். பனையோறி என்ற பெயரே பனைஓறி என்று எழுதப்பட்டுள்ளது. பனையோறி என்ற பெயரே கொல்லிமலையை ஆண்ட வல்வில் ஓரியின் பெயரை நினைவூட்டுகிறது. இப்பெயர் இரண்டுமுறை மட்பாண்டத்தின் இருபக்கங்களின் வெளிப்புறத்தில் எழுதப்பட்டுள்ளது.

### பெரனிகே – மட்கலப்பொறிப்பு

செங்கடல் பகுதியில் குசேர்-அல்-காதிம் துறைமுகப்பட்டினத்திற்குத் தெற்கே அமைந்த பெரனிகே என்று அழைக்கப்படும் துறைமுகப்பட்டின அகழாய்வில் கிடைத்த மதுஜாடியில் கொறபூமான் (கொற்றபூமான்) என்ற தமிழ்ப்பெயர் பொறிக்கப்பட்டுள்ளது[2].

கொற்றபூமான் என்பதே "கொறபூமான்" என்று எழுதப்பட்டுள்ளது. இவ்வெழுத்துப் பொறிப்புள்ள மதுஜாடி கி.பி. 60க்கும் 70க்கும் இடைப்பட்ட காலத்தைச் சார்ந்தது எனத் திட்டவட்டமாகக் காலக்கணிப்புச் செய்துள்ளனர்.

### கொற்கொறி-ஓமன்நாடு

பராசீக வளைகுடாவின் தொடக்கத்தில் அமைந்த ஓமன்நாட்டுப் பண்டைய துறைமுகப் பட்டினமான கோரிரோரியில் (khor khori) 1912ஆம் ஆண்டு தமிழ்பிராமி எழுத்துப் பொறிப்புள்ள கி.பி.முதலாம் நூற்றாண்டைச் சேர்ந்த உடைந்துபோன பானையோடு ஒன்று அகழாய்வில் கிடைத்துள்ளது[3]. பராகசீக வளைகுடாப் பகுதியில் தமிழ்-பிராமி எழுத்துப்பொறிப்புள்ள பானையோடு கிடைத்திருப்பது

இதுவே முதன்முறையாகும். இம்மட்கலன் கண்டறியப்பட்ட துறைமுகம் சும்குரம் (Sumkuram) என்ற பெயரில் விளங்கிய பழமையான துறைமுகமாகும். இங்குக் கிடைத்த மட்பாண்டம் முழுமையற்று உடைந்து போன நிலையில் கிடைத்திருப்பதால் இதிலுள்ள முழுமையான தமிழ்ப்பெயர் வடிவத்தை அறியமுடியவில்லை. உடைந்துபோன பானையோட்டில் ....ணந்தைகிரன் என்னும் வாசகம் காணப்படுகிறது.

அந்தை, கீரன் என்ற பெயர்கள் சங்க இலக்கியங்களிலும் தமிழ்நாட்டில் காணப்படும் சங்ககாலப் பிராமிக் கல்வெட்டுகளிலும் காணப்படும் பெயர்களாகும். பிசிராந்தை, அருவந்தை, குட்டுவன், கீரனார், குடவாயில் கீரத்தனார் முதலிய பெயர்கள் சங்க இலக்கியங்கள் காட்டும் பெயர்களாகும். தமிழ்-பிராமி கல்வெட்டு களிலும் அந்தை, கீரன்கொற்றி முதலிய பெயர்கள் இடம்பெற்றுள்ளன.

### வியன்னா அருங்காட்சியகச் சுவடி

வியன்னா அருங்காட்சியகத்திலுள்ள கி.பி.இரண்டாம் நூற்றாண்டைச் சார்ந்த பேபிரஸ் சுவடியில் கிரேக்க மொழியில் எழுதப்பட்ட ஆவணம் தமிழ்வணிகரின் வெளிநாட்டு வணிகம் குறித்த முக்கியமான தகவலைத் தருகிறது.[4] இந்த ஆவணம் முழுமையாகக் கிடைக்கவில்லை. இந்த ஆவணம் முசிறியில் உள்ள தமிழ் வணிகன் ஒருவனுக்கும் அலெக்சாண்டிரியாவிலுள்ள மற்றொரு வணிகனுக்கும் இடையே செய்துகொண்ட உடன்படிக்கை குறித்துத் தெரிவிக்கிறது. முசிறியிலுள்ள வணிகன் கீழ்க்கண்ட அளவுள்ள வணிகச்சரக்குகளை முசிறியிலிருந்து எடுத்துக்கொண்டு கடல்கடந்து சென்று அலெக்சாண்டிரியாவிலுள்ள வணிகனிடம் ஒப்படைக்க வேண்டும்.

| | | |
|---|---|---|
| 1. | வாசனைத்திரவியங்கள் | 700 முதல் 1700 வரை |
| 2. | தந்தப்பொருட்கள் | 4700 பவுண்டு |
| 3. | துணிவகைகள் | 790 பவுண்டு |

இச்சரக்குகளின் மதிப்பானது நைல்நதி பாயும் நன்செய் நிலத்தில் 2400 ஏக்கர் நிலத்திற்கு ஒப்பானது என்று வியன்னா அருங்காட்சியக ஆவணத்தை ஆய்வுசெய்த ஆய்வாளர் கருதுகின்றார்.[5] இச்சரக்குகளை முசிறிவணிகன் முசிறியிலிருந்து தன் பொறுப்பில் எடுத்துச்சென்று செங்கடல் துறைமுகத்தில் இறக்கி ஒட்டகத்தில் ஏற்றிப் பாலைவனப் பாதையில் சரக்குகளுடன் பயணம் செய்து நைல்நதிக் கரையிலுள்ள கோப்டாஸ் நகரத்தை அடையவேண்டும். அங்கிருந்து மரக்கலங்களில் சரக்குகளை ஏற்றி அலெக்சாண்டிரியா அடைந்து ஒப்பந்தப்படி சரக்குகளை அலெக்சாண்டிரியாவிலுள்ள வணிகனிடம் ஒப்படைக்க வேண்டும் என்று வியன்னா ஆவணம் கூறுகிறது. இந்த ஆவணத்தின் மூலம் தமிழ் வணிகர்களும் சரக்குகளை முசிறியிலிருந்து ஏற்றி அலெக்சாண்டிரியா விற்குக் கடற்பயணம், பாலைவனப் பயணம், நைல்நதிப்பயணம் மேற்கொணடு

வணிகம் செய்திருக்கின்றார்கள் என்பது தெளிவாகிறது. இதனைச் செங்கடல் துறைமுகப்பட்டினங்களில் செய்யப்பட்ட அகழாய்வில் கிடைத்த தமிழ்ப்பெயர் பொறித்த பானையோடுகளும் உறுதிப்படுத்துகின்றன.

## கிழக்கு ஆசிய நாடுகளுடன் வணிகம்

தமிழ்நாட்டு வணிகர் பல்லவர் காலத்திலிருந்தே கிழக்காசிய நாடுகளுடன் வணிகத்தொடர்பு கொண்டிருந்தார்கள் என்ற கருத்திற்கு மாறாகச் சங்ககாலத்திலேயே வணிக உறவு வைத்திருந்தார்கள் என்பதற்குத் தொல்லியல் சான்றுகள் கிடைத்துள்ளன. தாய்லாந்து நாட்டில் புகாவ்தோவ் என்ற இடத்தில் செய்யப்பட்ட அகழாய்வில் மூன்று தமிழ்-பிராமி எழுத்துக்கள் கொண்ட கி.பி.2ஆம் நூற்றாண்டுப் பானையோடு ஒன்று கிடைத்துள்ளது. இதில் 'துறஓ' என்று எழுத்துக்கள் காணப்படுகின்றன.[6]

தாய்லாந்தில் கிளாங்தோம் என்ற துறைமுகப்பட்டினத்தில் புலிவுருவம் பொறித்த சங்ககாலச் சோழர் காசு ஒன்றும் பொற்கொல்லர் தங்கத்தின் மாற்றைக் கண்டறியப் பயன்படுத்தும் 'கட்டளைக்கல்' ஒன்றும் கிடைத்துள்ளன.[7] கட்டளைக் கல்லில் 'பெரும்பதன்கல்' என்று தமிழில் எழுதப்பட்டுள்ளது. இதன் காலத்தைக் கி.பி.3-4ஆம் நூற்றாண்டு எனக் கணித்துள்ளனர். பெரும்பத்தன் என்ற பெயரே பெரும்பதன் என்று கட்டளைக்கல்லில் எழுதப்பட்டுள்ளது. தமிழ்நாட்டுப் பொற்கொல்லர்கள் சங்ககாலத்தின் இறுதியில் தாய்லாந்தில் இருந்திருக்கின்றார்கள் என்பதற்கு எழுத்துப்பொறிப்புள்ள இக்கட்டளைக் கல் தெளிவான சான்றாகும்.

## இலங்கையுடன் வணிகம்

தமிழ்நாட்டிற்கு மிக அண்மையிலுள்ள இலங்கைக்கும் தமிழ்வணிகர் சென்று வணிகம் நடத்தியமைக்கான சான்றுகள் இலங்கை முழுவதும் கண்டறியப்பட்டுள்ளன. இலங்கையில் அநுநாதபுரம், பெரியகுளம், குடுவில் போன்ற இடங்களில் உள்ள பிராமிக் கல்வெட்டுகளில் தமிழ்வணிகர் குறிப்பிடப்படுகின்றனர்.[8] கந்தரோடையிலும் அநுராதபுரத்திலும் கி.மு.இரண்டாம் நூற்றாண்டைச் சார்ந்த பெருவழுதி என்று பெயர் பொறித்த பாண்டியரது நாணயங்கள் கண்டறியப்பட்டுள்ளன.[9] பூநகரிப் பகுதியில் சங்ககாலச் சோழர் நாணயங்களும் சங்ககாலப் பாண்டியர் நாணயங்களும் கிடைத்துள்ளன.[10]

## முடிவு

வெளிநாடுகளில் கண்டறியப்பட்ட மேற்கண்ட தொல்லியல் சான்றுகள் வெளிநாட்டவரே தமிழகத்திற்கு வந்து வணிகத்தில் ஈடுபட்டுள்ளனர் என்ற கருத்திற்கு மாறாகத் தமிழ்வணிகர்களும் மேலை மற்றும் கீழைநாடுகளுக்குச் சென்று கடல் பயணத்தின் மூலமாக வணிக நடவடிக்கையில் ஈடுபட்டுள்ளனர் என்பதைக் காட்டுகின்றன.

வெளிநாடுகளிலுள்ள தொன்மையான துறைமுகப்பட்டினங்களில் செய்யப்படும் அகழாய்வுகளில் தமிழரின் கடல்வணிகம் தொடர்பான சான்றுகள் மேலும் கிடைப்பதற்கு மிகுந்த வாய்ப்புகள் உள்ளன. மேலும் வெளிநாடுகளின் அருங்காட்சியகங்களிலுள்ள தொல் பொருட்களைத் தீவிர ஆய்வுசெய்வதன் மூலம் சங்ககாலத் தமிழர் தொடர்பான தொல்லியல் சான்றுகள் கிடைப்பதற்கு வாய்ப்புகள் உள்ளன.

## குறிப்புகள்


1. S. Sidebotham, W. Willemina, 1996, Berenike 95; Preliminary Report on the excavation of Berenike, Leiden.
2. Iravatham Mahadevan, "Tamil Brahmi Script in Egypt", The Hindu, 21.11.2007.
3. ஐராவதம் மகாதேவன், "எகிப்திய நாட்டில் தமிழில் எழுதிய தாழி" ஆவணம், இதழ்-9, 1998, தமிழகத் தொல்லியல் கழகம், தஞ்சாவூர் பக்.17-19.
4. The Hindu, 28.08.1912.
5. கா.இராஜன், "முசிறித்துறைமுகம் சில புதிய செய்திகள்", ஆவணம், இதழ் 4, தமிழகக் தொல்லியல் கழகம், தஞ்சாவூர், 1994, பக்.107-110.
6. கா.இராஜன், "முசிறி-அலெக்சாண்டிரியா வணிக உடன்படிக்கை: ஒரு தொல்லியல் பார்வை", தமிழகக் கடல்சார் வரலாறு: அண்மைக்கால ஆய்வுகள் (ப.ஆ) ந.அதியமான், பா.ஜெயக்குமார், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 2006, பக்.33-45.
7. W. Casson, "Ancient Naval Technology and Route to India", Rome and India, (ed.) Vimala Begley and Richard Daniel DePuma, Oxford University, 1992, pp.8-11.
8. ஐராவதம் மகாதேவன், "தாய்லாந்தில் தமிழ்-பிராமி பொறித்த பானை ஓடு", ஆவணம், இதழ் 17, தஞ்சாவூர், 2006, பக்.12,13.
9. ப.சண்முகம், "தமிழ்நாடும் தாய்லாந்தும்: தொன்மைத் தொடர்புகள்", ஆவணம், இதழ்-3, தஞ்சாவூர், 1993, பக்.81-84.
10. Paranavitana, Inscriptions of Ceylon: Early Brahmi Inscripitions, The Department of Archaeology Ceylon, Colombo, 1910, No.94.
11. ப. புஷ்பரட்ணம், "இலங்கையில் சங்ககால வர்த்தகம் சில தொல்லியல் சான்றுகள்", தமிழகக் கடல்சார் வரலாறு: அண்மைக்கால ஆய்வுகள், தஞ்சாவூர், பக்.24.
12. மேலது.

# மலேசியக் கவிதைகளில் செவ்வியல் இலக்கியங்களின் தாக்கம்

முனைவர் அ.சோமசுந்தரம்,
பேராசிரியர் மற்றும் துறைத்தலைவர்,
தமிழ்த்துறை உயராய்வு மையம்,
அமெரிக்கன் கல்லூரி, மதுரை.

இத்தலைப்பின்கீழ் ஆராய்வதற்கு முன்பாக, இத்தலைப்பிற்கு உறுதுணைபுரியும் சில அடிப்படைத் தரவுகளை அறிந்து கொள்வது ஆய்விற்கு நலம் பயக்கும். புலம்பெயர்ந்தோருக்குரிய வரைவிலக்கணம், செவ்வியல் இலக்கியத்தின் வரைவிலக்கணம், மலேசியக் கவிதைகளின் வரைவிலக்கணம் ஆகிய இம்மூன்றின் இலக்கணத்தை வரையறுத்துக் கொண்டால் இவ்வாய்வின் பயணம் செவ்வனே அமையும்.

## புலம்பெயர்ந்தோருக்குரிய வரைவிலக்கணம்

புலம்பெயர்ந்தோர் என்ற சொல்லுக்குரிய வரைவிலக்கணத்தை முதலில் கட்டமைக்கலாம். 'புலம்' எனும் சொல்லிற்கு 'இடம்' எனப் பொருள் கொண்டு 'புலம்பெயர்ந்தோர்' என்பதை 'இடம்பெயர்ந்தோர்' எனப்பொருள் கொள்ளலாம். 'புலம்பெயர் மாக்கள் கலத்தினது உறையும்' எனப் பட்டினப்பாலைவரி இதற்குச் சான்று பகர்கிறது.

'புலம்பெயர்ந்தோர்' எனும் சொல் பழைய ஏற்பாட்டின் கிரேக்க மொழிபெயர்ப்பில் முதன்முதலில் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. இது 'டயஸ்போரா' என ஆங்கிலத்தில் 1876 இல் அயர்லாந்து பஞ்சத்தில் பாதிக்கப்பட்ட அகதிகளைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டதாக அறிகிறோம்.

பல்வேறு காரணங்கள் வழிப் புலம்பெயர்ந்தவர்கள், தங்களது நிலையை, தாயகத்தின் நிலையை, பிற இடங்களுக்குச் சென்றபோது அடைந்த துன்பங்களை, வாழும் வாழ்க்கையைக் குறித்துப் பல்வேறு இலக்கிய வகைமைகளில் பதிவு செய்திருக்கின்றனர்.

## தமிழ்ச் செவ்விலக்கியங்களின் வரைவிலக்கணம்

அறிஞர் பெருமக்கள் தமிழ்ச் செவ்வியல் இலக்கியங்கள் என வரையறுத்திருக்கின்ற நூல்கள் நாற்பத்தொன்றாகும். தொல்காப்பியம், பதினெண் மேற்கணக்கு, பதினெண் கீழ்க்கணக்கு, சிலப்பதிகாரம், மணிமேகலை, இறையனார் களவியல் உரை, முத்தொள்ளாயிரம் ஆகியன இப்பட்டியலில் அடங்கும்.

## மலேசியக்கவிதைகளின் வரைவிலக்கணம்

மலேசியக் கவிதைகளின் தொடக்கம் 1887ஆம் ஆண்டு ஆகும். ஏறத்தாழ 125 ஆண்டுகள் நிறைவுறுகின்றன. சூ.கோவிந்தசாமி மலேசிய இலக்கியக் காலக்கட்டத்தை ஏழு வகையாகப் பகுத்துரைக்கிறார். இதை விரிப்பின் ஆய்வு நீளும்.

மலேசியக் கவிதைகள் பரந்து பட்டிருப்பதால் அனைத்தையும் ஆய்விற்கு உட்படுத்த இயலாதநிலை ஏற்படுகிறது. எனவே முரசு நெடுமாறன் தலைமைத் தொகுப்பாசிரியராக இருந்து பதிப்பித்த 'மலேசியத் தமிழ்க்கவிதைக்களஞ்சியம்' எனும் நூலில் உள்ள கவிதைகள் மட்டுமே இங்கு ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப்படுகின்றன.

## தெரிவு செய்த பாடுபொருள்

மலேசியக் கவிதைகளின் பாடுபொருள் விரிவுடையது. தமிழ்ச் செவ்விலக்கியத்தின் அடிநாதமாக விளங்கும் அகம் சார்ந்த பாடுபொருள்களின் தாக்கம் மலேசியக் கவிதைகளில் எங்ஙனம் சித்திரிக்கப்பட்டிருக்கிறது என்பதை ஆராயலாம். இங்கு முப்பதொன்பது கவிதைகள் ஆய்விற்கு உட்படுத்தப்படுகின்றன.

அகம் சார்ந்த பொருண்மையை ஆய்வதற்கு வடிவம் உள்ளடக்கம் எனும் இரண்டு அமைப்பினை மேற்கொள்ளலாம்.

## வடிவம் பின்பற்றப்பட்ட முறைமை

செவ்வியல் இலக்கியங்களின் வடிவங்களாக அகவல், வெண்பா, உரைநடையிட்ட பாட்டுடைச் செய்யுள், உரைநடை ஆகியன திகழ்கின்றன. மலேசியக் கவிஞர்கள் பின்வரும் வடிவத்தை மேற்கொள்கின்றனர்.

1. பழைய மரபை ஏற்றல்
2. புதிய மரபை உருவாக்கல்

## பழைய மரபை ஏற்றல்

அகம் பாடுவதற்குத் தொல்காப்பியர் கலி, பரி என இருவகையமைப்பைக் கட்டமைத்திருந்தாலும் சங்கப்பாடல்கள் பெரும்பான்மை அகவற்பாக்களால் பாடப்பட்டிருப்பது கண்கூடு. எனவே இந்த மரபை உள்வாங்கிய மலேசியக் கவிஞர்கள் அகப்பாடல்களை அகவற்பாக்களிலே பாடியுள்ளனர்.

## புதிய மரபை உருவாக்குதல்

அகம் சார்ந்த மரபை அகவற்பாவாலும் அறம் சார்ந்த மரபை வெண்பாவாலும் பாடுவது மரபு. இதை மலேசியக் கவிஞர்கள் உணர்ந்திருந்தாலும் அதைச் சற்று மாற்றி அகமரபை வெண்பாவிலும் பாடியுள்ளனர். அதை உதிரிப்பாக்களாகப் பாடாமல் திருக்குறள்

அமைப்பில் பத்துப்பாடல்களால் இன்னிசை வெண்பாவில் பாடும் மரபை மேற்கொண்டிருப்பது ஒரு புதுமையான அமைப்பாகும். கரு. வேலுச்சாமியின் 'இதழ்ப்பத்து' கவிதையும், காரைக்கிழாரின் 'இடைப்பத்து'[2] கவிதையும் இத்தகையன.

உள்ளடக்கம் பின்பற்றப்பட்ட முறைமை

மலேசியக் கவிஞர்கள் அகப்பாடல்களைப் பின்வரும் உள்ளடக்கக் கூறுகளைப் பின்பற்றிப் பாடியுள்ளனர்.

1. பழந்தமிழ் நடையைப் பயன்படுத்துதல்
2. திணை சார்ந்தமை
3. துறை சார்ந்தமை
4. சுட்டி ஒருவர் பெயர்கொளாமை
5. வருணனை முறைமை
6. கூற்று முறைமை

பழந்தமிழ் நடையைப் பயன்படுத்துதல்

மலேசியக் கவிஞர்கள் அகக்கவிதைகளை இக்காலமொழிநடையில் மட்டும் பாடாமல் பழந்தமிழ்மொழிநடையிலும் பாடியுள்ளனர். இது சிறப்பிற்குரியது,

புதுமணம் நிறீஇய பொன்மலர் விரியிதழ்
அதுமெனக் குவிந்தவண் கருகிப்போயது
நொதுமல் தவிர்த்திடும் நோக்குடையாகும்

என வி.கே. சுப்பிரமணியம்[3] பாடுவது குறிப்பிடத்தக்கது. இதே மொழிநடையில் தை.சே.ஸ. பொன்னம்பலமும்[4] பாடியிருக்கிறார்.

திணை சார்ந்தமை

மலேசியக் கவிஞர்கள் கைக்கிளை முதலாய்ப் பெருந்திணை இறுவாய் உள்ள எழுதிணைகளை உள்ளடக்கிப் பாடியுள்ளனர். காசிதாசனின் **'தவிக்கிறேன்'** கவிதையும் அதிகைமணியின் **'பாட்டுவரும் நோமும்'** ஏ.நீலகண்டன் மறைவதேன்? கவிதையும் கைக்கிளை மரபைச் சார்ந்தன. **'அண்டைவீட்டில்'** எனும் கவிதை பெருந்திணையின் கூறாகிய தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறத்தை நினைவுகூர்கின்றது.

ஐந்திணை அமைப்பிற்குள் இடம்பெறும் கவிதைகளைப் பின்வருமாறு பாகுபடுத்தலாம்.

1. நிலம் சார்ந்த அமைப்பு
2. உரிப்பொருள் சார்ந்த அமைப்பு

நிலம் சார்ந்த அமைப்பு

மலேசியக் கவிஞர்கள் முதற்பொருள் சார்ந்த கவிதைகளை வடிக்கவில்லை. எனினும் முரசு நெடுமாறன் குறிஞ்சி, பாலை,

முல்லை, மருதம், நெய்தல் எனும் அமைப்பில் பாடல் புனைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

**உரிப்பொருள் சார்ந்த அமைப்பு**

உரிப்பொருளை மையமிட்டுப் பாடப்பட்டுள்ள பாடல்கள் பல உள்ளன. புணர்தல், இருத்தல், பிரிதல் ஆகியன பெருமளவிலும், இரங்கல் சிறிய அளவிலும், ஊடல் இல்லை எனும் நிலையிலும் மலேசியக் கவிதைகளில் காணக்கிடக்கின்றன. அதிலும் புணர்தலும் பிரிதலும் அதிகளவில் புனைந்துரைக்கப்பட்டுள்ளன. **"கூடாமற் கவலைகள் ஓடும், அவள் கொஞ்சலில் இன்பங்கள் மிக வந்து கூடும்"** எனும் வரிகள் புணர்தல் உரிப்பொருளுக்குச் சான்று பகர்கின்றன. முல்லையின் உரிப்பொருளை நினைவுகூரும் வகையில் **"கார்வந்தும் வாராக்கணவன் வந்தக்கால் போர் செய்வேன்"**[11] எனும் வரிகள் இருத்தலைச் சுட்டிக்காட்டுகின்றன.

தலைவி ஒருத்தி தலைவனின் பிரிவுத்துயர் தாளாது வற்றலாய் உடம்பு போனது அத்தான் என்றும் சிட்டெனப் பறந்து வருவீரோ! என்றும் ஏக்கமுடனும் கூறுவது பிரிதல் உரிப்பொருளை இனம்காட்டுகிறது.

**துறை சார்ந்தமை**

துறை என்பது ஒரு பாடலின் பின்னணி எனலாம். இற்செறித்தல், நெஞ்சொடு கிளத்தல், காமம்மிக்க கழிபடர்க்கிளவி ஆகிய துறைகளை உள்ளடக்கிய கவிதைகள் காணக்கிடக்கின்றன. **"நத்தைக்கும் ஓடுண்டே அதுபோல் உன்னை நகராமல் காக்கின்றார்"** எனும் கவிதை வரிகள் இற்செறித்தலை இனம் காட்டுகின்றன. **"மறந்தாபோனீர் கவிதையும் வரவில்லை ஏனோ"** கவிதையும் காமம் மிக்க கழிபடர்க் கிளவியைச் சுட்டிக்காட்டுகின்றது. **"பானாட் கங்குல் படர்தருகாலை...."** எனும் கவிதை நெஞ்சொடு கிளத்தலை நினைவுகூர்கிறது.

**சுட்டி ஒருவர் பெயர்கொளாமை**

தெரிவு செய்த முப்பதொன்பது கவிதைகளும் தலைவன் பெயரையோ, தலைவி பெயரையோ சுட்டிப்பாடவில்லை. சங்க மரபும் இதைத்தானே வலியுறுத்துகின்றது. அந்த மரபை இம்மி அளவிலும் பிசகாமல் பாடிய மலேசியக் கவிஞர்கள் பாராட்டுக்குரியவர் ஆவர்.

**வருணனை முறைமை**

பெண்ணின் உருவத்தை வருணித்தல் சங்க மரபின் கிளைகளில் ஒன்றாகும் ஆற்றுப்படை நூல்களில் விறலிவழி இதைக் காணலாம். இந்தத் தாக்கத்தைப் பெற்ற மலேசியக் கவிஞர் இரா.பாண்டியன் **"உலைக்களத்தில் செய்திடாத உண்மையான பொற்குடம், இலையிலாத கொடிநிகர்த்த இணையிலாத நுண்ணிடை, கொலைக்களத்தும் கலங்கிடாத கூர்மை கொண்ட**

வேல்விழி"[16] என்று தலைவியை வருணிப்பது சங்க மரபைப் பேணுதலைக் காட்டுகிறது.

**கூற்றுமுறைமை**

செய்யுள் உறுப்புகள் முப்பத்து நான்கில் கூற்றும் ஓர் உருபு. சங்க மரபில் கூற்று ஓர் இன்றியமையாத இடத்தைப் பெறுகின்றது. அந்த வகையில் மலேசியக் கவிதைகளில் தலைவன் கூற்று மிகுந்தும் தலைவி கூற்று அடுத்தநிலையிலும் இடம்பெறுகின்றன. தோழியின் கூற்று நேரடியாக இடம்பெறாமல் தலைவன் தலைவி கூற்றுக்கள் வழி இடம்பெறுகிறது.

**பண்பாட்டுக்கூறுகள் அமைந்தமை**

ஒரு சமூகத்தின் இயல்பைப் பண்பாடு எனலாம். கலைகள், விழாக்கள், சடங்குகள் பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள் வழிபாட்டு முறைகள் ..... போன்றன பண்பாட்டில் அடங்கும்.

மலேயர்,சீனர், வடஇந்தியர், மலையாளி, தெலுங்கர், கன்னடர் போன்றோர் இணைந்திருக்கும் மலேசியாவில் தமிழரும் பெருமளவில் வாழ்கின்றனர். இச்சூழலில் தங்கள் தொப்பூட்கொடி உறவான தாயகத்தமிழ்ப் பண்பாட்டை மறக்காமல் தங்கள் கவிதைகளில் மலேசியக் கவிஞர்கள் பதிவு செய்துள்ளனர்.

பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள் எனும் இரு பண்பாட்டுக் கூறுகள் மட்டும் மலேசியக் கவிதைகளில் அமைந்துள்ளமையைக் காண முடிகிறது.

தொய்யில் எழுதுதல் என்பது சங்கப்பாடல்களில் அகமரபுப் பழக்கவழக்கங்களில் ஒன்றாகச் சித்திரிக்கப்பட்டுள்ளமையை அறிவோம். இதை உள்வாங்கிய கவிஞர் சுப்பிரமணியம் தன் கவிதையில் **"பொய்கைப் புனலாடிப் புண்பட்ட மேனிக்குத் தொய்யில் எழுதும் சுடர்கள் மடநல்லீர்"** எனப் பழைய பழக்கவழக்கத்தை நினைவுகூர்ந்து பாடியுள்ளமை சிந்திக்கத்தக்கது.

தலைவன் பிரிவை எண்ணித் தலைவி வருந்தும் நிலையில் விரைவில் அவன் வருவான் என எண்ணும் பொழுது அல்லது உரையாடும் பொழுது பல்லியின் ஒலி அதை உறுதி செய்யும் என்பது சங்கப்பாடல்வழி பிறக்கும் நம்பிக்கை. இதே தாக்கம் கவிஞர் முகிலரசன் கவிதையிலும் காணப்படுகிறது. தலைவியைப் பிரிந்து வாழும் தலைவி **பல்லியும் அடித்தது கிழக்கினிலே – அது பலித்திடும் என்றே சொன்னதத்தான்"** எனப் பாடிய நிலை ஈண்டு நட்பு நோக்கத்தக்கது.

மேற்கண்ட கருத்தமைவுகளின் வழி மலேசியக் கவிஞர்கள் தங்கள் கவிதைகளில் செவ்வியல் இலக்கியத்தின் கூறுகளை, பண்புகளைப் பதிவு செய்துள்ளமையை உய்த்து உணரலாம்.

# சிங்கப்பூர்த் தமிழ்ச் சிறுகதைப் பாத்திரங்கள்வழி புலனாகும் செவ்வியல் பண்புகள்

முனைவர் தி.சிவகாமி
தமிழ்த்துறைத் தலைவர்
டோக் பெருமாட்டி கல்லூரி
மதுரை-2

புலம்பெயர்ந்தோரால் படைக்கப்பட்டுள்ள சிறுகதைகள் சில தமிழ்ப் புத்தகாலயத்தாரால் தொகுக்கப்பட்டு ஒரு சிறுகதைத் தொகுதியாக 1992இல் வெளியிடப்பட்டுள்ளது. பல எழுத்தாளர்களின் படைப்புக்களடங்கிய ஒரு தொகுப்பு நூலாக இந்நூல் அமைந்துள்ளது. பிழைப்புத் தேடி இந்தியாவிலிருந்தும் இலங்கையிலிருந்தும் குடியேறிய குடியேறிகள் தாங்கள் வாழ்ந்த வாழ்க்கையின் சமூகப் பின்புலத்தை அடித்தளமாகக் கொண்டு கதைகளைப் படைத்துள்ளனர். இவர்களுடைய படைப்புகளில் ஆங்காங்கே தம் சொந்த நாட்டின் இலக்கியப் பண்புகள் மனித மரபுகள், பண்புகள் மாறாத நிலையில் தாக்கம் பெற்றுள்ளன. அந்த வகையில் சில கதைகளின் மூலம் அதில் இடம்பெறும் சில கதாபாத்திரங்கள் வழியாகக் காட்டப்பட்டுள்ள செவ்வியல் இலக்கியப் பண்புகளை எடுத்துரைப்பதாக இக்கட்டுரை அமைகிறது.

## மொழிக்கலப்பு

தமிழில் வடமொழி சொற்கள் கலந்திருந்த தன்மை தொல்காப்பியத்தில் காட்டப்படுகிறது. புலம்பெயர்ந்தோர் முதலில் அந்நாட்டு மொழியைப் புரிந்து கொண்டு அதன் பின் பிழைப்பு நடத்த வேண்டும். பிழைப்பதற்காக நாடு விட்டு நாடு சென்ற அவர்கள் அந்நாட்டினருடன் உரையாடி மொழியைப் புரிந்து கொண்டு பிழைப்பு நடத்தியதை மகதூம் சாயபுவின் 'வீனோத சம்பாஷணை' என்ற கதை உணர்த்துகிறது.

> சிங்கப்பூரிலே பேசப்படும் தமிழில் மலாய், சீனம், இந்துஸ்தானி முதலிய பாஷைச் சொற்கள் அதிகம் கலந்து வருவதால் மேற்படி சம்பாஷணைகளை நன்றாய்க் கவனித்து வருபவர்கள் மிக வெகுவிலே, சிங்கப்பூர்த் தமிழை விளங்கிக் கொள்வார்கள்.[1]

என்று ஆசிரியர் உரையாடல் என்ற புதியதொரு கலை வடிவைத் (கதை வடிவாக) தான் தேர்ந்தெடுத்ததன் நோக்கத்தை ஒரு வாசகனுக்குத் தெளிவு படுத்தியதாகக் கூறப்படுகிறது. (உ.ம்) சிங்கப்பூரானுக்கும் இந்தியனுக்கும் இடையே நடந்த உரையாடல்

"இந்தியன் : இந்த ஊர்த் தமிழ் என்றீரே, அதென்ன! எங்கள் ஊர்த் தமிழுக்கும் இந்த ஊர்த் தமிழுக்கும் என்ன வித்தியாசம்?

சிங்கப்பூரான்: இந்த ஊர்த் தமிழ், மலாய்ச் சொல்லுகளும், சீனச் சொல்லுகளும், இங்கிலீஷ் சொல்லுகளும் இன்னும் அநேக பாஷைச் சொல்லுகளும் கலந்து வரும்.

இந்தியன் : சிங்கப்பூர்த் தமிழிலே என்னுடன் பேசியெனக்குச் சற்றேயுதவி செய்யும்.

சிங்கப்பூரான்: சிங்கை நேசன் பத்திரிகையை எப்பொழுதும் வாசித்து வருவீராயின் சிங்கப்பூர்த் தமிழ் சீக்கிரம் பழகிக் கொள்ளலாம். வியாபாரம் முதலிய சகல காரியங்களும் இலகுவிலே நடத்தி வரலாம்,[2] இந்த உரையாடல் மொழிக்கலப்பு ஏற்படுவதற்குச் சாத்திய மாவதை உணர்த்துகின்றது. தமிழோடு பிறமொழிச் சொற்களும், பிறமொழிச் சொற்களோடு தமிழும் கலந்து புலம்பெயர்ந்தோர் மூலம் மொழிக் கலப்பு ஏற்பட்டதை இக்கதை வலியுறுத்துகிறது.

உலகம் பொது

"யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்ற *புறநானூற்று* வரியின் தாக்கத்தை ந.பழனிவேலு என்பவர் எழுதிய "கல்யாணப் பந்தலில் என்ற கதை காட்டியுள்ளது. சாதிப்பிரச்சினையால் திருமணம் நின்று போகுமோ? என்ற கவலையில் கூட்டம் எதிர்பார்த்திருக்கத் தாழ்ந்த சாதிப் பெண்ணுக்கும், உயர்சாதி ஆணுக்கும்(சிங்காரவேலுச் செட்டியார்) பிறந்த பெண்ணைத் தான் மணந்து கொள்வதாகக் கூறுகிறான் மணமகன்.

> இங்குக் குழுமியிருக்கும் உறவின்முறையார்களே! சகோதரிகளே! சகோதரர்களே! நீங்கள் பகுத்தறிவு வாய்க்கப் பெற்றவர்கள். இந்தக் கல்யாணம் சாதி காரணமாகத் தாழ்ந்தது என்று இங்குள்ளோர் சிலர் அபிப்ராயப்படுகின்றனர். இஃது எப்படிப் பொருந்தும்? சாதி சமயப் பூச்சாண்டிகளுக்குப் பயந்த காலம் மலையேறி விட்டது. அதை இனி வாவென்று அழைத்தாலும் வரப் போகிறதில்லை. நமக்கு 'ஜாதி' உண்டு என்றால் அது தமிழ் ஜாதியாகும். நாமெல்லாரும் தமிழ் மரபினர். நான் உயர்ந்த ஜாதியானென்றும், எனக்கு மனைவியாகப் போகும் இந்தப் பெண் தாழ்ந்த ஜாதி என்றும், சொல்வதை நான் வெறுக்கிறேன்.........[3]

என்ற மணமகனின் இக்கூற்று மகாகவி பாரதியின் "எல்லோரும் ஓர் குலம் எல்லோரும் ஓர் இனம்" என்ற பாடல் வரியை நினைவூட்டுவதாக அமைகின்றது.

## காலக்கணக்கு

> "ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
> தாழாது உஞற்று பவர்"

> "தீதும் நன்றும் பிறர் தர வாரா"

பி. கிருஷ்ணனின் 'காலக்கணக்கு' என்ற சிறுகதை மூட நம்பிக்கையின் பலனை உணர்த்துவதாக உள்ளது. அவரவர் செய்த வினைக்கேற்ப அவர்தம் வாழ்வு அமையும். ஒருவருக்கு வரும் கேடு இயல்பானதேயன்றி யாரும் அதனை ஏற்படுத்தி வலிய அழைப்பதில்லை. இதனை மறைமுகமாக உணர்த்தும் போக்கில் இக்கதை அமைந்துள்ளது. இக்கதையில் வரும் கதாபாத்திரம் அமிர்தத்திற்கு நெஞ்சுவலி. கூடவே சிறுநீரக இயக்கத்திலும் கோளாறு. இவள் கணவன் சதாசிவத்திற்கு மனைவியின் உடல் நலிவு குறித்துக் கவலை. அவர்

> ஓடியாடி வேலை செய்துகிட்டிருந்த ஒருத்திக்குத் திடீரென்று இந்த நிலை வந்தா, அது கிரகக் கோளாறு தான் காரணமா இருக்கணும்[4]

என்று உறுதியாக நம்பினார். மேலும் கிரகக்கோளாறு என்றால் அதைச் சரிப்படுத்தக் கூடியவர் சோதிடர் சுந்தரலிங்கம்தான். அதில் எந்தச் சந்தேகமும் இருக்கமுடியாது என்று நம்புகிறார். அவர் சோதிடர் சொன்ன பரிகாரங்களைச் செய்யச் செல்லுமுன்னே விதி வலியது என்பதை வீட்டிற்குச் சென்றதும் மனைவியின் சாவைக் கண்டு அறிகிறார். ஆக எப்பொழுது எது நடக்க வேண்டுமோ அது காலக்கணக்கின்படி அவ்வப்போது நடந்தே தீரும் என்பதையும் எதுவும் நம் கையில் இல்லை என்பதையும் இக்கதையின் சதாசிவம் பாத்திரம் மூலம் உணரலாம்.

## புலம்பெயர்தல்

பொருள் ஈட்டும் பொருட்டுத் தலைவன் திருமணத்திற்கு முன்போ பின்போ களவு, கற்புக்காலத்தில் தலைவியைப் பிரிந்த செய்தியை அகப்பாடல்கள் காட்டுகின்றன.

> பாணர்கூட்டம் பொருளுக்காகப் புரவலர் தேடி அலைந்ததையும் இலக்கியங்கள் காட்டியுள்ளன. ஓதல் பகையே தூதிவை பிரிவே

என்று தொல்காப்பியம் குறிப்பிடும். இங்குச் சிங்கப்பூர்ச் சிறுகதைத் தொகுதியில் பல கதைகள் இந்தியாவிலிருந்து பிழைப்பு நாடி பொருள் ஈட்ட மாந்தர்கள் வந்ததைக் காட்டுகின்றன. 'விநோத சம்பாஷணை', 'கல்யாணப் பந்தலில்', 'வாழ முடியாதவள்', 'புதுவீடு', 'நாடோடிகள்', 'இழப்புகள்' என்று பல கதைகள் கதைமாந்தர் புலம்பெயர்ந்ததற்கான காரணம் பொருள் ஈட்டலே என்று காட்டியுள்ளன.

வேலை தேடியும், பொருள் தேடியும், குடியிருக்க நல் இடம் தேடியும், கௌரவம் கருதியும் நண்பர்களாய் மனதளவில் இருந்த தனபால், பார்த்திபன் கதாபாத்திரங்கள் நாடோடிகளாக வாழ்ந்ததை 'நாடோடிகள்' கதை காட்டுகிறது.

### கற்பு

பரத்தை ஒழுக்கம் என்பது சங்க இலக்கியங்களில் தவறாகக் கருதப்படாத ஒன்று. நா.கோவிந்தசாமி எழுதிய 'ஓர் ஆன்மாவின் திரை' என்ற கதை ஓர் எழுத்தாளன் பற்றியது. பெண்மையைப் பற்றியும் ஒழுக்கத்தைப் பற்றியும் கற்புநெறி பற்றியும் அதீதக் கற்பனையில் உயர்வாக எழுதித் தனக்கென்று ஒரு பிம்பத்தைப் பிரமாண்டமாக உருவாக்கிக் கொண்டவன் அந்த எழுத்தாளன். தன் எழுத்தின் மூலம் தனக்கு நட்பாக வந்த ஒருத்தியின் கணவன் இறந்த பின் தன் மனைவிக்கும் தெரியாமல் அவள் மகள் வாழ்வில் அக்கறை உள்ளவன் போல் பொய்யான போர்வையில் அவளோடு தொடர்பில் இருக்கிறான் அந்த எழுத்தாளன். ஆனால் அவள் ஒழுக்கம் பற்றிய மாற்றுக் கருத்துடையவளாக இருக்கிறாள்.

> உங்களுக்கு உண்மையான ஒரு வாழ்க்கை வேண்டுமானால் என்னைத் தேடி வாருங்கள். அப்படித் தேடி வரும்போது நாலு பேர் அறிய என்னை மனைவியாக ஏற்றுக்கொள்ளும் துணிவோடு வாருங்கள். இல்லை, பொய்யை அடித்தளமாகக் கொண்டு நீங்கள் பெரிதாக உருவாக்கியிருக்கிறீர்களே 'பிம்பம்'.....அந்தப் பிம்பம்தான் உங்களுக்கு வேண்டுமானால் இனி இங்கு வராதீர்கள்[5]

என்று முகத்தில்அடித்தாற்போல் கூறிக் கதவைச் சாத்துகிறாள் என்ற இக்கதையின் வரிகள் தலைவனின் ஒழுக்கம் வேண்டிப் பரத்தை வீடு சென்று வந்த தலைவனை விரும்பாத தலைவியின் மனநிலையைக் காட்டுகிறது. இங்கே கணவனை இழந்த பெண் பிற ஆடவனுடன் தொடர்பு வைத்திருந்தாலும் அதனையும் சமூக அந்தஸ்து பெறுவதற்கு ஏற்ற வகையில் வாழ விரும்புவதைக் காட்டுகிறது. ஒழுக்கத்தின் தேவையை வலியுறுத்துவதாக இக்கதை அமைந்துள்ளது.

### நிலையாமை

செவ்வியல் இலக்கியங்கள் நிலையாமையை வலியுறுத்து கின்றன. மணிமேகலையில் சக்கரவாளக் கோட்டம் உரைத்த காதையில் தெளிவாக இதனை உணரலாம். இறப்பு என்பது இயற்கையானது. இதை மறுக்கவோ, மாற்றவோ, அழிக்கவோ முடியாது. சென்ற உயிரும் மீளாது. அந்த உயிர் எதையும் எடுத்துச் செல்வதில்லை தான் செய்த பாவ புண்ணியத்தைத் தவிர. இத்தாக்கம் மா.இளங்கண்ணன் எழுதிய 'எண்ணங்கள்' என்ற கதையில் வெளிப்பட்டுள்ளது. இக்கதையில் நல்லதம்பி என்ற கதாபாத்திரம் இறந்த பின்பு நடப்பதுபோல் காண்பதாகிய கனவு

> எல்லோரும் வாய்க்கரிசி போட்டதும் சடலத்தின் கை விரல்களிலும், கால் விரல்களிலும் போட்டிருந்த கட்டுகளை அவிழ்க்கின்றனர். விரலில் கிடந்த மோதிரம், கழுத்தில் கிடந்த தங்கச் சங்கிலி, ஒரு காதில் மட்டும் கிடந்த ஒற்றைக் கல் தருப்பு எல்லாவற்றையும் கழற்றி விடுகின்றனர். தங்க நகைகளை விரும்பி அணியும் நல்லதம்பியின் உடலில் தங்கம் என்று சொல்ல எதையுமே விட்டுவைக்கவில்லைஇ ஆனால் தங்கப் பல்லை மட்டும் விட்டு விடுகின்றனர். குறடு கிடைத்தால் அதையும் பிடுங்கி விடுவார்களோ என்னவோ தெரியவில்லை[6]

என்று எழுதப்பட்டுள்ளது. ஆயிரக்கணக்கில் நல்லதம்பி பொருள் சேர்த்து வைத்து என்ன பலன்? இறுதியில் மண்ணுக்குள் புதைத்து உடலில் உள்ள அனைத்தையும் எடுத்துக் கொண்டு விடுவதைக் கதை விளக்குகிறது. இச்செயல் "காதறுந்த ஊசியும் வாராதுகாண் கடைவழிக்கே" என்ற பட்டினத்தாரின் வரிகளை நினைவுபடுத்துவதாக உள்ளது. 'இழப்புகள்' கதையில் கந்தசாமி என்ற கதாபாத்திரம் தன் குடும்பம் முன்னுக்கு வரவேண்டிச் சிங்கப்பூருக்குப் பிழைக்கப் பொருள் ஈட்ட அண்ணனால் அனுப்பப்படுகிறான். தன் ஊர் மக்கள் சிலர் போல் பிழைக்க வந்த இடத்தில் கடலை சுமந்து விற்றுப்பொருள் ஈட்டி ஊருக்கு அனுப்புகிறான். மனைவியைப் பிரிகிறான். மகனை இழக்கிறான். எல்லாம் பொருளுக்காகத்தான் என்பதையும் நிலையாமையையும் இக்கதை உணர்த்துகிறது.

**ஈகை**

> "அற்றார் அழிபசி தீர்த்தல் அ∴தொருவன்
> பெற்றான் பொருள்வைப் புழி"

ஒருமுறை ஓர் ஏழைக்கு, இல்லாதவனுக்கு, தேவைப் படுபவனுக்குக் கொடுக்கப்படும் பணம் அல்லது பொருள் அவனுக்கு உதவும். அந்த உதவி செய்தவன் வருங்காலத்துக்குச் சேமித்து வைத்த சேமநிதி போன்றதாக அமையும். ஈதல் என்ற இந்தச் செவ்வியல் அறப்பண்பின் தாக்கத்தை எம்.கே.நாராயணன் எழுதிய 'அவர்கள் கொடுப்பார்கள்' என்ற கதை காட்டுகிறது. இக்கதையில் உலகநாதன் என்ற கதாபாத்திரம் தன் அலுவலகத்தில் மாரடைப்பால் இறந்த ஒருவருக்கு உதவ அவனது வறுமையிலும் இரண்டு வெள்ளி தருவதாக ஒப்புக் கொண்டு கொடுக்கிறான். எதிர்பாராதவிதமாக அன்று அலுவலகம் சென்ற அவன் ஒரு விபத்தில் இறந்துவிடுகிறான். உயிரற்ற சடலம் வீட்டிற்கு வர அவன் மனைவி இனிக் குடும்பப் பாரத்தை எவ்வாறு சுமக்கப் போகிறோம் என்று பதைபதைக்கிறாள். உலகநாதன் ஒருவனுக்குத் தன் வறுமையிலும் உதவியது போன்றே அவன் அலுவலகத்தில் மற்றொருவன் உலகநாதனுக்காக நிதி திரட்டி அறுபத்தைந்து வெள்ளி சேர்த்துக் கொடுக்கிறான். உலகநாதனின்

கடைசிச் சம்பளத்துடன் அவனது பிராவிடண்ட் பணமும் வீடு வந்து சேர்கிறது. கணவனின் பிரிவுத்துயரால் வாடிய செல்லம்மாள் பிள்ளைகளை எப்படி வளர்ப்போம் என்று கலங்கி இருந்த போது வாழ்க்கையில் கால் ஊன்ற இப்பணம் பலவும் வந்து சேர்கிறது. செல்லம்மாள் கதை இறுதியில் "கடைசியா நீங்க சம்பாதித்த பணந்தாங்க எங்களைக் காப்பாற்றப் போகுது" என்று கூறுவதாக உள்ளது. ஆம், உலகநாதனின் வறுமையிலும் கொடுக்கும் மனப்பாங்கு அவன் குடும்பம் வாழச் சேமித்து வைத்த சேம நிதியாக விளங்கியதை இக்கதை புலப்படுத்துகிறது.

## முடிவுரை

செவ்வியல் இலக்கியங்கள் வாயிலாக நாம் அறியும் பண்புகள் எத்தனையோ உண்டு. இப்பண்புகள் இங்கு வாழ்ந்து வேற்றிடம் சென்றவர்களின் மனதில் எங்கோ ஒரு மூலையிலாவது தங்கி இருக்க வேண்டும். அதனாலேயே அவர்கள் வாழ்வதற்காகப் புலம்பெயர்ந்து சென்றாலும் அவர்களின் எழுத்துக்கள்வழி அவர்கள் படைத்த கதாபாத்திரங்கள் வழியாக அவை வெளிப்படுத்தப்படுகின்றன. அவ்வகையில் ஒரு சில பண்புகள் மட்டும் மேற்கண்ட கதைச் சான்றுகள்வழி எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

### சான்றெண் விளக்கம்

1. நா.கோவிந்தசாமி, இளங்கோவன்.,(தொ.ஆ), சிங்கப்பூர்த்தமிழ்ச் சிறுகதைகள், ப. 10.
2. மேலது பக். 39-40.
3. மேலது பக். 48.
4. மேலது பக். 73.
5. மேலது பக். 103.
6. மேலது பக். 113.
7. குறள் 226 (ஈகை - 6).

# புலம்பெயர்ந்தோர் படைப்புக்களில் விளையாட்டுப் பதிவுகள்

முனைவர் ஆ. பாப்பா
உதவிப்பேராசிரியர்
டோக் பெருமாட்டி கல்லூரி
மதுரை.

இலக்கியங்கள் ஒரு சமூகத்தின் பண்பாட்டைப் பிரதிபலிப்பன. செவ்வியல் இலக்கியங்களும் அப்படியே. செவ்வியல் இலக்கியங்களில் அடங்கிய சங்கப்பாடல்கள்வழி அக்கால மக்களின் வாழ்வியலை அறிந்து கொள்ளமுடிகிறது. அவ்வகையில் வாழ்வியல் கூறுகளுள் ஒன்றான விளையாட்டுக்களைப் பற்றிய செய்திகள் சங்க இலக்கியங் களில் குறைவாகவே காணப்படுகின்றன. சங்க இலக்கியங்கள் விளையாட்டுக்களையும் பொழுதுபோக்குகளையும் பிரித்துப் பார்க்க வில்லை. அதாவது விளையாட்டு என்பது இருவரோ அதற்கு மேற்பட்டவரோ இணைந்து விளையாடுவது. போட்டி, விதிகள், மற்றும் வெற்றி தோல்விகளை உள்ளடக்கியது போன்ற வரையறைகளை யுடையது. தனிமனிதன்பொழுது போக்குவதற்காகச் செய்வது அனைத்தும் விளையாட்டு அல்ல. சான்றாகச் சங்க இலக்கியம் சுட்டும் ‘அலவனாட்டு’ பொழுதுபோக்கு மட்டுமே விளையாட்டல்ல, இந்த அடிப்படையை வைத்துக்கொண்டு புலம் பெயர்ந்தோர் படைப்புக்களில் விளையாட்டுக்கள் பற்றிய செய்திகள் காணப்படுவதை இக்கட்டுரை ஆராயமுற்படுகிறது. சங்க இலக்கியத்தில் காணப்படுவதைப் போன்று அ.முத்துலிங்கம் கதைகளிலவிளையாட்டுக்கள் வாழ்வியலைப் பிரதிபலிப்பிற்காகப் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன என்கிற நிலையில் மட்டுமே இப்பன்னாட்டு மாநாட்டுத் தலைப்போடு இக்கட்டுரை தொடர்புடையதாக அமைகிறது.

குழந்தைப்பருவம் தொட்டு மனிதனின் ஒவ்வொரு செயலிலும், நிகழ்விலும் பிரிக்கமுடியாதபடி ஒன்றிணைந்து காணப்படுவது விளையாட்டாகும். விரும்பியும், மகிழ்ச்சியாகவும் விளையாடுவதால் வளர்ந்தபிறகும் குழந்தைப்பருவத்தை மறக்கமுடியாததைப்போல் விளையாட்டுக்களையும் மனிதனால் மறக்கமுடியாது. ஏதேனும் ஒருவகையில் மனிதனது செயலில் வெளிப்பட்டுக் கொண்டுதானிருக்கும். குழந்தைப்பருவத்தில் விளையாட்டுக்களின் மூலமாக மனிதன் பெற்ற பயிற்சிகள் அவனது வாழ்க்கையைப் பயனுடையதாக்கிக் கொண்டிருக்கும். இதற்கு மனிதனின் படைப்புக்களும் விதிவிலக்கல்ல.

இக்கட்டுரையில் இப்பதிவுகள், விளையாட்டுச் செய்திகள் அமைந்துள்ள முறை, குழந்தைப் பாடல்கள், குழந்தை விளையாட்டுக்கள், சிறுவர் பாடல்கள், சிறுவர் விளையாட்டுக்கள், விளையாட்டுப்பொருட்கள், சடங்குவிளையாட்டுக்கள், விளையாட்டுக் களும் பாலினமும், ஆகிய நிலைகளில் விளக்கப்பெறுகின்றன.

அ. முத்துலிங்கம் கதைகளில் விளையாட்டுப் பற்றிய செய்திகள் தகவல்களாகவும், சிறிது விளக்கத்துடனும், கொஞ்சம் விளையாடும் முறைகளுடனும் என மூன்று நிலைகளில் பதிவு செய்யப்பட்டுள்ளன. சில இடங்களில் உவமைகளாகவும், சில இடங்களில் விளக்கத்திற்காகவும் பயன்படுத்தப்பட்டுள்ளன. எவ்வாறாயினும் புலம் பெயர்ந்தோர் விளையாட்டு என்கிற பொழுது போக்கு சார்ந்த ஒன்றைத் தங்கள் படைப்புகளில் பயன்படுத்தியிருப்பது கவனத்திற்குரியது. மனிதனால் சாதாரணமாக நினைக்கப்படும் விளையாட்டு என்பது பிற இடங்களில் வாழ்வாதாரம் இல்லா நிலையில் வாழும்போதுகூட அவர்கள் மனதைவிட்டுக் கொஞ்சம்கூட அகலவில்லை என்பதே நினைத்தற்குரியது. இது இக்கதைத்தொகுப்பின் முன்னுரையில் ‘இக்கதைவழி மனிதர்களின் நம்பிக்கைகள், பழக்கவழக்கங்கள் முதலியன நமது கற்பனைக்கும் அப்பாற் பட்டவையாக... தோன்றும்... அதனடியில் மேலானதொரு நோக்கம் அவற்றையெல்லாம் ஊடுருவி ஒருங்கே கோர்த்து நிற்பதைக் காணலாம்’(ப:4) என்ற வரிகளின் வாயிலாகத் தெளிவுபடுத்தப்பட்டிருக்கிறது.

## விளையாட்டுச்செய்திகள் அமைந்துள்ள முறை

1. அ. முத்துலிங்கம் கதைகள் என்கிற கதைத் தொகுப்பில் மொத்தம் 75 கதைகள் இடம்பெற்றுள்ளன. இதில் 31 கதைகளில் விளையாட்டுப் பற்றிய செய்திகள் பதிவு செய்யப்பெற்றுள்ளன.

2. விளையாட்டு என்கிற சொல் மட்டும் பொழுதுபோக்கு என்கிற பொருளில் பத்துக் கதைகளில் பயன்படுத்தப்பட்டிருக்கிறது.

3. ‘கொழுத்தாடு பிடிப்பேன்’ என்கிற கதையின் தலைப்பு ஒரு விளையாட்டுப்பாடலின் தொடக்க வரியாகும்‘கொழுத்தாடு பிடிப்பேன், கொள்ளியாலே சுடுவேன்’ என்கிற வரி ‘கொலகொலயா முந்திரிக்கா’ என்கிற தமிழர் விளையாட்டை நினைவுபடுத்துகிறது.

4. கதைகளில் ரைட்டோ, வெட்டு இறக்கு, மல்யுத்த விளையாட்டு, மாப்பிள்ளை பொம்பிளை, கிளித்தட்டு, மணல் மேட்டில் வீடு கட்டி விளையாடுதல், கொக்கான், தாயம் போன்ற விளையாட்டுப் பெயர்களும், அவற்றின் விளக்கங்களும் கதைக்குத் தேவைப்படும் அளவில் தரப்பட்டுள்ளன. இத்தகவல்களிலிருந்து

விளையாட்டு அமைப்பையும், விளையாடும் முறையையும் ஓரளவிற்குப் புரிந்துகொள்ள முடிகிறது.

சான்றாகப் 'பெருச்சாளி' (ப.128) என்கிற கதையில் ஒரு அறையின் தோற்றத்தை வருணிக்கையில் 'விசாரணை அறையில் பீர் போத்தல்கள் எல்லாப்பக்கமும் நிற்கவும், நடக்கவும் இடமில்லை. பிள்ளைகள் 'ரைட்டோ' விளையாடுவதுபோல் பாய்ந்து பாய்ந்துதான் போக வேண்டும் என்கிறார். அறையில் சாமான்கள் இறைந்து கிடக்கின்றன என்று எழுதுவதைக்கூட விளையாட்டை சொல்லி வருணிப்பது என்பது ஆசிரியருக்கு விளையாட்டுக்களின் மேலுள்ள ஈடுபாட்டைக் காண்பிக்கிறது.

5. நவீனயுகத்திற்கேற்ப மரபல்லாப் புதிய விளையாட்டுக்களான டென்னிஸ், கணிப்பொறி விளையாட்டுக்கள், கோல்ப், கால்பந்து, விளையாட்டு, ஃபோன் பற்றிய செய்திகளும் இக்கதைகளில் காணக்கிடக்கின்றன. இதில் டென்னிஸ் விளையாட்டு செயற்கைக் கருவில் வளர்கின்ற ஒரு குழந்தையின் பரினாம வளர்ச்சியை அவதானித்துக் கொண்டு வரும்போது 'டென்னிஸ் போன்ற விளையாட்டுக்களில் அவள் வீராங்கனையாக வருவாள்' (ப. 259) என்று விஞ்ஞான வளர்ச்சியின் உன்னதத்தைப் பேசும்போதுகூட விளையாட்டு உவமையாகக் கூறப்படுகிறது.

6. கணிப்பொறி மனிதனின் நண்பனாக மாறிவிட்ட இன்றைய உலகையும் 'என் மகன் அதனுடன் மணிக்கணக்காக விளையாடிக் கொண்டிருப்பான். அவன் விளையாடுவதும் அடிக்கடி சிரிப்பதுமாகச் சமவயது நண்பர்கள் இருவரும் பழகுவதுபோல் இருந்தது இந்தக்காட்சி' (ப. 420) என்கிற வரிகளின் வாயிலாகச் சுட்டிச்செல்கிறார்.

7. மொனபொலி, கடுதாசி விளையாட்டு (ப. 303) போன்ற விளக்கங்களற்ற சில விளையாட்டுப் பெயர்களும் அறிமுகம் செய்யப்பட்டுள்ளன. பாகிஸ்தான் நாட்டு வாழ்க்கை பற்றிய கதையில் (ப. 229) காணப்படுவது மொனபொலி (Monopoly) விளையாட்டு. இது அமெரிக்கர்களின் விளையாட்டு ஆகும். மேலைநாட்டு விளையாட்டான டிரேடு (Trade) என்னும் இடங்களை (Land)விற்பது, வாங்குவது என்கிற முறையில் விளையாடப்படும் பலகை விளையாட்டு (Boardgame) வகையைச் சேர்ந்தது. கடுதாசி விளையாட்டு இலங்கை நாட்டு விளையாட்டாக இருக்க வாய்ப்பிருக்கிறது.

8. சிறுவர்களின் விளையாட்டு முடிவடைவது என்பது பொதுவாக சண்டை அல்லது அழுகையுடன் முடிவடையும் (ப. 531).

### குழந்தைப் பாடல்கள்

குழந்தை தனக்குத் தெரிந்த மொழியில் தானறிந்த செய்திகளைப் பாடலாகப் பாடும். முத்துலிங்கம் கதையில் ஆடு என்றாலே பிடிக்காத அப்பா வேலைக்குச் சென்று வீட்டிற்குத் திரும்பி வரும்நேரத்தில் ஆட்டை ஒளிந்துகொள்ளச் சொல்லும் குழந்தையின் பாடலாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

> "மழை பெய்கிறது
> பாபா வருகிறார்
> ஆடு கட்டிலின் கீழே
> ஆடே, ஆடே ஓடு ஓடு
> பாபா வாருங்கள்"

அதுபோன்றே அம்மாவின் தோசை மேல் குழந்தைக்குள்ள ஆசையும் அப்பாவின் கண்டிப்பிற்கு அடையாளமான மீசை மீதுள்ள பயமும் பின்வரும் பாடலில் வெளிப்படுத்தப்பட்டுள்ளன.

> "அம்மா சுட்ட தோசை
> அப்பா முறுக்கிய மீசை
> தின்ன தின்ன ஆசை
> விளக்கமாத்துப் பூசை"

### குழந்தை விளையாட்டுக்கள்

குழந்தைப் பருவமே விளையாட்டுக்காகத்தான். ஒரே விளையாட்டை எத்தனைமுறை விளையாடினாலும் குழந்தைக்குச் சலிப்பே தட்டாது. மொழியறிவு, சகிப்புத்தன்மை, விட்டுக்கொடுத்தல் போன்ற கற்றல்களை அறிந்துகொள்வது மீண்டும் மீண்டும் செய்வதால் மட்டுமே. முத்துலிங்கம் கதைகளில் இது பதிவாக இல்லாமல் அனுபவமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

> எந்த நிமிடத்திலும் பறிபோகும் வேலை' என்கிற கதை முழுமையுமே குழந்தையின் விளையாட்டைப் பற்றியதுதான். (பக்:756-770)

> 'நேற்றைக்கு விளையாடிய அதே பொம்மையைக் கொடுத்தவுடன் முகம் மலர்ந்து போகும். ஒரு சிரிப்பை வெளியேவிடாமல் உள்ளே வைத்திருக்கும்போது கிடைக்கும் பிரகாசம் அந்த முகத்தில் வீசும். அன்றைக்குத்தான் கிடைத்த புதுப் பொம்மையைப் போல விளையாடுவாள்' (ப:761)

> 'அவள் அகராதியில் விளையாடுவதும் அழிவு செய்வதும் ஒன்றே. ஒளித்து விளையாடினோம். மேசைக்கு அடியிலோ, கட்டிலின் பின்னாலோ ஒளித்துவிட்டுத்

> தலையை நத்தைபோல நீட்டுவாள். நான் அந்தத் தலை நீளும் சமயத்தில் கண்டிட்டேன் என்று சொல்லவேண்டும். இருபதாவது தடவை .........' (ப. 765)
>
> ஆ,போ விளையாட்டு: தலையிலே சிறுகுட்டையை வைத்துவிட்டு அப்ஸரா முழங்காலில் இருந்து வளைந்து தலையால் தரையைத் தொடுவாள். நான் ஆ,போ சொல்ல வேண்டும். குட்டைதரையில் விழும். நாங்கள் கையைத் தட்டுவோம். நான் குட்டையை எடுத்து மறுபடியும் அவள் தலையில் வைப்பேன். இன்னொருமுறை விளையாட்டு தொடரும். (ப. 765)

சிறுவர் பாடல்கள்

சிறுவர் பாடல்கள் என்பவை சிறுவர்களால் பொழுது போக்கிற்காகவும், விளையாடுகின்றபொழுதும், மற்ற சிறுவர்களையும் பிறரையும் கேலி செய்கின்ற பொழுதும் பாடப்படுபவை.

- மொட்டைப் பாப்பா
  சட்டி உடைப்பான்
  மூண்டு பானை (மூன்று)
  கூழ் குடிப்பான்

என்கிற பாடல் ஒரு சிறுவன் பாடம் படிக்கின்றபொழுது அப்பாடத்தில் ஏதேனும் பிழை செய்ய நேர்ந்தால் உடன் படிக்கும் மற்ற சிறுவர்கள் அவனைக் கேலி செய்து படிப்பதாக 'ஒரு சிறுவனின் கதை' என்கிற கதையில் கூறப்பட்டுள்ளது.

- மழையே மழையே மெத்தப்பேய்
  வண்ணாங்கல்லு தூரப்பேய் (அக்கா: ப-99)

என்கிற பாடல் மழை வேண்டிச் சிறுவர்கள் பாடுகின்ற பாடலாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது. அதாவது வண்ணான் துவைக்கின்ற கல்லானது மண்ணால் அரிக்கப்பெற்றுத் தூர்ந்து போகும்படி மழை அதிகமாகப் பெய்யவேண்டும் என்று சிறுவர்கள் பாடுகிறார்கள்.

- ஓலையை வெட்டுவதும் கத்திதானா! இந்த
  ஓவர்சியர் சொல்லுவதும் புத்திதானா
  கத்தரிக்காய் வெட்டுவதும் கத்திதானா
  கங்காணியார் சொல்லுவதும் புத்திதானா
  புடலங்காய் வெட்டுவதும் கத்திதானா... (இருப்பிடம் :71)

இப்பாடல் தானாக விளையாடிக்கொண்டிருக்கும் சிறுவன் பாடுவதாக இருப்பிடம் என்கிற கதையில் கூறப்பட்டுள்ளது. சிறுவன் பொழுது போக்காகப் பாடுவது என்றாலும் கங்காணியார் சொல்லுவதும் புத்தி

தானா என்கிற வரி மலைத்தோட்டங்களில் கங்காணியின் பேச்சை நம்பி அடிமைகளாக வாழ்க்கை நடத்தும் மக்களை நினைவுபடுத்துகிறது.

- கந்தையா வாத்தியார்
  கிந்தையா வாத்தியார்
  கல்லுக்கு மேலே
  குந்தையா வாத்தியார் (இருப்பிடம் :72)

பொதுவாகவே குழந்தைகளுக்கும், சிறுவர்களுக்கும் தங்களது செயல்பாடுகளைக் கண்டிக்கும் மனிதர்களைக் குறிப்பாக ஆசிரியர்களைப் பிடிப்பது கடினம். இதனை ஏதேனும் ஒரு வகையில் வெளிப்படுத்துவதுடன் உளவியல் ரீதியாக மன அமைதியும் பெறுகின்றனர். இப்பாடலும் ஆசிரியரை மாணவர்கள் கிண்டல் செய்வதைக் குறிப்பிடுவதுடன் உலகின் அனைத்து இடங்களிலும் மாணவர்களுக்கும் ஆசிரியருக்குமிடையோன உறவு சுமூகமான ஒன்றாக இருப்பது கடினம் என்கிற நிலையையே காட்டுகிறது. இது பின்நவீனத்துவத்தின் பண்புகளில் ஒன்று என்றும் விளக்கம் தரமுடியும்.

சிறுவர் விளையாட்டும் பாடலும்

○ கண்ணாடே கரையாரே
  காக்கணவம் பூச்சியாரே
  முன்னூறு முழங்காலைத்
  தட்டிக்கொண்டு
  வ....ர....டோ..! அவர்கள் கூகூவென்று சத்தமிட்டார்கள்.

இப்பாடல் சிறுவர்கள் 'கண்ணாமூச்சி' விளையாட்டு விளையாடும்பொழுது பாடுகின்ற பாடலாகக் கூறப்பட்டுள்ளது. (ஒரு சிறுவனின் கதை: ப. 42) அதேநேரம் 'உடும்பு' என்கிற கதையில்

> 'இந்தப் பெண்களுக்கே சத்தம் செய்யாமல் ஓடுவதற்கு வராது. நாங்கள் 'கண்ணாரே கரையாரே' ஒளித்துப்பிடித்து விளையாடும்போது அவளுடைய வளையலும், கால் கொலுசும் 'சிலுங் சிலுங்' என்று காட்டிக் கொடுத்துவிடும். எப்பொழுது விளையாடினாலும் அதில் வெற்றி எனக்குத்தான்' (ப:434)

என்று கண்ணாரே கரையாரே விளையாட்டுப்பெயரும் விளையாடும் முறையும் இருபாலர் விளையாட்டு என்றும் சொல்லப்பட்டுள்ளது. தனது பக்கத்து வீட்டில் இருந்த சரசக்காவைப் பற்றி நினைத்துப்பார்க்கும் சிறுவன் பெண்கள் என்றாலே இப்படித்தான் என்று சிறுவயதிலேயே எதிர்பாலினத்தைப் பற்றி எண்ணங்களைச் சுமந்து கொண்டிருப்பதையும் இவ்வரிகள் தெரியப்படுத்துகின்றன.

ஒட்டகத்தை ஏமாற்றும் பாட்டு : சோமாலியா நாட்டுப்பாடல்

ஒட்டகமே ஒட்டகமே
என் ஆசை ஒட்டகமே
இந்த விறகுக் கட்டை மாத்திரம் சுமந்து வருவாயா
உனக்கு நிறையப் புல்லுக்கட்டு தருவேன்.

ஒட்டகமே ஒட்டகமே
என் ஆசை ஒட்டகமே
இந்தக் கூரைமுகட்டை மாத்திரம் சுமந்து வருவாயா
உனக்கு நிறையத் தண்ணீர் தருவேன்.

ஒட்டகமே ஒட்டகமே
என் ஆசை ஒட்டகமே
என் படுக்கைகளை மாத்திரம் சுமந்து வருவாயா
உனக்கு முதுகு தேய்த்து விடுவேன்.

ஒட்டகமே ஒட்டகமே
என் ஆசை ஒட்டகமே
என் ராசகுமாரனை மாத்திரம் சுமந்து வருவாயா
உனக்குக் கட்டி முத்தம் தருவேன். (ஒட்டகம்: 471-72)

இப்பாடல் வரிகளில் கடைசி வரிகள் அவளாகவே சேர்த்துக் கொண்டது என்றும் அவளாகவே இட்டுக்கட்டிய பாட்டை அவள் அடிக்கடி நினைவு கூர்வாள் என்றும் கதையாசிரியர் கூறுகிறார். வாய்மொழி இலக்கியத்திற்கேயுரிய பண்பான மீண்டும் மீண்டும் வருதல்என்கிற கருத்தில் வெளிப்படுகின்றது. மேலும் பெண்கள் தங்கள் மனதில் நினைத்ததைப் பாடலாக்குவதும் அதாவது சிறுமியாக இருந்தாலும் பெண்ணின் பிறவிப்பயனே திருமணம்தான்; அதிலும் ஒவ்வொரு பெண்ணின் கனவும் ஒரு ராஜகுமாரனே தன் கணவனாக வரவேண்டும் என்று விரும்புவதுமாகப் பெண்கள் பற்றிய சமூகத்தின் எண்ணங்களும் எதிர்பார்ப்புகளும் உலகம் முழுவதிலும் ஒரே மாதிரியாக இருப்பதை இக்கதைவழி அறிந்துகொள்ளமுடிகிறது. இக்கருத்தைப் பின்வரும் பகுதிகளைக் கொண்டு மேலும் புரிந்துகொள்ள முடியும்.

- 'ஊர்வலம்' என்கிற கதை வேறொருவருடன் திருமணமாகும் ஒரு பெண் தனது திருமண ஊர்வலத்தின் போது தனது பால்ய விளையாட்டுக்களை நினைவுகூருவதாக அமைகிறது. 'பத்து வருடங்களுக்கு முன்னர் அவளும் அவள் மச்சான் மாணிக்கமும் மாப்பிள்ளை பொம்பிளை விளையாட்டு விளையாடி இருக்கிறார்கள், சீ என்ன இது வயது தெரியாத

காலத்தில் பைத்தியக் காரத்தனமாக விளையாடி இருக்கலாம்' (ப. 37) என்றும் '...மணல் மேட்டில் வீடு கட்டி விளையாடுவோம் - மறுபடி அப்படி விளையாடமுடியுமா' (ப. 39) என்றும் மீண்டும் வரும் பழைய நினைவுகளை அவள் உதறப்பார்க்கிறாள் முடியவில்லை.

- கொக்கான் விளையாட்டில் அவளை வீழ்த்தமுடியாது. கொக்கானுக்கென்றே பிறந்தவள்போல ஒருவித ஆவேசத்துடன் விளையாடுவாள்.
- இப்போதெல்லாம் மும்முரமாகக் கொக்கான் விளையாடிக் கொண்டிருக்கும் சமயங்களில் அக்காவின் யோசனை மாறிவிடுகிறது.
- அக்காவின் திருமணம் தடைபட்டதும் கொக்கான் விளையாட்டிலும், தாயம் விளையாட்டிலும் என்னிடம் தோற்றாள். (ப. 442)

என்கிற பகுதிகள் சிறுவர் உலகமே திருமணம்தான் அவர்கள் விளையாட்டுக்களிலிருந்து திருமணத்தைப் எளிதில் பிரிக்கமுடியாது. பெரியவர்கள் அப்படி அதன்மேல் ஆசையை உருவாக்கிவிடுவார்கள் என்று கி. வ. ஜகந்நாதன் கூறுவது பொருத்திப் பார்க்கத்தக்கது.

### விளையாட்டுப் பொருட்கள்

பொதுவாகச் சிறுவர்களின் விளையாட்டுப் பொருட்களும் விளையாடுமிடமும் சாதாரணமானவை. விலை கொடுக்கத் தேவையில்லை. வீட்டில் கிடக்கும் வேண்டாத பொருட்களும், பெரியவர்களால் வேண்டாமென்று ஒதுக்கப்படும் பொருட்களுமே அவர்களின் விளையாட்டுப் பொருட்களாக அமையும். முத்துலிங்கம் கதைகளிலும் இப்பொருண்மையிலேயே விளையாட்டுப்பொருட்கள் பற்றிய பதிவுகள் கூறப்பட்டுள்ளன.

- திருவிழாக் காலங்களில் கோயில் கடைகளில் காணப்படும் கடைகள் பற்றிப் பேசப்படுகிறது. கோயில் வீதிகளில் இரவுக்கிரவாகவே புதுக்கடைகள் எல்லாம் முளைத்துவிடும். இந்தக் கடைகளை பிரதானமாக மொய்ப்பது பெண்களும் குழந்தைகளும்தான். சிறுவர்களுக்கு விளையாட்டுச் சாமான்கள் வைத்திருக்கும் கடைகளில்தான் மோகம் அதிகம். ஆனால் இவற்றை வாங்கும் பணவசதி எல்லோருக்கும் கிடைப்பதில்லை. ஆகவே அவர்கள் 5சதம், 10சதம் என்று கையில் வைத்துக்கொண்டு இங்கும் அங்குமாக அலைவார்கள். கடலை, பம்பாய்மிட்டாய், ஐஸ், பழம் இதில் எதை வாங்குவது, எதை விடுவது இதுதான் அவர்களது முக்கிய ஏக்கம். இந்தச்

சிறுவர்கள் குழம்பிப்போய் ஒரு முடிவும் எடுக்கமுடியாமல் தவித்துப் போவார்கள். (ப. 347) 'வடக்குவீதி' என்கிற கதையில் வரும் சோதிநாதன் என்கிற கதாபாத்திரம் சிறுபெண்ணின்மேல் தன் மனம் இலயிப்பதைத் தடுக்கமுடியாமல் தவிக்கும் தவிப்பைக் கூறும்போது விளையாட்டுப் பொருட்கள் பற்றிப் பேசப்படுகிறது.

ஒரு தேயிலைப் பையை அதில் தொங்கும் நூலுடன் விளையாடக் கையில் கொடுத்தால் போதும் அப்ஸராவை ஏமாற்றிவிடலாம் (எந்த நிமிடத்திலும் பறி போகும் வேலை-764)

துணியினால் பொம்மை செய்து விளையாடும் பழக்கம் சிறுமிகளுக்கு இருந்ததாக 'நாளை' என்கிற கதை கூறுகிறது. ஒரு சிறுமி துணிப்பொம்மை ஒன்றை அணைத்துக் கொண்டிருந்தாள். அந்தப் பொம்மைக்குச் சிவப்புத் தலைமயிரும் பெரிய கருத்த விழிகளும் இருந்தன. (ப. 490)

தம்பி இரண்டு மார்பிள்களை வைத்து விளையாடிக் கொண்டிருந்தான். அதில் ஒரு மார்பிள் அபூர்வமாக் இருந்தது. ஆகாய நீலத்தில் வெள்ளைப்பூ வைத்து அவற்றை உருட்டியும், எறிந்து பிடித்தும் விளையாடினான். அந்த மார்பிள்களைக் கேட்டபோது கர்ணன் போர் உக்கிரத்தில் கவச குண்டலங்களைக் கழற்றித் தானம் செய்ததுபோல இவனும் தந்தான். இவ்வரிகளும் உவமையும் சிறு பிள்ளைகளுக்கு விளையாட்டுப் பொருட்களின் மீதுள்ள பற்றை மோகத்தைக் காட்டுகின்றன. (பக். 609 - 611)

'லவங்கி அவளுக்குப் பிடித்தமான ஒரு விளையாட்டை ஆரம்பித்திருந்தாள். பிளாஸ்டிக் பைகளைப் பிசைந்து தலையிலே கவிழ்த்து விளையாடுவது தடுக்கப்பட்ட விளையாட்டு என்றபடியால் அவளுக்கு அதிகமான ஆவல் ஏற்பட்டது. இந்தக் கட்டுப்பாடற்ற சுதந்திரம் அவளுக்குப் பிடித்திருந்தது. வெகு விரைவிலேயே இதற்கு ஒரு தடை வரும். அதற்கிடையில் அந்த விளையாட்டின் உச்சத்தை அடைந்துவிட எண்ணினாள். முகத்தில் தாங்கமுடியாத கள்ள சந்தோஷம்' (ப. 662-663) என்று கூறுவது குழந்தைகளின் வாழ்வில் மட்டுமல்ல ஆசிரியரது வாழ்விலும் விளையாட்டுக்கள் பெறுமிடத்தையே காண்பிக்கிறது.

அவளிடம் பலவிதமான விளையாட்டுப் பொருட்களும் வண்ணப் புத்தகங்களும், மிருதுவான துணிப் பொம்மைகளும், பட்டரியில் இயங்கி நகரும், பாடும், மணி அடிக்கும் சாதனங்களும் இருந்தன. ஆனால் சில வேளைகளில் ஒரு போத்தலின்

மூடி முக்கியமான விளையாட்டுப் பொருளாகிவிடும். ஐந்து வருடத்திற்கு முந்திய கிறிஸ்துமஸ் அட்டையைத் தூக்கிக் கொண்டு பல தேசங்களுக்குப் பயணித்துத் திரும்புவாள். அவள் ஒரே விளையாட்டைத் திருப்பித் திருப்பி விளையாடும் பழக்கம் உடையவள் அல்ல. உங்களைப் பற்றிய நல்ல அபிப்ராயம் அவளுக்கு ஏற்படவேண்டுமானால் பல புதிய விளையாட்டுக்களைச் சிருஷ்டித்துக் காட்டும் திறமை உங்களுக்கு இருக்கவேண்டும்' (ப.764) என்பது குழந்தை களுக்கும் பெரியவர்களுக்குமான விளையாட்டு உறவைச் சுட்டுகிறது.

இவரது மற்றொரு கதையான 'கோடைமழை' என்கிற கதையிலும் ரெயில்வே லைன் கரைதான் குழந்தைகளுடைய மைதானம். தண்டவாளத்தின் மேல் வரிசையாகச் சோடா மூடிகளை அடுக்கிவிட்டு யாழ்தேவி (இரயில்வண்டியின் பெயர்) வரும்போது ஒளிந்திருந்து வேடிக்கை பார்ப்பதுடன் அவர்களுடைய ஆரம்ப விளையாட்டு முடிந்துவிடும் (ப. 19) என்று கொக்குவில் என்கிற ஊரின் குழந்தைகளைப் பற்றிக் கூறும்போது விளையாட்டு இடம் பற்றிய செய்தி காணப்படுகிறது.

இரண்டு வயதானபோது எனக்குத் தெரியாமல் வீட்டைவிட்டு வெளியில் சென்று அவள் விளையாடத் தொடங்கினாள். (ப. 585)

## சடங்கு விளையாட்டுக்கள்

சடங்குகள் ஒரு பண்பாட்டின் வேர்களாகக் கருதப்படுவன. இச்சடங்குகளில் பொழுதுபோக்கிற்காகவும், பழக்கமற்ற மனிதர்கள் தங்களைப் புரிந்து கொள்வதற்காகவும் இறந்த ஆன்மா கடவுளைச் சேரவேண்டும் என்பதற்காகவும் என்கிற பொருண்மைகளில் விளையாட்டுக்கள் விளையாடப்படுகின்றன.

- ❖ முற்காலத்தில் பெண்கள் மாதவிலக்கு நாட்களில் தனியாகவும், தனிக்குடிசையிலும் தங்க வைக்கப்பட்டனர். அந்நாட்களில் பொழுதுபோகாததால் தனியாகச் சில விளையாட்டுக்களை விளையாடி மகிழ்கின்ற வழக்கம் காணப்பட்டது. இச்செய்தி 'ஆயுள்' என்கிற கதையில் 'பாஷாலி' என்கிற குடிசையிலிருந்து அவள் அதிகாலையில் கையில் சில மரப்பாவைகளுடன் வெளிப்பட்டாள் என்று சொல்லப்பட்டுள்ளது.
- ❖ விவாகச் சடங்குகளில் மோதிரம் எடுப்பது என்று ஒன்று. தண்ணீர்க் குடத்தில் ஐயர் மோதிரத்தைப் போடுவார். இது

மணமக்கள் கையைத் தடவிப் பார்ப்பதற்காகப் பண்டுதொட்டுப் பெரியோரால் ஏற்பாடு செய்யப்பட்ட ஒரு வழக்கம். அது மூன்று வயதுப் பிள்ளைக்குக்கூடத் தெரியும். வண்ணத்துப்பூச்சிகளில் மனதைப் பறிகொடுத்திருந்த கோணேஸ்வரனுக்கு இது தெரியாமல் போய்விட்டது. மணப்பெண் இந்தச் சாக்கில் குடத்துக்குள் அவர் கையைத் தடவுவதுபோல் தடவ இவரோ அவசரப்பட்டு மோதிரத்தை எடுத்து நீட்டினாராம்.

❖ இறந்த வீட்டில் விளையாடப்படும் விளையாட்டுப் பற்றியும் இவர் தன் கதைகளில் பேசுகிறார். வெட்டு, இறக்கு விளையாட்டு - 'செத்தவீடு களை கட்டிவிட்டது. புளியமரத்தின் கீழே ஒரு துண்டைவிரித்து விட்டு வெட்டு, இறக்கு விளையாடிக் கொண்டிருந்தார்கள் புருஷர்கள். விளையாட்டுத் தெரிந்தவர்கள் அல்லது விளையாட இடம் கிடைக்காதவர்கள் சுற்றிவர நின்று அவ்வப்போது இலவச ஆலோசனைகளைக் கூறிக் கொண்டிருந்தார்கள்' (ப. 84) இவ்விளையாட்டில் வருகின்ற வெட்டு, இறக்கு என்கிற சொற்கள் 'தாயம்' விளையாட்டில் பயன்படுத்தப்படுகின்ற சொற்கள் ஆகும். தமிழர்களில் வைணவ சமயத்தவர்களிடம் இறந்தவரின் பிணத்தை இறந்த வீட்டில் இரவு வைத்திருக்க நேரும்போது 'பரமபதம்' விளையாட்டு விளையாடும் பழக்கம் காணப்படுகிறது. அப்படி விளையாடினால் இறந்தவரின் ஆன்மா கடவுளைச் சென்றடையும் என்கிற நம்பிக்கையும் காணப்படுகின்றது. முத்துலிங்கம் கதைச் செய்தியை இத்துடன் ஒப்பிட்டு ஆராய இடமிருக்கிறது.

பாலினப்பாகுபாடு

விளையாட்டுக்களில் ஆண்கள் விளையாடுவன, பெண்கள் விளையாடுவன என்கிற பாகுபாடு உண்டு. முத்துலிங்கம் 'கற்பாறைகளை வெறும் கையால் பிடித்து ஏறும் வித்தையில் கெட்டிக்காரன். அதற்கேற்ற உடல்வாகு அவனுக்கிருந்தது. பெண்களும், ஆண்களும் சமமாகப் பங்கேற்கும் விளையாட்டு இந்த உலகிலேயே இது ஒன்றுதான்' என்று 'ஞானம்' (ப. 292) என்கிற கதையில் குறிப்பிடுகிறார். விளையாட்டுக்களைப் பதிவு செய்தல் என்பதோடு 'படைப்பாளி தன் படைப்புக்களில் தன் மனதில் புதைந்துள்ள தான் சார்ந்து வாழும் சமூக எண்ணங்களையும் அதாவது பாலினம் குறித்த தனது எண்ணங்களையும் பதிவு செய்திருக்கிறார்' என்றே கருத இடமிருக்கிறது.

## துணைநூல்கள்


1. **அ. முத்துலிங்கம் கதைகள்,** அ. முத்துலிங்கம், தமிழினி, சென்னை, 2008
2. **நாட்டார் வழக்காற்றியல் சில அடிப்படைகள்,** தே. லூர்து, நாட்டார் வழக்காற்றியல் ஆய்வு மையம், தூய சவேரியார் கல்லூரி, பாளையங்கோட்டை, 2008
3. **குழந்தை உலகம்,** கி.வ. ஜகந்நாதன்.
4. **தமிழர்பண்பாட்டில் விளையாட்டுக்கள்,** அ. பிச்சை. கபிலன் பதிப்பகம், சென்னை 1983.

# மலேசியக் கவிதைகளில் செவ்வியல் இலக்கியங்களின் தாக்கம்

முனைவர் மு. அருணகிரி
முதல்வர், (பணிநிறைவு)
தியாகராசர் கல்லூரி
மதுரை

உலகின் பல நாடுகளிலும் பரவி வாழ்பவர்கள் தமிழர்கள். வேலைதேடிச் சென்றவர்களாகவோ, அகதிகளாகச் சென்றோ அவ்விடங்களில் வாழ்கின்றனர். குறிப்பாகத் தமிழகத்திலிருந்தும், இலங்கையிலிருந்தும் இத்தகைய புலம்பெயர்தல் நடைபெற்றுள்ளது, நடைபெறுகிறது. ஒரு நாட்டிலிருந்து, பிற நாடுகளுக்குச் சென்று சிற்சிலகாலம் வாழ்ந்து புலம்பெயர்ந்து கொண்டேயிருக்கும் சூழலையும் காணமுடிகிறது.

பல நூற்றாண்டுகளாக நாடுவிட்டு நாடு செல்லும் போக்கு இருந்திருப்பினும், கடந்த இரு நூற்றாண்டுகளாகத்தான் அதிகம் காணப்படுகிறது. இந்தியாவைப் பிரிட்டிசார் ஆண்டபொழுது, ஒப்பந்தக் கூலி அடிப்படையில் மலேசியா, மொரீசியஸ், பர்மா, இலங்கை போன்ற நாடுகளுக்குச் சென்றனர். அந்நாடுகளைக் கடுமையாக உழைத்துச் செழுமையாக்கினர். தாம் பொருளாதார அமைப்பில் பெரிதும் முன்னேறாவிடினும், அவ்வந்நாடுகளை முன்னேற்றினர்.

இதேபோன்று, இலங்கையில் ஏற்பட்ட அரசியல், சமுதாயச் சூழல்களினாலும், போர்ச்சூழலாலும், இனப்படுகொலையினாலும் உலகின் பல நாடுகளுக்குச் சென்று கொண்டேயிருக்கின்றனர் தமிழர்கள்.

ஆண்டுகள் பல கழிந்தநிலையில், வாழிடச் சூழலுக்கேற்பத் தம் வாழ்க்கை முறையை மாற்றிக் கொண்டதையும், தாய்மொழியில் பிறமொழிக் கலப்பை மிகுதிப்படுத்தியதையும், வீட்டைத் தவிரப் பிற இடங்களில் தத்தம் மொழிகளல்லாது பிறமொழிகளில் பேசுவதையும், வீடுகளில் கூடத் தாய்மொழியில் பேசாமல் இருக்கும் நிலையினையும் இப்போதெல்லாம் காணமுடிகிறது.

தமிழர்கள் புலம்பெயர்ந்துள்ள நாடுகளில் தமிழ்க்கல்வியும், தமிழ் இலக்கிய வளர்ச்சியும் மெதுவாகவே வளர்ந்து வருகின்றன எனலாம். இத்தகைய சூழலில், மலேசிய நாட்டில் வாழும் தமிழர்களின் தமிழ் இலக்கியப் போக்கை இக்கட்டுரை முன் வைக்கிறது.

## மலேசியாவும் தமிழ் இலக்கியமும்

1957-இல் விடுதலை பெற்ற மலேசியா இன்று உலகில் வளரும் நாடுகளுள் ஒரு தனிச்சிறப்புப் பெற்ற நாடாய்த் திகழ்கிறது. உலகமே இதனை வியப்போடு நோக்குகிறது. 1963வரை மலாயா எனும் பெயரில் 11 மாநிலங்களை மட்டும் கொண்ட நாடாய் விளங்கிற்று. பின் 16.09.1963இல் சிங்கப்பூர், சரவா, சபா ஆகிய மாநிலங்களையும் உள்ளடக்கிய மலேசியாவாய் விரிந்தது. 1965இல் சிங்கப்பூர் தனிக் குடியரசாயிற்று. பின்னர் 13 மாநிலங்களொடு கூட்டரசு வளாகமும் சேர 14 மாநிலங்களாய் மலாயா விளங்குகிறது என்பார் முரசு நெடுமாறன்.

இத்தகைய மலேசியாவில் தமிழாசிரியர்களாகவும், பேராசிரியர்களாகவும் பணிபுரிவோர், தமிழ் ஆர்வலர்கள், தமிழகப் பகுதிகளிலிருந்து சென்று வருவோர் ஆகிய தரப்பினர் தமிழ் இலக்கியம் படைக்கின்றனர். தமிழகத்தைப் போலப் பெரும் வளர்ச்சி பெற்ற தமிழ் இலக்கியங்களைக் காணமுடியவில்லை எனினும், சமகாலச் சிக்கல்களும், தமிழ், தமிழர், பண்பாடு மீது அவர்கள் கொண்டிருக்கும் பெருத்த ஈடுபாட்டையும் இவ்விலக்கியங்களில் காணமுடிகிறது.

‘இழவில் அழுதிடும் பெண்கூட, இசையோடு அழுவது கண்கூடு’ என்ற நாமக்கல் கவிஞரின் கூற்றுக்கு ஏற்ப மலேசிய நாட்டுப்புறப்பாடல்களில் மண் மணமும், தமிழ் மணமும் கமழ்வதைக் காணலாம்.

மலேசியத் தமிழ் இலக்கியங்களில் பிற இலக்கியங்களின் தாக்கமும், சங்க இலக்கியங்களின் தாக்கமும் இடம் பெறுவதைக் காணமுடிந்தாலும், மண்மணமும் சமகாலச் சிக்கல்களுமே காணப்பெறுகின்றன.

இருப்பினும் செவ்வியல் இலக்கியங்களாகக் கருதப்பெறும் தமிழ் இலக்கியங்களின் தாக்கம் மலேசிய இலக்கியங்களில் உருவம், உள்ளடக்கம் வெளிப்படும் முறையில் அமைந்துள்ளன.

மலேசியாவில் மரபுக் கவிதைகளுக்கு வரவேற்பு அதிகம். படைப்போரும் அதையே விரும்புகின்றனர் எனும் கூற்றே தமிழ்ச் செவ்வியல் இலக்கியங்களின் தாக்கத்தைப் பெற்றிருப்பதற்குச் சான்று ஆகும். மலேசியாவில் புதுக்கவிதை, ஹைக்கூ படைப்போர் குறைவே.

மலேசிய இலக்கிய வரலாற்றில் முதலிடம் வகிப்பது நாட்டுப்புறப்பாடல்களே. தமிழர்கள் பினாங்கில் குடியேற்றப்பட்ட போது, தங்கள் துன்பங்களையும், வருத்தங்களையும் தங்கள் பட்ட பாட்டையும் மறக்கப் பாட்டுப் பாடியுள்ளனர்.

மலேசியப் பாவலர்கள் ஆசிரியத்திலும், ஆசிரிய விருத்த வகையிலும் நிரம்பப் பாடியுள்ளனர். வெண்பா, கலிவெண்பா, தரவுக்

கொச்சகக் கலிப்பாவிலும் பாடியுள்ளனர். பலர் சிந்து எனப்படும் யாப்பில் பல்வேறு வடிவங்களைக் கையாண்டுள்ளனர்.

மரபுக் கவிதைக்குச் சான்று

மா.இராமகிருட்டினன், 'குரல் கொடுக்கும் தலைமை வேண்டும்' எனும் தலைப்பில் எழுதிய கவிதை.

ஆண்டாண்டு காலமாய் மேடையேறி
அயராது கத்தினோம் என்ன லாபம்?
வேண்டாத பெண்டாட்டி கதைதான் இங்கே
வீரமாய்க் குறை சொல்லித் திரிந்தோ மன்றோ?
பூண்டோடு சமுதாயம் அழிந்தபோதும்
புரியாமல் அதற்கு நாம் துணையே போனோம்!
வேண்டாவே இனியிந்த அணிகளெல்லாம்
விழிப்புடனே பணிசெய்து உயர்வோம் வாரீர்!......
"தோழமைதான் என்றாலும் உரிமை கோரித்
தொய்வின்றிக் குரல்கொடுக்கும் தலைமைவேண்டும்"

எளிமையான சொற்களோடு சிறந்த யாப்பு முறையில் அமைந்துள்ள கவிதை இது.

மாங்குடி மருதனார், மதுரைக் கூல வாணிகன் சாத்தனார் என்ற பெயர்களைப் போன்று மலேசியப் புலவர்கள் தம் பெயர்களைக் கொண்டுள்ளனர். சான்று : காரைக்கிழார்.

உண்ணற்க கள்ளை, உணில் உண்க, சான்றோரால்
எண்ணப் படவேண்டா தார் (கள்ளுண்ணாமை:922)

எனும் குறள் கருத்தமைந்த பாடலைப் பாடியவர் காரைக்கிழார். புராணச் செய்திகளையும் தம் பாடலில் இணைத்துள்ளார்.

முப்புரம் எரித்த / அச்சிவன் கணையை/
முழுதாய் மிஞ்சும் எரிதண்லை துப்புரவாயும்
நெஞ்சுச்கூட்டை/ நொறுக்கிப் போடும்
எரிதண்ணி / நீங்கள் குடிக்கும்
ஒவ்வொரு துளியும் / நஞ்சாய் என்னுள் எரிகிறது.
தாங்கிப்பிடிக்க ஒவ்வொரு துளியும் /
நஞ்சாய் என்னுள் எரிகிறது/
தாங்கிப் பிடிக்க / முடியாவாறு
தமிழ்ச் சமுதாயம் சரிகிறது.

## மலேசியக் கவிதைகளில் திருக்குறள் செல்வாக்கு

கள் குடித்தலின் தீமை, பற்றிக் கூறும் மலேசியக் கவிதைகள் அதிகமாகவே உள்ளன. திருக்குறள் பாக்களை நினைவூட்டுகின்றன.திருக்குறள் கருத்தை ஆளும் ஒரு கவிதை:

நிலம் பார்ப்பாள் முகம் பார்த்தால் பார்க்காவிட்டால்
நிலைகுத்திப் பார்த்திடுவாள் காதற் பெண்ணாள்
நலஞ்செய்யும் கொழுநன் தோள் பற்றும் போது
நாணத்தால் விலகிப்போய் ஊடல் கொள்வாள்
புலனைந்தும் இன்புறவே மிதந்து வந்து
பூங்கவிதை பாடுகின்ற தென்றற் காற்றே!
வலம் வந்தே இடைதொட்டு நீயணைத்தால்
வருந்தாமல் மெல்லியலார் வாழ்த்தல் ஏனோ!

அமலதாசன் எனும் கவிஞர் தமிழ்முரசு இதழில் எழுதிய கவிதை இது.

திருக்குறள் காமத்துப்பால், குறிப்பறிதல் அதிகாரக் கருத்துக்களை உள்ளடக்கிய பாடல் இது.

யானோக்குங் காலை நிலனோக்கும் நோக்காக்கால்
தான்நோக்கி மெல்ல நகும் (1094)

கண்ணொடு கண்ணினை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனும் இல (1100)

எனும் குறட்பாக்களின் தாக்கத்தைக் காணலாம்.

கவிஞர் ஐ. உலகநாதன் தமிழ்முரசு இதழில் எழுதிய கவிதையும் சங்கச் சாயல் பெறுகிறது.

கார் வந்தும் வாராக் கணவன் வந்தக்கால்
போர் செய்வேன் என்றுரைத்தாள் பூவை இவள் - போர்வீரன்
ஊர் வந்தான், கூடினாள், நண்டொடியாள் கொண்ட சினம்
நீர்மேல் எழுத்துக்கு நேர்"

வெண்பாவுக்கு நல்ல சான்றாகும் கவிதை - முத்தொள்ளாயிரப் பாடற்கருத்தும், பழமொழி நானூறு கருத்தும் இழையோடி இன்பம் பயக்கும் உளவியல் கவிதை இது. கணவன் மீது மனைவி கொள்ளும் ஊடலும், சினமும் நீர்மேல் எழுத்துக்கு நேராக அமையின் மணமுறிவுகள் ஏற்படுமா என்ன?

கள் குடியைப் பாடும் புலவர் கரு.திருவரசு இதனால் நமது மொழி, இனம், பண்பாடு சிதையும் என்பதை வெளிப்படுத்துகிறார்.

கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே தோன்றி
காத்த குடி மூத்த குடி தமிழர் குடி என்பார்
கள் குடித்து, பீர் குடித்துச் சாராயம் குடித்து
கனத்த குடி பெருத்தகுடி காரர்களாய் ஆனோம்
பல்குடிகள் வாழ்கின்ற மலேசியத்தில் கடைசிப்
படிகளிலே நின்றபடி பார்க்கின்ற குடிநாம்
வல்குடிமகள் வளமான தொல்குடிகள் என்ற
வரலாற்றைப் புதுப்பிக்கப் புறப்படுவோம் வாரீர்!

கவிஞர் ரெ.சண்முகம் 'அன்புடைமை' அதிகாரக் கருத்துகளைத் தம் கவிதையில் (ஒரு சிந்தனை) வெளிப்படுத்துகிறார்.

உண்பதுவும் உறங்குவதும் எல்லாம் - உள்ள
அமைதிக்குத் தான் என்னும் உண்மை
அன்பர்க்குத் தான் இங்குத் தோன்றும் - அந்த
அன்பென்னும் அறம் நிலைக்க வேண்டும்

யாப்பின் பலவகைகளை இக்கவிஞர் பின்பற்றியிருப்பது சிறப்பு. அம்மானை, அந்தாதி, கண்ணி போன்ற சிற்றிலக்கியப்பாடல்களை, தொல்காப்பியவழி பாடியுள்ளார்.

அன்பிலார் எல்லாம் தமக்குஉரியர் அன்புடையார்
அன்பும் உரியர் பிறர்க்கு (72)

அன்பின் வழியது உயிர் (80) எனும் குறட்பாக் கருத்துக்களை உள்ளடக்கிய கவிதை இது.

### செவ்வியல் இலக்கியத்தாக்கம்

செவ்வியல் இலக்கியப் பெயர்களையும் பிறவற்றையும் தம் பாடல்களுள் வைத்துப்பாடும் மரபும் உள்ளது.

குடித்த மயக்கத்தில் பாடுகிறேன் - அது
கொடுத்த மயக்கத்தில் ஆடுகிறேன்
தொடுத்த அகம்புறம் திணை சார்ந்து – எட்டுத்
தொகையொடு பத்தென வகை தேர்ந்து
படைத்த பதினெண் கீழ்க்கணக்கும் - நெஞ்சம்
பற்றும் காப்பியம், பல்சுவையும்...
எடுத்த செயல்எலாம் அறமாக – அஃது
இணைந்த வரவெலாம் பொருளாக
பிடித்த உறவினால் இன்பாக – வீடு
பிணைத்திடும் குறளை அன்பாக.....

என்பது ஆதம்குமார் எனும் கவிஞரின் உறவுகள் எனும் படைப்பாகும்.

இதில் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள், திருக்குறள் என அனைத்து நூல்களையும் காட்டுகிறார். அதிலும், அறம், பொருள், இன்பம் என மூன்றாக அமைந்துள்ள திருக்குறள், வீடு பேற்றுக்கும் காரணம் ஆகும் என்று விளக்குகிறார்.

### சங்கப்பாடல்களின் தாக்கம்

பிள்ளைச் சிரிப்பு எவ்வாறெல்லாம் அமையும் அவை இன்புறுத்தும் முறைகள் எவை? பயன்கள் என்ன என்பதை இரா.பாண்டியன் உணர்ச்சிபட வெளிப்படுத்தியுள்ளார்.

உத்தம மனைவி வாயில், ஒளிரும்பொன் மணியில் தூய
முத்தென எழிலாய் மண்ணில் முளைக்கும் நெற்
குருத்தில், போற்றும்

சித்தனின் செயலில், நாதம் தேர்ந்த யாழ்இசையில்,
மெள்ளத்
தத்தியே நடந்தோரின்பம் தரும்பிள்ளைச் சிரிப்பைக்
கண்டேன்!

என்று பிள்ளைச் சிரிப்பைக் கவிதையில் காணும் போது 'குறுகுறு நடந்து' எனும் சங்கப்பாடலும் நிழலாடும். அதேபோன்று, ப.மு.அன்வர் எனும் கவிஞரின் 'எம்மலைநாடு' எனும் கவிதையும் சங்கப்பாடலின் தாக்கத்தைக் கொண்டுள்ளது.

நாடஃ தென்ப நாடா வளத்தன
நாடில நாட வளந்தரு நாடென
நாடிய நுண்பொருள் நவிலுஞ் சான்றோன்
பாடிய பொருண்மை புரிந்தனம்...
. . . . . . . . . . . . . . . . . . . . .
எண்ணிரு திசையின் எத்தே யத்தும்
கண்ணிரு மணியும் காணா நிற்ப
நன்னிரை நிறையும் வீடு
எண்ணிறை ஏத்தும் எம்மலைநாடே
(ம.த.க.களஞ்சியம்.ப.294)

எனப் பாடல் அமைகிறது. "யாதும் ஊரே யாவரும் கேளிர்" எனும் புறநானூற்று வரிச் செய்தியை மலேசியாத் தமிழ் இலக்கியங்களில் பெரிதும் காணலாம்.

யாதும் ஊரென ஓதும் தமிழின்
சீரைப் பெருக்கும் சிந்தனை யாளர்
உயிராம் தமிழின் உணர்வை வளர்க்க
உலகத் தமிழ்மா நாட்டை நடத்தும்
தலைவர், தமிழன் தனிநாயகரே!
நுங்கள் வரவுநல் வரவாகுகவே (ப.316)

என்று கவிஞர் வே.சங்குசண்முகம், உலகத் தமிழா வருக என்று தமிழ்நேசன் இதழில் (ஏப்பிரல் 1966) பாடிய கவிதையே சான்று.

சங்ககாலப் பண்புகளான அன்பு, அறம், கனிவு, கொடை, வீரம் போன்றவற்றைப் புலவர் அ. முத்தையனார் (தமிழ்மலர்) வெளிப்படுத்துகின்றார்.

அன்பினில் இன்பம் காண்போம்
அறத்தினில் நேர்மை காண்போம்
துன்புறும் உயிர்கள் கண்டால்
துரிசறு கனிவு காண்போம்
வன்புகழ் கொடையில் காண்போம்
வலிமையைப் போரிற் காண்போம்
தன் பிறப்புரிமையாகத்
தமிழ்மொழி போற்றக் காண்போம்
(ம.த.க.களஞ்சியம்.ப.317)

........யாம் இரப்பவை
பொருளும், பொன்னும் போகமும் அல்ல, நின்பால்
அருளும், அன்பும், அறனும், மூன்றும்
உருள்சிணர்க் கடம்பின் ஒலிதாரோயே"

என்ற பரிபாடல் செய்திச் சாரத்தை இக்கவிதையில் காணலாம்.

பொருள்வயின் பிரிந்த தலைவனைச் சங்க இலக்கியத்தில் காணலாம். அவனை எதிர்நோக்கிக் கல்வி குறித்த காலம் வரை காத்திருப்பாள், அவனது மனஉணர்வுகளைப் பல வழிகளில் வெளியிடுவாள். இத்தகைய நிலையைப் புங்கைப் புகழேந்தி எனும் மலேசியக் கவிஞர் தமிழ் நேசன்வழி (ம.த.க.களஞ்சியம்) – வரல் வேண்டும் நீ இங்கே (பக் 499-500) காட்டி, மனம் நெகிழச் செய்துள்ளார்.

மாலையிட்டு மணமுடித்து மணங்கவர்ந்த
மன்னவரே! வாழ்வளிக்க வந்த கோவே!
அலைவாய்க் கரும்பாக நையவிட்டீர்!
அயல்நாடு போனவுடன் அன்பை விற்றீர்

என்று சொல்லும் மனைவி

பெண்ணுக்குப் பெருஞ்சொத்துக் கணவன் தானே!
பெருமை யெலாம் பேணுபவள் மனைவிதானே!
கண்ணிற்கும் கருத்திற்கும் நானிருக்கக்
கடைவிரித்த பொய்யுடலை நாடலாமோ!

என்று கணவனின் பரத்தமையைக் குறிப்பிட்டு

பொறுமைக்கும் எல்லையுண்டு! என்றன் வாழ்வில்
போற்றுமுயர் இன்பத்தைத் துய்த்தேனில்லை'

என்று இரங்கி,

....... வாழ்க்கை முற்றும்
இருள்வேண்டி நிற்பதுதான் வாழ்க்கை என்றால்

என் கழுத்தில் பொற்றாலி ஏன்தான் வேண்டும்! வரல் வேண்டும் நீ இங்கே! இல்லை என்றால் மனம் வெடித்துநான் சாதல் வேண்டும் இன்னே" என்று முடிப்பது இக்காலச்சூழலை வெளிப்படுத்துகின்ற தன்றோ!

சங்க இலக்கியங்களின் தலைவி தன் நிலைகூறித் தோழியைத் தலைவனிடம் தூதுவிடுவாள். குறியிடம் கூறுவாள். தலைவனைச் சந்திக்க, தலைவியைச் சந்திக்க இருவரும் பலவகைகளில் முயற்சிப்பர். இத்தகைய சூழல் பொன், அன்பரசன் கவிதையில் தலைவி ஏக்கம், என வெளிப்படுத்துகிறது. (ப.488)

தோழி நீ தூதுரைப்பாய் - நான்
தேய்நில வாகுமுன் அவரிடம்
தோழி நீ தூதுரைப்பாய் - கண்
தூங்குதலின்றி நான் ஏங்கித் தவிப்பதாய்
அன்பு மிகுந்தஎன் னாசை நின்படி – என்
ஆசைக்குரிய மணாளன் வரும்படி
என் மன ஆவலை இசைபெறக் கூறியே – நள்
இரவெனும் போதிலும் என்மனை நாடியே...
காவலே எனக்கிங்கில்லை யென்றும் - மனங்
கவலுற வாழ்கின்றாள் முல்லை என்றும்
சேவலும் கூவியே விடியும் முன்னம் - என்
செம்மலைக் கண்டு நான் வரச் சொன்னதாகவே.....

(தோழி)

தலைவி தன் நெஞ்சுக்குக் கூறியதாகவும், தலைவன் தன் நெஞ்சுக்குக் கூறியதாகவும் அகப்பாடல்கள் பலவுண்டு.

அதன் சாயலைத்தான் நெஞ்சொடு கிளத்தல் எனும் தை.சே.பெ. பொன்னம்பலம் கவிதையில் (ம.த.க.கூ.ப.483-84) காண்கிறோம்.

பானாட் கங்குல் படர்தரு காலை
மானோக் கவள்தான் மனமுயிர் பருகும்
தன்மைத் தாயென் தனிமையைச் சிதைத்தே
உன்மத் தன்என ஊரவர் உரைக்கச்
சென்றவள் யாரெனத் தெரிந்திலாய் மனமே!
இன்றென் பாங்கில் இராதே அவள்பின்
நெருநலே சென்றனை நீமீள் குவையோ?
பருதரு இரப்பர்ப் பாங்கே இருந்து
குறுமகள் வரவினைக் குறித்திருந் தென்செய?
உறுமவள் நெஞ்சென உவக்குமோ அறியேன்!
வருத்தினை காலே! வாழும்
திருமனை கண்டு மீண்டெனக் குரையே!

தலைவன் தன் நெஞ்சொடு கிளந்த பாங்கினைக் காண்கிறோம். களவுக் காலத்தே தலைவியோடிருந்த தலைவன், தலைவியை மணமுடிப்பேன் எனச் சொல்லிச் செல்வான். தலைவன் வருகையை எதிர்நோக்கிக் காத்திருப்பாள் தலைவி. இது சங்ககாலச்சூழல். இதே சூழலைச் சீ.மா.இளங்கோ 'மறந்தா போனீர்' எனும் கவிதையில் காட்டுகின்றார்.

பால்மரத்தோட்டத்தினிலே இருவருக்கும் நிகழ்ந்த உரையாடல்கள், சின்னச்சின்ன மகிழ்ச்சிகள், கண்மூக்கு கால்கை என்று நேர்ந்திடாது கடித்தீரே வடுத்தோன்ற, மறந்தாபோனீர்? என்று

நினைவுபடுத்திய தலைவி 'பெற்றோரும் உற்றாரும் முறையாய் வந்து பெண் கேட்போம்' என்று சொல்லிச் சென்ற தலைவன் நிலையையும் கூறி, கற்றவரே, நீர் புகன்ற காலம் விணே கரைவதனைக் காணீரோ? மறந்தாபோனீர்! என்று முடிப்பது சங்க இலக்கியத்தாக்கமே! (ப.490)

செவ்வியல் இலக்கியங்களுக்குத் தனிப்பண்புகள் உண்டு. காதல், வீரம், இயற்கை, மனிதப்பண்புகள், வாழும்முறை போன்றவற்றை உள்ளடக்கிச் சிறந்த பல யாப்பு வடிவங்களில் அமைந்திருக்கும்.

மலேசியக் கவிதைகளில் இத்தகைய பண்புகளைக் காணமுடிகிறது.

**இயற்கை**

கவிஞர் கு.கிருஷ்ணன் எழுதிய 'குருவிபோல' எனும் கவிதையில் குருவிகளின் இயல்பைக் கூறி, இயற்கையோடு இயைந்த வாழ்க்கையை விளக்கி, இத்தகைய வாழ்க்கையை மனிதர்கள் வாழவேண்டாமா என்ற தன் ஆதங்கத்தை வெளிப்படுத்துகிறார்.

**சின்னஞ்சிறு இலைகளெல்லாம் காற்றிலாடுது – அங்குச்**
**சித்திரப் பூங்கிளைகளோடு சேர்ந்து ஆடுது!**
**என்னவென்று பறந்து வந்த குருவிபார்க்குது – உடன்**
**இறக்கைவிரித் தாடிஇன்பம் குருவி கொள்ளுது!**
**மற்றுமொரு பெண்குருவி வந்துசேருது! – அதை**
**மனமுவந்து ஆண்குருவி வருக வென்னுது!**
**பற்றுக்கொண்டு பெண்குருவி கண்ணசைக்குது-உடன்**
**பனிக்குரலில் ஆண்குருவி பண்ணிசைக்குது!**

**...............................................................**

**மறுவிலாத குருவிபோல வாழ்ந்து காட்டவே - இந்த**
**மனிதகுலம் நினைப்பொழிந்து தாழ்ந்து போனதேன்?**
**குருவிபோலத் துன்பமின்றிப் பாடிவாழவே - இந்தச்**
**குவலயத்து மனிதராலே முடிவதில்லையே!**

(ம.த.க.களஞ்சியம்.ப.240)

இசையும் இலக்கணமும் கலந்து இயற்கை மூலம் மனித குல வாழ்வு அமைய வேண்டுமாற்றை இக்கவிதை விளக்குகிறது.

'தென்றல் ஒரு கவிஞன்' எனும் கவிதையில் கவிஞர் அமலதாசன் இயற்கையைச் சிறப்பாகச் சித்திரித்துள்ளார். (ப.255)

**வையகத்தின் சுழற்சியிலே பிறப்பெடுத்து**
**வழிந்தோடும் அருவியிலே குளிர்மை பெற்று**
**பொய்கை மலர்க் குவியலிலே மணம் பெற்றோங்கி**
**பொங்கியெழும் கடல்மீது தவழ்ந்து வந்து**

தெய்வம்போல் எம்முயிரில் கலந்து பாரில்
திருவொளிரும் புதுவீணை நாதம் மீட்டி
மெய்யுருகப் பாட்டிசைக்கும் தென்றல் காற்றை
மேலான கவிஞனெனச் சாற்றுவேனே!"
ஆடாத ஆட்டமெலாம் ஆடும் மாந்தர்
அருங்காற்றே நீயகன்றால் ஆவதென்னே?

என்று இயற்கையையும் பாடி, அதன் மூலம் சமூகச் சிந்தனையையும் கூறும் மரபினைப் பெரிதும் மலேசியக் கவிஞர்களிடம் காணலாம்.

பண்டைத் தமிழர் இயற்கையோடு வாழ்ந்ததைப் படம்பிடித்துக் காட்டுகின்றனர் மலேசியக் கவிஞர்கள். சங்க இலக்கியங்களைப் போல

கலையெழில் கொஞ்சக் கடிமணம் வீசும்
கவினுறும் மலேசிய நாட்டின்
மலைகளும் சோலை வனங்களும் நெஞ்சை
மயக்குறச் செய்து எந்நாளும்
அலைபுரண் டோடிஆர்த்திடுங் கடலின்
அழகுறு காட்சிகள் நம்மை
மலைத்திடச் செய்தே மனத்தினைக்கவரும்"

என்று மலேசியாவின் எழிலை, காற்று எனும் தலைப்பில் புலவர். மு.சேதுராமன் (ப.243) காட்டுகின்றார்.

தேன்பாயும் ரம்புத்தான் தித்திக்கும் மங்குஸ்தீன்தான்
வான்தோய் டொரியான் வளமரங்கள் - மீன்பாயப்
பொங்கும் அலைகடல்கள் போர்வேழம்போல் மலைகள்
எங்கள் மலாயா இது!

என்ற ஐ.உலகநாதனின் கவிதை இயற்கைப் புனைவுக்கும், உவமைக்கும், நல்ல சொல்லாடல்களுக்கும் சான்று. (ப.291)

## சொல்லாடல்கள்

இதே போன்று, சொல்லாடல்கள் நிறைந்த கவிதைகள் பல உண்டு, சொல் பின்வருநிலையணி போல,

முற்றுமெய் ஞானமுருகன் நடமாடும்
வெற்றிக்கால் அக்காலே வீரக்கால் - மற்றைக்கால்
வாய்க்கால் மரக்கால் வடிகால் அரையரைக்கால்
ஈக்கால் இடருங் காலே"

என்பது மறைமுடி வல்லத்தரசு கவிதை. (வெற்றிக்கால் ப.276) கால் என்ற சொல் பலவிடங்களில் மீண்டும் மீண்டும் வந்துள்ளது.

## நாநில வருணனை

சங்க இலக்கியங்களில் நானில வருணனை மிகுதி. இதனை அடியொற்றி, 'குறிஞ்சியிலே பெயரெடுத்த கோதை' எனும் கவிதையை முரசு. நெடுமாறன் படைத்துள்ளார். குறிஞ்சிக் கோதை, பாலைப்பாவை, முல்லை மங்கை, மருதச்செல்வி, நெய்தல் நங்கை என்று ஐவகை நிலங்களையும் பாடியுள்ள பாங்கு சிறப்புடையது.

ஆறுபாய மேனியிலே அழகுமணி பொலியும்
அருள் மருத அமுதளித்தேகைகள் பசிகளையும்
மீறியோடும் காளையினால் விளைந்திடுமோ ஊடல்
மேவுதுன்பம் பெருகுமுன்னே மலர்ந்திடுமே கூடல்

எனும் மருதப்பாடல், அத்திணையில் கரு, உரிப்பொருள்களையும் விளக்கக் காணலாம். (ப.293)

## நாட்டார் பாடல்கள்

நாட்டார் பாடல்கள் செவ்வியல் இலக்கியங்களின் அடிப்படையாகும். இவை மலேசியாவில் மிகுதி.

கங்கா ணின்னா கங்காணி கறுப்புச் சட்டைக் கங்காணி
சஞ்சியிலே கூட்டி வந்து சாகடிக்கும் கங்காணி
சீனிக்குக் காக்காய் ஓட்டிச் சீராக வாழவான்னு
சிரிக்கச் சிரிக்கப் பேசிச் சீரழிக்கும் கங்காணி
ஆவடியில் கெடமடக்கி அஞ்சடியில் நிக்கவச்சி
பொன்னாங்குச் சீமையிலே பெரட்டுக்களம் போட்டவனாம்
கருவாட்டைச் சுட்டுக்கினு கஞ்சித்தண்ணி குடிச்சிக்கினு
காசு பணம் சேக்கலான்னு கையடிச்சுக் கூட்டி வந்தான்

மலேசிய நாட்டில் கையாளப்பெறும் பேச்சுமொழிகள், சமுதாயநிலை இடம்பெறும் பாடல் இது. இத்தகைய பாடல்களைத் தமிழகத்திலும் காணலாம்.

## யாப்பு

செவ்வியல் இலக்கியங்களில் காணலாகும் யாப்பு வகைகள் மலேசியத்தமிழ் இலக்கியங்களில் காணலாம்.

## அம்மானை

யாப்பு வகைகளுள் ஒன்று அம்மானை. சிலப்பதிகாரத்தில் இதனைக் காணலாம். பக்தி இலக்கியங்களில் மிகுதி. இத்தகைய யாப்பில் தமிழுக்கோர் அம்மானை என வீரமான் பாடியுள்ளார்.

பாழும்தமிழ்ச் சாதி பட்டவெல்லாம் போதாவோ?
வாழும்மொழிக்கும் இன்னல் வந்ததுவோ அம்மானை

ஆழும் கயமையெலாம் தோற்கடிப்போம் அம்மானை!
சூரருக்குத் தோல்வியில்லை சொல்லிவைப்போம்
அம்மானை! (ப.307)

## யாப்பு இலக்கணம்

யாப்பு இலக்கணத்தைக் கூறும் பாடல், அசை என்றால் என்ன? அதன் வகைகள் எவை என்பதைச் சிரா.நெ.இசுமாயில் பாடுகிறார். (ப.320)

முற்றக் குறில் நெடிலும் மேவும் ஒலிக் குற்றிரண்டும்
பற்றி இணைந்திடினும் பற்றாமல் - ஒற்றடுத்தும்
ஈற்றில் தனித்தே இருந்திடினும் அத்தனையும்
ஆற்றும் நிரை நேர் அசை.

நிரையசை, நேரசை பற்றிய விளக்கத்தைத் *தொல்காப்பியம்* போலக் காணலாம்.

## சந்தங்கள்

'வாக்குத் தரவோணும்' எனும் கவிதை மலேசியத் தோட்டப்புறங்களில் பாடப்படும் வாய்மொழிக் கவிதையாகவும், சந்தக் கவிதையாகவும் அமைந்துள்ளதை இங்குச் சுட்டலாம். இத்தகைய கவிதைகள் மலேசியத் தமிழ் இலக்கியங்களில் அதிகம் உள.

## கையறுநிலைப் பாடல்கள்

தாம் விரும்பும் தலைவனோ, அரசனோ, மாண்டுவிட்டால் இரங்கிப்பாடும் இரங்கல் பாடல்கள், சங்க இலக்கியங்களில் உண்டு. மலேசியத் தமிழ்க்கவிதைகளிலும் அவை உண்டு.

தமிழவேள் கோ.சாரங்கபாணி மலேசியத்தமிழர் மேம்பாட்டுக்குப் பெரிதும் துணை நின்றவர். மொழி, இலக்கிய வளர்ச்சிக்குத் தம் பங்கினைச் சிறப்பாகச் செய்தவர். அவரது மறைவின் போது பல கையறுநிலைப்பாடல்கள் வெளிவந்துள்ளன.

நிலைபடத் தமிழர் வாழ்வில் நெறிபடப் பட்டுழன்றோன்
அலைபட அலைந்த காதை ஆழியும் படுமோ வென்றே
கலைபடச் சாய்ந்தால் நெஞ்சம் கலைப்படும் யார்பொறுப்பார்?
தலைபடத் தலைப்பட்டோர் யார்? தமிழ்மலைத்
தமிழவேளே?

கவிஞர் எல்லோன் எனப்படும் கதிரேசனின் கவிதை இது.

## வாழ்த்துப்பாடல்கள்

சங்க இலக்கியங்களில் காணலாகும் 'இயன்மொழி' 'வாயுறை' போன்ற கவிதைகளையும் காணலாம். 'மாமன்னர் வாழ்க' என வீ.கே.சுப்பிரமணியம் (ப.511) பாடியுள்ளார்.

...வாழ்க! எங்கள் மன்னவர் கொள்ளும்
வாழ்க! எங்கள் மாண்புசால் அரசி
வாழ்க! எங்கள் அமைச்சர் குழுவும்
வாழ்க! எங்கள் ம்லேசியநாடு
வாழ்க! என்றும் புகழொடு
சூழ்க, எந்நலம் துகளைப் பயின்றே

(957)இல் மன்னராட்சிக் காலத்தில் பாடப்பெற்ற கவிதை இது. இரங்கலும் வாழ்த்தும் எந்நாளும் எம்மொழியிலும் இடம்பெறுவது இயல்புதான்.

## குழந்தை இலக்கியம்

சிறுவர் இலக்கியம் எனும் வகையில் பலர் கவிதைகள் படைத்துள்ளனர். அவர்களுள் குறிப்பிடத்தக்கவர்களாக முரசு நெடுமாறன், சோமசன்மா, சி.வேலுசுவாமி பொன்முடி, கலியபெருமாள், தமிழ்ப்பாணன் மு.முனியாண்டி, கது.மு. இக்பால், இன்னும் பலர் உள்ளனர்.

ஒழுக்கநெறிமுறைகள், கூடிவாழ்தல், பணிந்து செல்லல் (தேவையானவற்றுக்கு) அறம் தவறாமை போன்ற செவ்வியல் பண்புகளை இக்கவிதைகள் காட்டுகின்றன.

ஒன்றே இறைவன் நம்புவோம்
உள்ளம் உருக வணங்குவோம்
நாட்டை ஆளும் மன்னரை
நாளும் மதித்துப் போற்றுவோம்

அரசியல் சட்டநெறிகளை அகத்தில் பதித்துக் கொள்ளுவோம்; சட்டமுறைப்படி ஆளுவோம்; தாயகம் காத்து வெல்லுவோம்; ஒழுக்கம் உயர்வைத் தந்திடும் உயிராய் அதனைப் பேணுவோம்; உலகில் நல்ல குடிகளாய் உண்மை போற்றி வாழுவோம்; என்ற முரசு. நெடுமாறனின் கவிதை 1987 இல் வெளிவந்திருப்பினும், இன்றளவும் சிறுவர் மனத்தில் ஆழப்பதியுமாறு கூற வேண்டிய கருத்துக்களை உள்ளடக்கியதுதான்.

## நிறைவுரை

மலேசியாவில் வாழும் தமிழர்கள் தமிழை முழுவதுமாக மறக்கவில்லை. தமிழில் படைப்பிலக்கியங்கள் வெளிவருகின்றன. பெரும்பான்மை இலக்கியங்கள் சமகாலச்சிக்கல்களை வெளிப்படுத்துவனவாகவே அமையினும் தமிழகத்தில் தோன்றிய செவ்வியல் இலக்கியக்கூறுகளையும், பண்புகளையும் உள்ளடக்கி வெளியிடுகின்றனர். தமிழ் இலக்கிய வளர்ச்சியின் வேகம் குறைவுதான் எனினும், இலக்கியப் படைப்புகள் வெளிவந்து கொண்டிருக்கின்றன என்பது ஆறுதலை அளிக்கிறது.

# சிங்கப்பூர்ச் சிறுகதைகள் வாயிலாகச் செவ்வியல் இலக்கியப் பண்புகளையும் விழுமியங்களையும் வலியுறுத்துதல்

**சி. சுப்புலெட்சுமி**
தலைவர் 2, தமிழ்மொழி
தாய்மொழிகள் துறை
பாடத்திட்ட வரைவு மற்றும்
மேம்பாட்டுப் பிரிவு
கல்வி அமைச்சு, சிங்கப்பூர்

**தமிழரசி சுப்பிரமணியம்**
முதன்மை ஆசிரியர்
தாய்மொழிகள் துறை
பாடத்திட்ட வரைவு மற்றும்
மேம்பாட்டுப் பிரிவு
உமறுப்புலவர் தமிழ்மொழி நிலையம்
கல்வி அமைச்சு, சிங்கப்பூர்

## முன்னுரை

சிங்கப்பூரில் தமிழ்மொழி இரண்டு முக்கிய நோக்கங்களுக்காகக் கற்பிக்கப்படுகிறது. அவை அடிப்படை மொழித்திறன்களில் மாணவர்களுக்குப் பயிற்சியளிப்பதும் பண்பாட்டுக் கூறுகளையும் பாரம்பரியக்கூறுகளையும் விளக்கி நாட்டுருவாக்கத்துக்குத் தேவையான பண்புநலன்களையும் விழுமியங்களையும் பெற்றிடச்செய்வதுமாகும். மாணவரை மையமாகக் கொண்ட விழுமியங்கள் சார்ந்த கல்வி சிங்கப்பூரில் வலியுறுத்தப்படுகிறது.

சீனம், மலாய், தமிழ் ஆகிய அவரவர் தாய்மொழிகள் வாயிலாக விழுமியங்களைப் போதித்தல் என்பது சிங்கப்பூர்க் கல்விமுறையில் இன்றியமையாத கூறாக இடம்பெறுகிறது. இதற்கு இலக்கியங்கள் பெருந்துணைபுரிகின்றன. தமிழ் இலக்கிய வகைகளைக் கேட்டும் படித்தும் பாராட்டுவதோடு பண்பாடு, விழுமியம், நடப்பியல் தொடர்பானவற்றைக் கண்டறிந்தும் கற்றும் பண்படுதல் வேண்டும். முருகுணர் வளர்ச்சியையும் கற்பனைத்திறன் வளர்ச்சியையும் மேம்படுத்திப் படைப்பாக்கத் திறன் பெற வேண்டும் என்னும் நோக்கங்களுக்காகச் சிங்கப்பூரில் இலக்கியம் கற்பிக்கப்படுகிறது. பாலர்பள்ளி முதல் பல்கலைக்கழகப் புகுமுக வகுப்புவரை மாணவர் வயதிற்கும் அனுபவ எல்லைக்கும் உட்பட்ட பாடல்கள், கதைகள், பாடப்பனுவல்கள், செய்யுள்கள், சிறுகதைகள், நாவல்கள் வாயிலாகச் செவ்வியல் இலக்கியப் பண்புகளும் விழுமியங்களும் படிப்படியாக மாணவர்கள் மனங்கொள்ளும் வகையில் கற்பிக்கப்படுகின்றன.

## பல்கலைக்கழகப் புகுமுக வகுப்பில் ‘இலக்கியச் சாரல்’

பல்கலைக்கழகப் புகுமுக வகுப்பில் தமிழில் அதிக ஆர்வமும் ஈடுபாடும் கொண்ட மாணவர்கள் இலக்கியத்தையும் ஒரு பாடமாகத் தெரிவு செய்து படிக்கலாம். 17–19 வயது நிரம்பிய

மாணவர்களுக்கு ஏற்ற கவிதைகள், சிறுகதைகள், நாடகங்கள், நாவல்கள் தெரிவு செய்யப்பட்டு 'இலக்கியச்சாரல்' என்னும் தொகுப்பு நூலாக மாணவர்களுக்கு வழங்கப்பட்டுள்ளது. தமிழக, மலேசிய எழுத்தாளர்களின் படைப்புகளோடு சிங்கப்பூர் எழுத்தாளர்களின் படைப்புகளும் இத்தொகுப்பில் இடம்பெற்றுள்ளன. சிங்கப்பூர் எழுத்தாளர்கள் எழுதியுள்ள சிறுகதைகள் வாயிலாகச் செவ்வியல் இலக்கியப் பண்புகளும் விழுமியங்களும் எவ்வாறு வலியுறுத்தப்படுகின்றன என்பன இக்கட்டுரையில் ஆராயப்படும். தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள சிறுகதைகள் பின்வருமாறு,

| எண் | சிறுகதையின் தலைப்பு | எழுதியவர் |
|---|---|---|
| 1 | இலட்சியங்களின் ஊனங்கள் | மா.இளங்கண்ணன் |
| 2 | ஓர் ஆன்மாவின் திரை அகற்றப்படுகிறது | நா. கோவிந்தசாமி |
| 3 | தமிழுக்கு அமுதென்று பேர் | கி. கனகலதா |

**இலட்சியங்களின் ஊனங்கள்**

'இலட்சியங்களின் ஊனங்கள்' என்னும் சிறுகதையை எழுதியவர் மா. இளங்கண்ணன் என்றழைக்கப்படும் மா. பால கிருஷ்ணன் ஆவார். இவர் 1967-ஆம் ஆண்டுமுதல் எழுத்துலகிற்கு அறிமுகமானவர். *வழி பிறந்தது, குங்குமக் கன்னத்தில், கோடுகள் ஓவியங்கள்* ஆகிய சிறுகதைத் தொகுப்புகளும் அலைகள், *நினைவுகளின் கோலங்கள், வைகறைப் பூக்கள்* முதலிய நாவல்களும் இவருக்குப் புகழ் சேர்த்தன. தென்கிழக்காசிய எழுத்து விருது (1982), சிங்கையின் கலாசாரப் பதக்கம் உள்ளிட்ட பல விருதுகளைப் பெற்றவர் இவர்.

**கதைச்சுருக்கமும் சிறுகதை உணர்த்தும் செவ்வியல் பண்புகளும் விழுமியங்களும்**

பிச்சைமுத்துக் கிழவரும் குவேக் கிழவியும் இந்தக் கதையின் முக்கியக் கதாபாத்திரங்கள். பிச்சைமுத்துக் கிழவர் இந்தியாவிலிருந்தும் குவேக் கிழவி சீனாவிலிருந்தும் சிங்கப்பூருக்குப் பிழைப்புத் தேடி வந்தவர்கள். பிச்சைமுத்து தாய்நாட்டின்மீது கொண்ட நாட்டுப்பற்றினால் நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் திரட்டிய போர்ப்படையில் சேர்ந்து போருக்குச் சென்றார். போரில் இடகாலை இழந்து சக்கர நாற்காலியில் தஞ்சம் புகும்நிலை அவருக்கு ஏற்படுகிறது. குவேக் கிழவியும் பிச்சைமுத்துக் கிழவரும் நல்ல நண்பர்களாகக் கதையில் உலா வருகின்றனர். இருவரும் என்றாவது அவரவர் தாயகம் திரும்பிவிட வேண்டும் என்ற கனவோடு வாழ்கின்றனர். வயது முதிர்ந்து கூன் விழுந்த நிலையிலும் விடாமுயற்சியோடு அட்டைப்பெட்டிகளைச் சேகரித்துச் சிறுகச் சிறுகப் பணம் சேமித்து வைக்கிறாள் குவேக் கிழவி. ஒரு சமயம் அவள்

கடுமையான காய்ச்சலினால் படுத்த படுக்கையாகிறாள். அவளை எப்படியாவது காப்பாற்றிவிட வேண்டும் என்பதற்காகப் பிச்சைமுத்து படாதபாடுபடுகிறார். ஆனால், அவர் முயற்சிகள் பலனற்றுப்போய் அவள் உயிரிழக்க நேரிடுகிறது. குவேக்கிழவி தான் சேமித்து வைத்த வாழ்நாள் செல்வம் பிச்சைமுத்துவிற்காவது பயன்படட்டும் என்ற உயரிய எண்ணத்தோடு அவரிடம் விட்டுச்செல்கிறாள். உற்ற தோழியை இழந்து துயருறும் பிச்சைமுத்து தம் தாயகத்திற்காவது திரும்பிவிடலாம் என்றெண்ணி எல்லா ஏற்பாடுகளையும் செய்கிறார். ஆனால் பணம் களவுபோகிறது. பிச்சைமுத்துவின் கனவும் கண்ணீரில் கரைகிறது. கண்களிலிருந்து வடிந்த இரத்தக் கண்ணீர் தரையில் சொட்டியது. சொட்டிய கண்ணீரைச் சுட்டு விரலால் கோடாக இழுத்தார். அது இந்தியாவாக மாறியது.

நட்பு, நாட்டுப்பற்று, வாழ்வியல் உண்மைகள், காலப்பகுப்பு, பொருத்தமான பாத்திரப்படைப்பு முதலிய செவ்வியல் இலக்கியப்பண்புகள் இக்கதையில் பிரதிபலிக்கின்றன. ஒருமித்த சிந்தனையோடு நட்புக்கு இலக்கணம் வகுக்கும் பாத்திரப்படைப்பு பிச்சைமுத்துக் கிழவரும் குவேக் கிழவியும் ஆவர். மரணப் படுக்கையில் கிடக்கும் குவேக் கிழவிக்காகப் பிச்சைமுத்து தவித்த தவிப்பும் பட்டபாடும் நட்பின் உன்னத வெளிப்பாடாகும். "நீங்க இந்தியாவுக்குப் போக வேண்டிய நேரம் வந்திடுச்சி" என்று கூறித் தான் சேமித்து வைத்திருந்த எல்லாவற்றையும் கிழவருக்காக விட்டுச் செல்வது குவேக்கின் பெருந்தன்மையைக் காட்டுவதோடு படிப்போரை நெகிழவும் செய்கிறது. இருவரும் தங்கள் தாய்நாட்டின்மீது கொண்டிருந்த பற்றைக் கதாசிரியர் மிகவும் அழகாக வெளிக்காட்டியுள்ளார். "நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் திரட்டிய போர்ப்படையில் சேர்ந்து போருக்குச் சென்றார்," என்ற வாசகம் பிச்சைமுத்துவின் நாட்டுப்பற்றை வெளிப்படுத்துவதோடு வரலாற்றுப் பின்னணியையும் உணர்த்துகிறது.

கதாசிரியர் சமுதாய அவலங்களை மிகவும் அழகாக இலக்கிய ரசனையோடு வெளிப்படுத்தியுள்ளார்.

> வானத்தில் பருந்து ஒன்று வட்டமிட்டுப் பறந்து சென்றது. நாலாவதுமாடியில் சன்னல் அருகே ஒருவர் நின்று கொண்டிருந்தது தெரிந்தது.... கிழவர் அவரைப்பார்த்ததும் அவர்தம் தலையை இழுத்துக்கொண்டார். ... மேலே பார்க்கவே அருவருப்பாகஇருந்தது."
>
> "இந்தஉலகத்தைப் பார்க்காமல் குனிந்துகொண்டே திரிந்த குவே ஒருவகையில் கொடுத்துவைத்தவள்தான்,"

போன்ற வரிகள் மேல்தட்டு, கீழ்த்தட்டு மக்களிடையே உள்ள வேறுபாட்டைத் துல்லியமாக வெளிப்படுத்துகின்றன. குவேக்கிழவியின்

தயவால் தாயகம் திரும்பிவிடலாம் என்ற கனவையும் தரைமட்டமாக்குகிறது, இப்பொல்லாத சமுதாயம். பாதுகாப்பற்றுக் கிடந்த குடிசையிலிருந்து இரக்கமற்ற கள்வர்கள் பணத்தைச் சூறையாடுவது சமூகத்திலிருக்கும் ஒருசிலரின் கீழ்த்தரமான, கேவலமான போக்கைக் காட்டுகிறது.

## ஓர் ஆன்மாவின் திரை அகற்றப்படுகிறது

அடுத்த சிங்கப்பூர்ச் சிறுகதை 'நா. கோ.' எனச் செல்லமாக அழைக்கப்படும் திரு. நா. கோவிந்தசாமி எழுதிய 'ஓர் ஆன்மாவின் திரை அகற்றப்படுகிறது' என்பதாகும். சிங்கப்பூரில் 1946-ஆம் வருடம் பிறந்தவர் நா. கோவிந்தசாமி. அறுபதுகளில் எழுத்துப்பணியைத் தொடங்கிய இவரது படைப்புகள் வானொலி, தொலைக்காட்சி, பத்திரிகைகள் அனைத்திலும் இடம்பிடித்தன. சிறுகதை, நாடகம், கவிதை, ஆய்வுகள், தமிழ்க் கணினி எனப் பலவற்றிலும் அழுத்தமான தடம் பதித்தவர். 1975-இல் உருவான சிங்கப்பூர்த் தமிழ் எழுத்தாளர் கழகத்தின் தொடக்ககால வளர்ச்சியில் முக்கியப் பங்காற்றினார். இவர் 'உள்ளொளியைத் தேடி' (சிறுகதை), *'வேள்வி'* (நாவல்), *'தேடி'* (கதைத் தொகுப்பு) ஆகிய நூல்களை வெளியிட்டுள்ளார். இவரது 'தேடி' சிறுகதை, சிங்கப்பூர்த் தேசியப் புத்தக மேம்பாட்டு மன்ற விருதைப் பெற்றதும் (1992), இவர் தாய்லாந்தில், 'தென்கிழக்காசிய எழுத்து விருது' (1994) பெற்றதும் குறிப்பிடத்தக்கவை. அமரர் நா. கோவிந்தசாமி, சிங்கப்பூர்த் தேசியக் கல்விக் கழகத்தில் விரிவுரையாளராகப் பணியாற்றியவர்.

## கதைச்சுருக்கமும் சிறுகதை உணர்த்தும் செவ்வியல் பண்புகளும் விழுமியங்களும்

சுமார் இருபது இருபத்தைந்து ஆண்டுகளாக எழுத்துலகில் தமக்கென்று பிரத்தியேகமான சிறப்பிடம் பிடித்துள்ளார் ஓர் எழுத்தாளர். தமிழ் இலக்கிய வளர்ச்சிக்குச் சேவையாற்றியிருக்கும் அவருக்குப் பாராட்டு விழா நடத்திக் கௌரவிக்க விரும்பி, அவரது ஒப்புதலைப் பெற்றுச் செல்ல வந்தவர்களிடம் யோசித்துப் பதில் சொல்வதாகக் கூறி அனுப்பிவிடுகிறார். காரணம், அவர் கடந்த இரண்டு மூன்று மாதங்களாகத் தம்மைப் பற்றிய சுய பரிசோதனையில் ஆழ்ந்திருந்தார். அத்தகைய பாராட்டிற்கும் கௌரவத்திற்கும் தாம் தகுதியானவர்தாமா? என்று அவரைச் சிந்திக்க வைத்தவள் மலர். 'உங்கள் எழுத்துக்கும் வாழ்க்கைக்கும் நிறைய முரண்கள் இருக்கின்றன. இரட்டை வாழ்க்கை வாழ்கிறீர்கள்' என்று அவள் சொன்ன வார்த்தைகள் அவர் காதுகளில் ஒலித்துக்கொண்டிருந்தன.

அவரது எழுத்துகளால் ஈர்க்கப்பட்டு இரசிகையாக அவருக்கு அறிமுகமானவள்தான் மலர். அந்த அறிமுகம் நட்பாக மலர்ந்தது. இடையில் அவளது திருமணத்திற்கு மனைவியோடு சென்று

வாழ்த்திவிட்டும் வந்தார். காலப்போக்கில் கணவனுடனான கருத்து வேறுபாட்டால் அவள் விவாகரத்துக்குக் காத்திருந்த சமயத்தில் எதிர்பாராதவிதமாகக் கணவனை இழந்தாள். கைக்குழந்தையுடன் தனித்துவிடப்பட்ட மலருக்கு ஆறுதலாக அமைந்தது எழுத்தாளருடனான உறவு. இதற்கிடையில் பதினெட்டு ஆண்டுகள் தன்னோடு வாழ்ந்த மனைவியை அவர் இழந்தார். தாயாரின் மறைவுக்குப்பின் தந்தையின் போக்கு பிடிக்காத அவரது மகனும் அவரை விட்டுப் பிரிந்துபோனான். தனிமையில் தள்ளப்பட்ட அவர், வெளியுலகம் அறியாவண்ணம் உண்மையான ஆசைகளுடன் கைக்குழந்தையோடு நின்ற மலரை நாடிச் சென்றுவந்தார். அப்படிச் சென்ற ஒரு தருணத்தில் அவள்,

> உங்களுக்கு உண்மையான ஒரு வாழ்க்கை வேண்டுமானால் என்னைத் தேடி வாருங்கள். அப்படித் தேடி வரும்போது நாலுபேர் அறிய என்னை மனைவியாக ஏற்றுக்கொள்ளும் துணிவோடு வாருங்கள். இல்லை, பொய்யை அடித்தளமாகக்கொண்டு நீங்கள் பெரிதாக உருவாக்கியிருக்கிறீர்களே, பிம்பம்! அந்தப் பிம்பம்தான் உங்களுக்கு வேண்டுமானால், இனி இங்கு வராதீர்கள்

என்று சொல்லிவிடுகிறாள்.

அப்போதுதான் அவர் இத்தனைக்காலம் தாம் உள்ளும் புறமும் வேறுபட்டுப் பொய்யான வாழ்க்கை வாழ்ந்ததுபோதும் என்னும் முடிவுக்கு வருகிறார். ‘என்னை மறந்து – என் நிஜத்தை மறந்து – என் பிம்பத்திற்காக வாழும் வாழ்க்கைதான் வெற்றி என்றால், அந்த வாழ்க்கை இனி எனக்கு வேண்டவே வேண்டாம்’ என அவர் தாம் இதுகாறும் எழுதிய எழுத்துக் குவியலுக்குத் தீ வைத்தபோது பொய்யான தம் பிம்பத்துக்குக் கொள்ளி வைத்துவிட்டதாக உணர்கிறார். ஏனெனில், அந்தத் தீச் சுடரில் அவரது ஆன்மா பரிசுத்தமாக்கப்படுவதை அவரால் உணர முடிந்தது.

‘இலட்சியங்களின் ஊனங்கள்’ சிறுகதையில் இருவேறு பாத்திரங்கள் வாயிலாக ஒருமித்த குணாதிசியங்களின் சித்திரிப்பைக் கண்டோம். ‘ஆன்மாவின் திரை அகற்றப்படுகிறது’ சிறுகதை ஒரே மாந்தரது முரண்பட்ட இருவேறு நிலைகளைக் காட்டியுள்ளது. இச்சிறுகதையில் இடம்பெற்றுள்ள கீழ்க்காணும் வரிகள் அம்மாந்தரது முரண்பட்ட பண்புநலன்களை அடையாளங்காட்டுகின்றன.

> ‘இளம் உள்ளங்களைக் கவரும் காந்த எழுத்து’ என்று என் கதைகளைப் புகழ்ந்தபோதெல்லாம் அந்தப் புகழ் போதையில் என்னை மறந்திருந்தேனே! இதுவா என் வெற்றி?’

'யார் யாருடனோ 'கம்பரமைஸ்' செய்து மற்றவர்களைச் சார்ந்து நின்றே உயர்ந்த நான் என்றுமே தனித்து நிற்க முடியாதவனா?'

'மற்றவர்களின் மதிப்பீட்டுக்காகவுந்தானே, நான் இவ்வளவு நாள் வாழ்ந்திருக்கிறேன்?'

'..., நான் எத்தனை எத்தனை முகங்களை அணிந்துகொண்டு இந்த உலகத்தோடு பழகினேன்...'

சிறுகதை முழுவதும் அந்தப் பாத்திரம் தன்னைத் தானே சுய பரிசீலனைச் செய்வதாகவும் முடிவில் அந்த ஆன்மா போலித்திரையை அகற்றிச் சுயமாக வெளிப்படுவதாகவும் அமைந்துள்ளது.

வாழ்வியல் உண்மைகள், மரபுடைமை என்னும் செவ்வியல் பண்புகள் இச்சிறுகதைவழி உணர்த்தப்பட்டுள்ளன. தம்மைச் சுய மதிப்பீடு செய்துகொள்வது, மற்றவர் மதிப்பீடுகளுக்கு அல்லாமல் தம் சுய மதிப்பீட்டிற்காக வாழ்வது, தம் எழுத்துக்கும் வாழ்க்கைக்கும் இடையிலான முரண்களை நீக்க முனைவது, தமது பிம்பமான போலித்தனத்தைக் களைந்து உண்மைத்தன்மையை வெளிக் கொணர்வது, வாழ்க்கையின் உண்மையான வெற்றி என்பது பேர், புகழ், பதவி, செல்வம் முதலியவற்றில் இல்லை, மாறாக, தன்னை அறிந்துகொள்ளும் தேடலில் உள்ளது என்பதை உணர்ந்துகொள்வது முதலியவை இச்சிறுகதை உணர்த்தும் வாழ்வியல் உண்மைகள் ஆகும். மேலும், கணவன் மனைவி என்னும் உரிமையோடு உறவாக வாழ்வதே உண்மையான வாழ்க்கை என்னும் மரபுநிலைப் பண்பும் குறிப்பாக வலியுறுத்தப்பட்டுள்ளது. ஆன்மாவின் திரை அகற்றப்படுவதற்கு அது முக்கியக் கராணமாகவும் அமைந்துள்ளது.

மனிதன் தனக்கும் மற்றவர்க்கும் நேர்மையாக இருப்பது, மரியாதையும் மதிப்பும் உண்மைக்கு வழங்கப்படுவது என்னும் பாத்திரத்தின் சிந்தனை மீட்சிவழி நேர்மை, உண்மை, மரியாதை, மதிப்பு ஆகிய விழுமியங்களும் உணர்த்தப்பட்டுள்ளன.

## தமிழுக்கு அமுதென்று பேர்

'தமிழுக்கு அமுதென்று பேர்' என்னும் சிறுகதையை எழுதியவர் குமாரி கி. கனகலதா. இலங்கையில் பிறந்து வளர்ந்து, சிங்கப்பூருக்குப் புலம்பெயர்ந்தவர். 'லதா' என்ற பெயரில் எழுதிவருகிறார். *கணையாழி, காலச்சுவடு, தமிழ்முரசு* உள்ளிட்ட பல பத்திரிகைகளில் இவரது கவிதைகள், சிறுகதைகள் வெளியாகியுள்ளன. *'நான் கொலை செய்யும் பெண்கள்'* என்ற சிறுகதைத் தொகுப்பு, 2008-ஆம் ஆண்டின் சிங்கப்பூர் இலக்கிய

விருது பெற்றது. *தமிழ்முரசு* நாளிதழின் ஆசிரியர் குழுவிலுள்ள இவர், இதுவரை *'தீவெளி'*, *'நான் கொலை செய்யும் பெண்கள்'*, *'பாம்புக்காட்டில் தாழை'* ஆகிய நூல்களை வெளியிட்டுள்ளார். இவர் *'தாத்தா பாட்டி எழுதிய கடிதங்கள்'* என்ற நூலின் தொகுப்பாசிரியருங்கூட.

## கதைச்சுருக்கமும் சிறுகதை உணர்த்தும் செவ்வியல் பண்புகளும் விழுமியங்களும்

இன்றைக்கு 200 ஆண்டுகளுக்கு முன்னோக்கிய காலக்கட்டம். வெளிநாட்டில் வாழும் ஒரு தமிழ்க் குடும்பம். கணவன் மனைவி இருவரும் நேருக்கு நேர் அல்ல, கணினி வழியாகத்தான் பேசிக் கொள்கிறார்கள். அவர்களது மகன் பெயர் தமிழன். அவன் பெயரில் மட்டும் தமிழனாக இல்லாமல் தமிழ் பேசவும், படிக்கவும், எழுதவும் தெரிந்த தமிழனாகத் திகழ வேண்டும் என்பது தாயின் விருப்பம். இல்லை பேரவா. மகனுக்குத் தமிழ் சொல்லித் தர இந்தியாவிற்கு அழைத்துப்போக விரும்புகிறாள் தாய். ஆனால், அங்கே வாழும் தமிழர்களுக்குத் தமிழ் பேசத் தெரியுமாம் எழுதத் தெரியாதாம். என்ன கொடுமை! 100 ஆண்டுகளுக்கு முன் காலமான தன் தாத்தாவின் படத்தைக் கணினித் திரையில் காண்கிறாள் அவள். தனக்குத் தமிழுணர்வை ஊட்டி வளர்த்த தாத்தா கூறிய பதிவு செய்யப்பட்ட வார்த்தைகளை அவள் மீண்டும் கேட்கிறாள்.

அவள் தாயார் சிறுமியாக இருந்தபோது, இந்தியாவில் தமிழ்ப்பாடம் சொல்லித்தரும் பள்ளி இருக்கும் பகுதிக்கு ஊரை மாற்றி அதிக விலைகொடுத்து வீடு வாங்கிக்கொண்டு சென்றவர் அவள் தாத்தா, மகளை அப்பள்ளிக்கு அழைத்துப் போன முதல் நாள் அப்பள்ளியில் தமிழுக்கு நேர்ந்தது ஓர் ஆபத்து. ஆம். பள்ளி நிர்வாகம் பள்ளி நேரத்தைக் குறைக்கும் சட்டத்தை அமல்படுத்த எண்ணி, தமிழ் கட்டாயப் பாடமில்லை என்பதால் தமிழ்ப்பாடத்தை நீக்கிவிடப்போவதாக அறிவிக்கிறது. ஆயினும், தாத்தா தம் மகளுக்கு மட்டுமன்றித் தம் பேத்திக்கும் தமிழுணர்வை ஊட்டி வளர்த்திருந்தார்.

தாத்தா ஊட்டிய தமிழுணர்வு ஆழ்மனத்தில் வேரூன்றி விட்டதால் அத்தாய் தன் மகனுக்குத் 'தமிழன்' எனப் பெயர் சூட்டி, அவனுக்குத் தமிழ் சொல்லித்தரும் முயற்சியில் தீவிரமாக இறங்குகிறாள். தமிழில் எழுதத் தெரியாத நிலை ஏற்பட்டதால், தமிழ் வரிவடிவத்தை உயிர்ப்பிக்க நினைக்கிறாள் அதற்குக் கணினி வாயிலாக ஜப்பானில் வாழும் ஜப்பானிய மொழி ஆசிரியரும் எழுத்தோவியருமான 'ஹசி' என்பவரைத் தொடர்புகொள்கிறாள். அவர்மூலம் தமிழ் வரிவடிவத்தை மீட்டெடுத்துத் தானும் தன் மகனும் தமிழ் பேசுவதோடு மட்டுமல்லாமல் எழுதவும் படிக்கவும் வேண்டும் என்பதற்காக விடாமுயற்சியில் ஈடுபடுகிறாள்.

**இச்சிறுகதை உணர்த்தும் செவ்வியல் பண்புகளும் விழுமியங்களும்**

'இலட்சியங்களின் ஊனங்கள்' சிறுகதையின் காலப்பகுப்புப் பின்னோக்கிச் சென்று இரண்டாம் உலகப்போர் முடிந்த வரலாற்றுப் பின்னணியில் நிகழ்ந்ததாகச் சித்திரிக்கப்பட்டிருந்தது. 'தமிழுக்கு அமுதென்று பேர்' சிறுகதை முன்னோக்கிச் சென்று 2200-ஆம், 2100-ஆம் ஆண்டுகளில் தமிழ்மொழியின் நிலை எப்படி இருக்கும் என்பதைக் கற்பனை செய்து பார்த்ததன் விளைவாக இக்கதை எழுதப்பட்டுள்ளது. காலப்பகுப்பு கற்பனையே என்றாலும் தமிழ் அமுதமாக, வாழும் மொழியாக நிலைத்திருக்கத் தமிழர்களுக்கு விழிப்புணர்வை ஏற்படுத்தக்கூடியதாக உள்ளது.

> "அங்க, முந்நூறு பேருக்கு மேல வாழறாங்க, அவங்க எல்லாருமே தமிழ் பேசறாங்க. இந்த ஒரு இடத்திலதான் தமிழ் தெரிஞ்சவங்க இவ்வளவு கூட்டமா இருக்கிறாங்க. ஆனா, அவங்களுக்குக்கூடத் தமிழ் எழுதத் தெரியலயேங்கிறத என்னால தாங்க முடியல..."
>
> "என்னோட தமிழன், உண்மையாவே தமிழனா இருக்கணும். அவன் தமிழ் தெரிஞ்சவனா இருக்கணும். அவன் இன்னும் பல பேருக்குத் தமிழ் சொல்லிக் கொடுக்கணும்."
>
> "தமிழ் வகுப்புகளை நிறுத்திவிடலாமென்று குழு முடிவு செய்திருக்கிறது. தமிழ் கட்டாயப் பாடமில்லை என்பதால் இதில் பிரச்சினை ஏதும் வராது..."
>
> "என் தமிழ் எழுத்துகளின் வடிவப் பிரதிகள் என்னிடம் இருக்கின்றன. என்னால் அவற்றை ஓரளவு வாசிக்க முடியும். நீங்கள் அவற்றைப் பழகிக்கொண்டு, எனக்கும் என் மகனுக்கும் அவற்றை எழுதச் சொல்லித் தரவேண்டும்."

இச்சிறுகதையில் இடம்பெற்றுள்ள மேற்காணும் முக்கிய வரிகள், தமிழர்களைத் தட்டி எழுப்பக் கூடியவை. தாய்மொழி ஓர் இனத்தின் முகவரி. அதை அடுத்தடுத்த தலைமுறைகளுக்கு வழிவழியாகக் கொண்டு சேர்க்க வேண்டியது முக்கியம். மாற்றம் ஒன்றே மாறாதது. ஆயினும் மாற்றவோ மறுக்கவோ கூடாதவை மொழியும் பண்பாடும். அவை தமிழ் மரபின் அடையாளம். அவை இரண்டையும் கட்டிக்காக்க வேண்டியது ஒவ்வொரு தமிழனின் கடமை என்பது குறிப்பாகச் சுட்டப்பட்டுள்ளது. இது மரபுடைமை என்னும் செவ்வியல் பண்புக்கு நல்ல எடுத்துக்காட்டு. வளமான மொழியை அறியாமையாலும் அக்கறையின்மையாலும் இழப்பதா? அந்நியர்வழி சொந்த மொழியைக் கற்கும் அவலம் வருங்காலத்தில் நேர்ந்துவிடக் கூடாது என்பதற்கான எச்சரிக்கையும் விடுக்கப்பட்டுள்ளது.

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

தரமணி, சென்னை - 600 113.

| அண்மை வெளியீடுகள் | | ரூ. பை. |
|---|---|---|
| 1. | சிலப்பதிகார இலக்கியக் கட்டமைப்பு | 160.00 |
| 2. | பழந்தமிழரின் பழக்க வழக்கங்கள் | 55.00 |
| 3. | பேரறிஞர் அண்ணாவின் சமூகப் பொருளாதாரச் சிந்தனைகள் | 75.00 |
| 4. | தமிழ்ச் செவ்வியல் நூல்களில் அறம், அறிவியல், சமூகம் | 70.00 |
| 5. | கிறித்தவக் காப்பியங்கள் | 225.00 |
| 6. | தமிழ் நாளிதழ்களின் மொழிநடை | 70.00 |
| 7. | சுயமரியாதை இயக்க வீராங்கனைகள் அன்றும் இன்றும் | 50.00 |
| 8. | குலோத்துங்கனின் கவிதை வளம் | 60.00 |
| 9. | தமிழ்த்தூது (கட்டுரைக் கொத்து) | 40.00 |
| 10. | தனிநாயக அடிகளாரின் ஆய்வுகள் | 50.00 |
| 11. | தனிநாயக அடிகளார் | 120.00 |
| 12. | வளர்ச்சிப் பாதையில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் | 200.00 |
| 13. | சங்கப் பெண்பாற் புலவர்களின் மொழிநடை | 70.00 |
| 14. | ஆதிசைவம் | 70.00 |
| 15. | பெ.நா. அப்புசுவாமியின் அறிவியல் கட்டுரைகள் தொகுதி - 3 | 235.00 |

ISBN : 978-81-925359-6-8

9 788192 535968

வெ.எண் : 758

புலம்பெயர்ந்தோர் படைப்புகளில் செவ்வியல் இலக்கியங்களின் தாக்கம்

**விலை : ₹ 100.00**